ஸாகம் - அவர்கள் ஒன்றுசேர்ந்து,
தவ ஆகேதனம் ச - தங்கள்வாசஸ்தலமாகிய வைகுண்டத்தையும்
யயு: - அடைந்தனர்.

ते मुग्धानिलशालिदुग्धजलधेस्तीरं गताः सङ्गता
यावत्त्वत्पदचिन्तनैकमनसस्तावत्स पाथोजभूः ।
त्वद्वाचं हृदये निशम्य सकलानानन्दयन्नूचिवा-
नाख्यातः परमात्मना स्वयमहं वाक्यं तदाकर्ण्यताम् ॥ ४॥

தே முக்தாநிலஶாலி துக்தஜலதேஸ் தீரம் கதா: ஸங்கதா:
யாவத் த்வத்பத சிந்தனைக மனஸஸ் தாவத்ஸ பாதோஜ பூ: ।
த்வத்வாசம் ஹ்ருதயே நிஶம்ய ஸகலான் ஆநந்தயன்னூசிவா -
ஞக்க்யாத: பரமாத்மனு ஸ்வயமஹம் வாக்யம் ததாகர்ண்யதாம் ॥ 4 ॥

தே முக்தா நிலஶாலி துக்த ஜலதே: தீரம் - அவர்கள் மந்தமாருதம் வீசுவதால் மனோஹரமான பாற்கடற்கரையை
கதா: ஸங்கதா: யாவத் - அடைந்து ஒன்றுசேர்ந்து எப்பொழுது
த்வத் பத சிந்தனைக மனஸ: - தங்கள் திருவடிகளை தியானிப்பதிலேயே நிலைபெற்ற மனத்தையுடையவர்களாக ஆனார்களோ,
தாவத் ஸ: பாதோஜபூ: - அப்போது அந்தப் பிரம்மதேவர்
த்வத் வாசம் ஹ்ருதயே நிஶம்ய - தங்கள் திருவாக்கை உள்ளத்தில் உணர்ந்து
ஸகலான் ஆநந்தயன் - எல்லோரையும் மகிழச்செய்பவராய்
''அஹம் பரமாத்மநா ஸ்வயம்'' - ''நான் பரமாத்மாவினால் நேரில்
ஆக்யாத: - இவ்விதம் உரைக்கப்பட்டேன்''
தத்வாக்யம் ஆகர்ண்யதாம் - அத்திருவாக்கு கேட்கப்படட்டும்
ஊசிவான் - என்று சொன்னார்.

जाने दीनदशामहं दिविषदां भूमेश्च भीमैर्नृपै-
स्तत्क्षेपाय भवामि यादवकुले सोऽहं समग्रात्मना ।
देवा वृष्णिकुले भवन्तु कलया देवाङ्गनाश्चावनौ
मत्सेवार्थमिति त्वदीयवचनं पाथोजभूरूचिवान् ॥ ५ ॥

ஜானே தீன தஶாமஹம் திவிஷதாம் பூமேஶ்ச பீமைர் ந்ருபைஸ் -
தத்க்ஷேபாய பவாமி யாதவகுலே ஸோऽஹம் ஸமக்ராத்மனு ।
தேவா வ்ருஷ்ணிகுலே பவந்து கலயா தேவாங்கனுஶ்சாவநௌ
மத்ஸேவார்த்தமிதி த்வதீய வசனம் பாதோஜபூரூசிவான் ॥ 5 ॥

அஹம்திவிஷதாம்பூமே:ச - ''நான் தேவர்களுக்கும் பூமிக்கும்
பீமை: ந்ருபை: - கொடிய அரசர்களாலுண்டான
தீனதஶாம் ஜானே - கஷ்டத்தையறிவேன்
ஸ: அஹம் தத்க்ஷேபாய- இதையறிந்த நான் அதைப் போக்குவதற்காக
ஸமக்ராத்மநா - பூர்ணகலையுடன்
யாதவகுலே பவாமி - யாதவகுலத்தில் அவதரிக்கின்றேன்.
தேவா: கலயா - தேவர்கள் தமது அம்சத்துடன்
வ்ருஷ்ணி குலே பவந்து- விருஷ்ணிவம்சத்தில் பிறக்கட்டும்.
தேவாங்கனா: ச மத்ஸேவார்தம் } - தேவஸ்திரீகளும் என்னை சேவிப்பதற்காக
அவனௌ பவந்து - பூமியில் ஜனிக்கட்டும்''
இதி த்வதீய வசனம் - என்ற தங்கள் திருவாக்கை
பாதோஜபூ: ஊசிவான் - பிரம்மதேவர் கூறினார்.

श्रुत्वा कर्णरसायनं तव वचः सर्वेषु निर्वापित-
स्वान्तेष्वीश गतेषु तावककृपापीयूषतृप्तात्मसु ।
विख्याते मथुरापुरे किल भवत्सान्निध्यपुण्योत्तरे
धन्यां देवकनन्दिनामुदवहद्राजा स शूरात्मजः ॥ ६ ॥

ஶ்ருத்வா கர்ணரஸாயனம் தவ வச: ஸர்வேஷு நிர்வாபித -
ஸ்வாந்தேஷ்வீஶ கதேஷு தாவக க்ருபா பீயூஷ த்ருப்தாத்மஸு ।
விக்யாதே மதுராபுரே கில பவத் ஸாந்நித்ய புண்யோத்தரே
தன்யாம் தேவக நந்தனாமுதவஹத் ராஜா ஸ ஶூராத்மஜ: ॥ 6 ॥

ஈஶ கர்ண ரஸாயனம் - ஈசா! காதிற்கின்பமான
தவ வச: ஶ்ருத்வா ஸர்வேஷு } - தங்கள் திருவாக்கைக்கேட்டு எல்லோரும்
தாவக க்ருபா பீயூஷத்ருப்தாத்மஸு } - தங்களுடைய கருணாமிருதத்தால் திருப்தி அடைந்த மனத்தையுடையவர்களாய்
நிர்வாபிதஸ்வாந்தேஷு கதேஷு } - மனக்கவலை நீங்கியவர்களாய் சென்றபிறகு
பவத் ஸாந்நித்ய புண்யோத்தரே } - தங்கள் ஸான்னித்தியத்தால் மிகப் புனிதமானதும்
விக்யாதே மதுராபுரே ராஜா } - பிரசித்திபெற்றதுமான மதுராபுரியில் அரசனான
ஸ: ஶூராத்மஜ: - சூரசேனன் புதல்வரான அந்த வசுதேவர்
தன்யாம் - மஹாபாக்கியவதியான
தேவகநந்தனாம் - தேவகனின் புத்திரியான தேவகியை
உதவஹத் கில - விவாஹஞ் செய்துகொண்டாரல்லவா.

उद्वाहावसितौ तदीयसहजः कंसोऽथ सम्मानय-
न्नेतौ सूततया गतः पथि रथे व्योमोत्थया त्वद्गिरा ।
अस्यास्त्वामतिदुष्टमष्टमसुतो हन्तेति हन्तेरितः
सन्त्रासात्स तु हन्तुमन्तिकगता तन्वीं कृपाणीमधात् ॥ ७ ॥

உத்வாஹாவஸிதௌ ததீய ஸஹஜ: கம்ஸோऽத ஸம்மானயந் -
னேதௌ ஸூததயா கத: பதி ரதே வ்யோமோத்தயாத்வத்கிரா ।
அஸ்யாஸ்த்வா மதிதுஷ்டமஷ்டம ஸுதோ ஹந்தேதி ஹந்தேரித
ஸந்த்ராஸாத்ஸ து ஹந்துமந்திக கதாம் தன்வீம் க்ருபாணீமதாத் ॥ 7 ॥

| | |
|---|---|
| அத உத்வாஹாவஸிதௌ - | பின்னர் விவாஹம் முடிந்தபொழுது - |
| ததீய ஸஹஜ: கம்ஸ: - | அந்த தேவகியின் உடன்பிறந்தவனான கம்ஸன் |
| ஏதௌ ஸம்மானயன் - | தேவகீ வசுதேவர்களை வெகுமானிப்பவனாக |
| ஸூததயா ரதே - | தேரோட்டியாகி தேரில் இருந்து கொண்டு |
| பதி கத: - | வழியில் சென்றபொழுது, |
| "அஸ்யா: அஷ்டமஸுத: - | "இவளுடைய எட்டாவது பிள்ளை |
| அதிதுஷ்டம் த்வாம் ஹந்தா இதி - | மிக துஷ்டனான உன்னை கொல்லப் போகிறான்" என்று |
| யோ கோத்தயா த்வத்கிரா - | ஆகாசத்தில் கிளம்பிய தங்கள் திருவாக்கினால் |
| ஈரித: து ஸ: - | சொல்லப்பட்ட உடனே அந்தக்கம்ஸன், |
| ஸந்த்ராஸாத் - | மரணபயத்தால் |
| அந்திககதாம் தன்வீம் ஹந்தும் - | பக்கத்திலிருக்கும் தேவகியை கொல்ல |
| க்ருபாணீம் அதாத் ஹந்த - | வாளையெடுத்தான்; கஷ்டம்! |

गृह्णानश्चिकुरेषु तां खलमतिः शौरेश्चिरं सान्त्वनै-
र्नो मुञ्चन्पुनरात्मजार्पणगिरा प्रीतोऽथ यातो गृहान् ।
आद्यं त्वत्सहजं तथार्पितमपि स्नेहेन नाहन्नसौ
दुष्टानामपि देव पुष्टकरुणा दृष्टा हि धीरेकदा ॥ ८ ॥

க்ருஹ்ணனஶ்சிகுரேஷு தாம் கலமதி: ஶௌரேஶ்சிரம் ஸாந்த்வனைர் -
நோ முஞ்சன் புனராத்மஜார்ப்பண கிரா ப்ரீதோऽத யாதோ க்ருஹான் ।
ஆத்யம் த்வத் ஸஹஜம் ததாऽர்ப்பிதமபி ஸ்நேஹேந நாஹன்னஸௌ
துஷ்டாநாமபி தேவ புஷ்டகருணா த்ருஷ்டா ஹி தீரேகதா ॥ 8 ॥

| | |
|---|---|
| கலமதி: ஸ: தாம் - | துஷ்டபுத்தியுடைய அந்தக் கம்ஸன் அவள் |
| சிகுரேஷு க்ருஹ்ணாந: - | தலைமயிரை (ரில்) பிடித்துக்கொண்டு |
| ஶௌரே: ஸாந்த்வநை: - | வஸுதேவருடைய சமாதான சொற்களால் |
| சிரம் நோ முஞ்ஜன் புன: - | வெகுநேரம் விடாதிருந்தபொழுது மீண்டும் |

ஆத்ம ஜார்பணா கிரா - பிள்ளைகளை அர்ப்பணம் செய்து விடுவதாய் வாக்களித்ததால்
ப்ரீத: க்ருஹான் யாத: - திருப்தியடைந்து வீட்டிற்குச் சென்றான்.
அத - அதன்பிறகு
ததா அர்பிதம் அபி - முன்சொன்ன விதம் கொடுக்கப்பட்டும்
ஆத்யம் த்வத்ஸஹஜம் - தங்களுடைய முதல் சகோதரனை
ஸ்நேஹேன ந அஹன் - இரக்கத்தால் கொல்லவில்லை.
தேவ துஷ்டானாம் தீ: அபி - தேவனே! துஷ்டர்களுடைய புத்திகூட
ஏகதா புஷ்டகருணா - ஏதோ ஒரு வேளை கருணை நிறைந்ததாக
த்ருஷ்டா ஹி - காணப்படுகிறதல்லவா.

तावत्त्वन्मनसैव नारदमुनिः प्रोचे स भोजेश्वरं
यूयं नन्वसुराः सुराश्च यदवो जानासि किं न प्रभो ।
मायावी स हरिर्भवद्वधकृते भावी सुरप्रार्थना-
दित्याकर्ण्य यदूनदूधुनदसौ शौरेश्च सूनूनहन् ॥ ९ ॥

தாவத்த்வன்மனஸைவ நாரதமுனி: ப்ரோசே ஸ போஜேஶ்வரம்
யூயம் நன்வஸுரா: ஸுராஶ்ச யதவோ ஜானஸி கிம் ந ப்ரபோ ।
மாயாவீ ஸ ஹரிர்பவத் வதக்ருதே பாவீ ஸுரப்ரார்த்தனா -
தித்யாகர்ண்ய யதூனதூதுனதஸௌ ஶௌரேஶ்ச ஸூனூனஹன் ॥ 9 ॥

தாவத் ஸ: நாரதமுனி - அப்பொழுது அந்த நாரத முனிவர்
த்வன் மனஸா ஏவ - தங்கள் அபிப்பிராயப்படியே
போஜேஶ்வரம் ப்ரோசே - கம்ஸனிடம் (பின்வருமாறு) சொன்னார்:
"ப்ரபோ யூயம் அஸுரா: நநு - ஓ! அரசே! நீங்கள் அசுரர்களல்லவா?
யதவ: ச ஸுரா: - யாதவர்களோ தேவர்கள்
கிம் ந ஜானாஸி - என்பதை நீர் அறியீரோ?
மாயா வீ ஸ: ஹரி: - மாயாவியான அந்த விஷ்ணு
ஸுர ப்ரார்தனாத் - தேவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கி
பவத் வதக்ருதே பாவீ" - தங்களைக் கொல்லுவதற்காக அவதரிக்கப் போகிறார்
இதி ஆகர்ண்ய அஸௌ- - இதைக்கேட்டு அந்தக் கம்ஸன்
ஶௌரே: ஸூநூந் அஹன் - வசுதேவருடைய பிள்ளைகளைக் கொன்றான்.
யதூன் அதூதுநத் - யாதவர்களையும் அவர்களுடைய இருப்பிடங்களிலிருந்து விரட்டினான்.

प्राप्ते सप्तमगर्भतामहिपतौ त्वत्प्रेरणान्मायया
नीते माधव रोहिणीं त्वमपि भोः सच्चित्सुखैकात्मकः ।
देवक्या जठरं विविशिथ विभो संस्तूयमानस्सुरैः
स त्वं कृष्ण विधूय रोगपटलीं भक्तिं परां देहि मे ॥१०॥

ப்ராப்தே ஸப்தம கர்ப்பதா மஹிபதௌ த்வத் ப்ரேரணான்மாயயா
நீதே மாதவ ரோஹிணீம் த்வமபி போ: ஸச்சித்ஸுகைகாத்மக: ।
தேவக்யா ஜடரம் விவேஶித விபோ ஸம்ஸ்தூயமான: ஸுரை:
ஸ த்வம் க்ருஷ்ண விதூய ரோகபடலீம் பக்திம் பராம் தேஹி மே ॥ 10 ॥

| | |
|---|---|
| போ மாதவ அஹிபதௌ | - ஹே லக்ஷ்மீபதே! நாகராஜனான ஆதிசேஷன் |
| ஸப்தம கர்பதாம் ப்ராப்தே | - ஏழாவது கர்ப்பமாயிருக்குந் தன்மையை அடைந்து |
| த்வத் ப்ரேரணாத் மாயயா | - தங்களுடைய ஏவலினால் யோகமாயையால் |
| ரோஹிணீம் நீதே | - ரோகிணியிடம் கொண்டுபோகப்பட்ட பொழுது |
| ஸச்சித்ஸுகைகாத்மக: த்வம் அபி | - ஸச்சிதானந்தரூபியான தாங்களும் |
| தேவக்யா: ஜடரம் விவேஶித | - தேவகியின் வயிற்றில் பிரவேசித்தீர்கள். |
| விபோ கிருஷ்ண | - எங்கும் நிறைந்திருக்கும் கிருஷ்ணா! |
| ஸுரை: ஸம்ஸ்தூயமான: | - தேவர்களால் துதிக்கப்பட்டவரும் |
| ஸ: த்வம் | - தேவகியின் கர்ப்பத்தில் வசித்தவருமான தாங்கள் |
| மே ரோக படலீம் விதூய | - என் வியாதிஸமூஹத்தை நாசஞ்செய்து |
| பராம் பக்திம் தேஹி | - சிறந்த பக்தியைத் தந்தருளவேண்டும். |

இதி ஸ்ரீமந் நாராயணீயே ஸ்ரீக்ருஷ்ணாவதார ப்ரஸங்க வர்ணனம் நாம ஸப்த த்ரிம்ஶம் தஶகம் ஸமாப்தம்.

[ஆதித ஸ்லோக: 385] [தஶம ஸ்கந்தே ஶ்லோகா: 10]

# தஶகம் - 38

## ஸ்ரீ க்ருஷ்ண ஜனனம்

आनन्दरूप भगवन्नयि तेऽवतारे
प्राप्ते प्रदीप्तभवदङ्ग निरीयमाणैः ।
कान्तिव्रजैरिव घनाघनमण्डलैर्द्या-
मावृण्वती विरुरुचे किल वर्षवेला ॥१॥

ஆனந்த ரூப பகவன்னயி தே஽வதாரே
ப்ராப்தே ப்ரதீப்த பவதங்க நிரீயமாணை:
காந்திவ்ரஜைரிவ கனகன மண்டலைர்த்யா -
மாவ்ருண்வதீ விருருசே கில வர்ஷவேலா ॥ 1 ॥

| | | |
|---|---|---|
| ஆனந்தரூப அயி பகவன் | - | ஆனந்தரூபியாகிய பகவானே! |
| தே அவதாரே ப்ராப்தே | - | தங்களுடைய திருவவதாரம் நெருங்கிய பொழுது, |
| ப்ரதீப்த பவதங்க நிரீயமாணை: | - | பிரகாசிக்கின்ற தங்களுடைய திருமேனியிலிருந்து வெளிக்கிளம்பிய |
| காந்தி வ்ரஜை: இவ | - | கிரணபடலங்கள் போலிருக்கின்ற |
| கநாகந மண்டலை: | - | பெரிய மேகக்கூட்டங்களால் |
| த்யாம் ஆவ்ருண்வதீ | - | வானவெளியை மறைத்துக்கொண்டு |
| வர்ஷ வேலா விருருசே கில | - | மழைக்காலம் விளங்கிற்றல்லவா. |

आशासु शीतलतरासु पयोदतोयै-
राशासिताप्तिविवशेषु च सज्जनेषु ।
नैशाकरोदयविधौ निशि मध्यमायां
क्लेशापहस्त्रिजगतां त्वमिहाऽविरासीः ॥२॥

ஆஶாஸு ஶீதல தராஸு பயோத தோயை -
ராஶாஸிதாப்தி விவஶேஷு ச ஸஜ்ஜனேஷு ।
நைஶாகரோதயவிதௌ நிஶி மத்யமாயாம்
க்லேஶாபஹஸ்த்ரிஜகதாம் த்வமிஹாவிராஸீ: ॥ 2 ॥

| | | |
|---|---|---|
| பயோத தோயை: | - | மழைகாலத்தில் |
| ஆஶாஸு | - | எல்லா திக்குகளும் |
| ஶீதலதராஸு ஸஜ்ஜனேஷு | - | நன்கு குளிர்ச்சியடைந்து, நல்லோர்கள் |
| ஆஶாஸிதாப்தி விவஶேஷு | - | தாங்கள் விரும்பிய காரியம் கைகூடியதால் ஆனந்தபரவசர்களானபொழுது |

மத்ய மாயாம் நிஶி - நடு இரவில்
நைஶாகரோதயவிதௌ - சந்திரோதயவேளையில்
த்ரி ஜகதாம் க்லேஶாபஹ: - மூவுலகங்களின்வருத்தத்தையும்போக்கடிக்கின்ற
த்வம் இஹ ஆவிராஸீ: - தாங்கள் இவ்வுலகில் திருவவதாரஞ் செய்தீர்களல்லவா.

बाल्यस्पृशाऽपि वपुषा दधुषा विभूती-
रुद्यत्किरीटकटकाङ्गदहारभासा ।
शङ्खारिवारिजगदापरिभासितेन
मेघासितेन परिलेसिथ सूतिगेहे ॥ ३ ॥

பால்யஸ்ப்ருஶாऽபி வபுஷா தது⁴ஷா விபூ⁴தீ -
ருத்யத் கிரீட கடகாங்கத ஹாரபாஸா ।
ஶங்காரி வாரிஜகதா பரிபாஸிதேன
மேகாஸிதேன பரிலேஸித ஸூதி கேஹே ॥ 3 ॥

பால்யஸ்ப்ருஸா அபி - பாலபாவத்தை அடைந்திருந்தாலுங்கூட
விபூதி: ததுஷா - ஐசுவரியங்களைத் தரிக்கின்றதும்,
உத்யத் கிரீட கடகாங்கத ஹார பாஸா - ஜ்வலிக்கின்ற கிரீடம், கைவளைகள், தோள்வளைகள், முத்துமாலை இவைகளுடைய காந்தியை உடையதும்
ஶங்காரி வாரி ஜகதா பரிபாஸி தேன - சங்கம், சக்கிரம்; பத்மம், கதை இவைகளால் மிகவும் சோபிக்கின்றதும்,
மேகாஸிதேன வபுஷா - மேகம்போல் நீலவர்ணமானதுமான திருமேனியுடன்
ஸூதிகேஹே பரிலேஸித - பிரசவ அறையில் விளங்கினீரல்லவா.

वक्षःस्थलीसुखनिलीनविलासिलक्ष्मी-
मन्दाक्षलक्षितकटाक्षविमोक्षभेदैः ।
तन्मन्दिरस्य खलकंसकृतामलक्ष्मी-
मुन्मार्जयन्निव विरेजिथ वासुदेव ॥ ४ ॥

வக்ஷ: ஸ்த்தலீஸுகநிலீன விலாஸி லக்ஷ்மீ -
மந்தாக்ஷ லக்ஷித கடாக்ஷ விமோக்ஷ பேதை: ।
தன்மந்திரஸ்ய கல கம்ஸ க்ருதா மலக்ஷ்மீ -
முன் மார்ஜயன்னிவ விரேஜித வாஸுதேவ ॥ 4 ॥

| | | |
|---|---|---|
| வாஸுதேவ | - | ஹே வாஸுதேவ! |
| வக்ஷ: ஸ்தலீ ஸுக நிலீன விலாஸி லக்ஷ்மீ மந்தாக்ஷ லக்ஷித கடாக்ஷ விமோக்ஷ பேதை: | } | மார்பில் சுகமாகக் குடிகொண்டிருக்கும், அழகுடைய லக்ஷ்மீதேவியின் வெட்கங்கலந்த கடைக்கண் பார்வையால் |
| தன்மந்திரஸ்ய | - | அந்தப் பிரசவ அறையின் |
| கலம்ஸ க்ருதாம் | - | துஷ்டனான கம்ஸனால் உண்டுபண்ணப் பட்ட |
| அலக்ஷ்மீம் | - | அலக்ஷ்மியை (சோபையின்மையை) |
| உன்மார்ஜயன் இவ | - | நாசம் பண்ணுகிறவர்போல |
| விரேஜித | - | விளங்கினீரல்லவா? |

शौरिस्तु धीरमुनिमण्डलचेतसोऽपि
दूरस्थितं वपुरुदीक्ष्य निजेक्षणाभ्याम् ।
आनन्दबाष्पपुळकोद्गमगद्गदार्द्र-
स्तुष्टाव दृष्टिमकरन्दरसं भवन्तम् ॥ ५ ॥

ஶௌரிஸ்து தீர முனி மண்டல சேதஸோऽபி
தூரஸ்த்திதம் வபுருதீக்ஷ்ய நிஜேக்ஷணாப்யாம் ।
ஆனந்தபாஷ்ப புலகோத்கம கத்கதார்த்ரஸ் -
துஷ்டாவ த்ருஷ்டி மகரந்தரஸம் பவந்தம் ॥ 5 ॥

| | | |
|---|---|---|
| ஶௌரி: து | - | வசுதேவரோ என்றால் |
| தீர முனி மண்டல சேதஸ: அபி தூரஸ்திதம் வபு: | } - | ஞானிகளான முனிகணங்களின் புத்திக்குங் கூட எட்டாமல் வெகுதூரத்திலிருக்கும் திருவடியை |
| நிஜேக்ஷணாப்யாம் உதீக்ஷ்ய | } - | தம் கண்கொண்டு தரிசித்து |
| ஆனந்தபாஷ்ப புலகோத்கம | } - | ஆனந்தக்கண்ணீர், மயிர்க்கூச்சம், தொண்டை நெகிழ்ச்சி இவைகளால் |
| கத்கதார்த்ர: | - | கனிந்தவராய் |
| த்ருஷ்டி மகரந்த ரஸம் | - | கண்களுக்குப் பூந்தேன்போன்றிருக்கும் |
| பவந்தம் துஷ்டாவ | - | தங்களை துதித்தாரல்லவா. |

देव प्रसीद परपूरुष तापवल्ली-
निर्लूनिदात्र समनेत्र कलाविलासिन् ।
खेदानपाकुरु कृपागुरुभिः कटाक्षै-
इत्यादि तेन मुदितेन चिरं नुतोऽभूः ॥ ६ ॥

தேவ ப்ரஸீத பரபூருஷ தாபவல்லீ -
நிர்லூனிதாத்ர ஸமநேத்ர கலாவிலாஸின் ।
கேதான பாகுரு க்ருபாகுருபி: கடாக்ஷை -
ரித்யாதி தேன முதிதேன சிரம் நுதோऽபூ: ॥ 6 ॥

| | | |
|---|---|---|
| ''தேவ பரபூருஷ | - | ஸ்வயம்பிரகாசரூபியும், பரப்பிரம்ம ஸ்வரூபியும், |
| தாபவல்லீ நிர்லூனி-தாத்ர | - | துன்பத் தளைகளை யறுப்பதில் கத்தி போன்றவரும், |
| ஸமநேத்ர கலாவிலாஸின் | - | தமது அம்சமான மாயையைக்கொண்டு சிருஷ்டி முதலிய லீலைகளைச் செய்கிறவருமான ஈசா! |
| ப்ரஸீத | - | அருளவேண்டும். |
| க்ருபாகுருபி: கடாக்ஷை- | - | கருணைநிறைந்தகடைக்கண்பார்வைகளால் |
| கேதான் அபாகுரு'' | - | வருத்தங்களை அகற்ற வேண்டும் |
| இத்யாதி முதிதேன தேன | - | என்றெல்லாம் சந்தோஷமடைந்த அந்த வசுதேவரால் |
| சிரம் நுத: அபூ: | - | வெகுநேரம் துதிக்கப்பட்டீரல்லவா. |

मात्रा च नेत्रसलिलास्तृतगात्रवल्ल्या
स्तोत्रैरभिष्टुतगुण: करुणालयस्त्वम् ।
प्राचीनजन्मयुगळं प्रतिबोध्य ताभ्यां
मातुर्गिरा दधिथ मानुषबालवेषम् ॥ ७ ॥

மாத்ரா ச நேத்ர ஸலிலாஸ்த்ருத காத்ரவல்லயா
ஸ்தோத்ரை ரபிஷ்டுத குண: கருணாலயஸ்த்வம் ।
ப்ராசீனஜன்ம யுகளம் ப்ரதிபோத்ய தாப்யாம்
மாதுர்கிரா ததித மானுஷ பால வேஷம் ॥ 7 ॥

| | | |
|---|---|---|
| நேத்ர ஸலிலா ஸ்த்ருத காத்ர வல்லயா மாத்ரா | - | கண்ணீரால் நனைந்த கொடிபோன்ற சரீரத்தையுடைய தாயாலும் |
| ஸ்தோத்ரை: | - | புகழ் வசனங்களால் |
| அபிஷ்டுத குண: | - | துதிக்கப்பட்ட குணங்களையுடையவரும், |
| கருணாலய: த்வம் தாப்யாம் | - | கருணாநிதியுமாகிய தாங்கள் அவ்விருவருக்கும் |
| ப்ராசீன ஜன்மயுகளம் | - | முந்திய இரண்டு ஜன்மங்களைப் பற்றி (முன் பிருச்னி ஸுதபஸ் என்பவர்களுக்குப் பிருச்னி கர்ப்பனாகவும், பின் அதிதி, காச்யபர்களுக்கு வாமனனாகவும் அவதரித்ததைப் பற்றி) |

| | | |
|---|---|---|
| ப்ரதி போத்ய மாது: கிரா- | | அறிவித்து தாயின் சொற்படி |
| மானுஷ பாலவேஷம் | - | மானிடக்குழந்தையின் வடிவத்தை |
| ததித | - | எடுத்துக்கொண்டீர்கள். |

त्वत्प्रेरितस्तदनु नन्दतनूजया ते
व्यत्यासमारचयितुं स हि शूरसूनुः ।
त्वां हस्तयोरधित चित्तविधार्यमार्यै-
रम्भोरुहस्थकलहंसकिशोररम्यम् ॥ ८॥

த்வத் ப்ரேரிதஸ்ததனு நந்த தனூஜயா தே
வ்யத்யாஸ மாரசயிதும் ஸ ஹி ஶூரஸூனு: ।
த்வாம் ஹஸ்தயோரதித சித்த விதார்ய மார்யை -
ரம்போருஹஸ்த்த கலஹம்ஸ கிஶோர ரம்யம் ॥ 8 ॥

| | | |
|---|---|---|
| ததனுஸ: ஶூரஸூனு: | - | அதன்பிறகு அந்த வஸுதேவர் |
| த்வத் ப்ரேரித: ஹி | - | தங்களால் ஏவப்பட்டவராகவே |
| நந்த தநூஜயா | - | நந்தகோபர் பெண்ணுடன் |
| தே வ்யத்யாஸம் ஆரசயிதும் | - | தங்களுக்கு மாற்றுதலை செய்வதற்கு |
| ஆர்யை: சித்தவிதார்யம் | - | யோகிகளால் மனத்தில் தரிக்கத் தகுந்தவரும் |
| அம்போருஹஸ்த கலஹம்ஸ கிஶோர | - | தாமரையில் வீற்றிருக்கும் ஹம்ஸக்குஞ்சு போல் அழகானவருமான தங்களை |
| ரம்யம் த்வாம் ஹஸ்தயோ: அதித | - | கையில் எடுத்துக் கொண்டாரல்லவா. |

जाता तदा पशुपसद्मनि योगनिद्रा
निद्राविमुद्रितमथाकृत पौरलोकम् ।
त्वत्प्रेरणात्किमिव चित्रमचेतनैर्यद्
द्वारैः स्वयं व्यघटि सङ्घटितैस्सुगाढम् ॥ ९॥

ஜாதா ததா பஶுபஸத்மனி யோகநித்ரா
நித்ரா விமுத்ரித மதாக்ருத பௌரலோகம் ।
த்வத் ப்ரேரணாத் கிமிவ சித்ரமசேதனைர்யத்
த்வாரை: ஸ்வயம் வ்யகடி ஸங்கடிதை: ஸுகாடம் ॥ 9 ॥

| | | |
|---|---|---|
| அத ததா த்வத் ப்ரேரணாத் | - | அப்பொழுது தங்களுடைய ஏவுதலால் |
| பஶுபஸத்மனி | - | நந்தகோபர் வீட்டில் |
| ஜாதா யோகநித்ரா | - | அவதரித்திருந்த யோகநித்திரை |
| பௌர லோகம் | - | பட்டணத்து ஜனங்களை |

| | | |
|---|---|---|
| நித்ரா விமுத்ரிதம் அக்ருத | - | தூக்கத்தால் கண் மூடியவர்களாக செய்தாள் |
| கிம் இவ சித்ரம் யத் | - | அதில் ஆச்சரியமென்ன? ஏனென்றால் |
| அசேதனை: | - | அறிவற்றவைகளும் |
| ஸுகாடம் ஸங்கடிதை | - | மிக உறப்பாகச் சேர்த்து பூட்டப்பட்டவைகளுமான |
| த்வாரை: | - | கதவுகளாலுங்கூட |
| ஸ்வயம் வ்யகடி | - | தாமாகவே திறந்துகொள்ளப்பட்டது அல்லவா. |

शेषेण भूरिफणवारितवारिणाऽथ
स्वैरं प्रदर्शितपथो मणिदीपितेन ।
त्वां धारयन् स खलु धन्यतमः प्रतस्थे
सोऽयं त्वमीश मम नाशय रोगवेगान् ॥१०॥

ஶேஷேண பூரிப்ணவாரித வாரிணாऽத
ஸ்வைரம் ப்ரதர்ஶிதபதோ மணிதீபிதேன ।
த்வாம் தாரயன் ஸ கலு தன்யதம: ப்ரதஸ்த்தே
ஸோऽயம் த்வமீஶ மம நாஶய ரோகவேகான் ॥ 10 ॥

| | | |
|---|---|---|
| அத தன்யதம: ஸ: | - | அப்பொழுது மகாபாக்கியவானான அந்த வசுதேவர், |
| பூரிபணவாரித வாரிணா | - | அனேகம் படங்களைக்கொண்டு மழைக்கு குடை பிடிப்பவனும் |
| மணிதீபிதேன | - | சிரோத்திரங்களால் விளக்குப் பிடிப்பவனுமான |
| ஶேஷேண ப்ரதர்ஶித பத: | - | ஆதிசேஷனால் வழிகாட்டப்பட்டவராய் |
| த்வாம் தாரயன் ஸ்வைரம் | - | தங்களை எடுத்துக்கொண்டு தடையில்லாமல் |
| ப்ரதஸ்தே கலு | - | புறப்பட்டாரல்லவா. |
| ஸ: அயம் த்வம் | - | அப்படிப்பட்ட தாங்கள் |
| மம ரோகவேகான் | - | என்னுடைய வியாதியின் வேகத்தை |
| நாஶய | - | இல்லாததாக்க வேண்டும். |

இதி ஸ்ரீமந் நாராயணீயே ஸ்ரீக்ருஷ்ணாவதார வர்ணனம் நாம அஷ்ட த்ரிம்ஶம் தஶகம் ஸமாப்தம்.

[ஆதித ஸ்லோக: 395] [அஷ்டம ஸ்கந்தே ஸ்லோகா: 20]

# தஶகம் - 39

## யோகமாயையை கொண்டுவருவது தலியவற்றை வர்ணிப்பது

भवन्तमयमुद्वहन् यदुकुलोद्वहो निस्सरन्
ददर्श गगनोच्चलज्जलभरां कलिन्दात्मजाम् ।
अहो सलिलसञ्चयः स पुनरैन्द्रजालोदितो
जलौघ इव तत्क्षणात्प्रपदमेयतामाययौ ॥ १ ॥

பவந்த மயமுத்வஹன் யதுகுலோத்வஹோ நிஸ்ஸரன்
ததர்ஶ ககனோச்சலஜ்ஜல பராம் கலிந்தாத்மஜாம் ।
அஹோ ஸலில ஸஞ்சய: ஸ புனரைந்த்ர ஜாலோதிதோ
ஜலௌக இவ தத்க்ஷணாத் ப்ரபதமேயதா மாயயௌ ॥ 1 ॥

| | | |
|---|---|---|
| யது குலோத் வஹ: அயம் | - | யதுகுலசிரேஷ்டனான இந்த வஸுதேவர் |
| பவந்தம் உத்வஹன் நிஸ்ஸரன் | - | தங்களையெடுத்துக்கொண்டு போகும் பொழுது |
| ககநோச்சலஜ்ஜலபராம் | - | ஆகாயம்வரையில் உயர்ந்தெழுந்த ஜலப் பிரவாஹத்துடன் கூடினதாக |
| கலிந்தாத்மஜாம் ததர்ஶ | - | யமுனையைக் கண்டார். |
| புன: ஸ: ஸலில ஸஞ்ஜய: | - | ஆனால் அந்த ஜலப்பிரவாஹம் |
| ஐந்த்ர ஜாலோதித: | - | இந்திரஜாலத்தால் தோன்றிய |
| ஜலௌக: இவ தத்க்ஷணாத் | - | ஜலப்பிரவாஹம்போல அப்பொழுதே |
| ப்ரபதமேயதாம் ஆயயௌ அஹோ | - | கணுக்காலளவு ஆயிற்று; ஆச்சரியம். |

प्रसुप्तपशुपालिकां निभृतमारुदद्वालिका-
मपावृतकवाटिकां पशुपवाटिकामाविशन् ।
भवन्तमयमर्पयन् प्रसवतल्पके तत्पदा-
द्वहन् कपटकन्यकां स्वपुरमागतो वेगतः ॥ २ ॥

ப்ரஸுப்த பஶுபாலிகாம் நிப்ருதமாருதத்பாலிகா -
மபாவ்ருத கவாடிகாம் பஶுபவாடிகா மாவிஶஞ் ।
பவந்தமயமர்ப்பயன் ப்ரஸவதல்பகே தத்பதாத்
வஹன் கபடகன்யகாம் ஸ்வபுரமாகதோ வேகத: ॥ 2 ॥

அயம் - இந்த வஸுதேவர்
ப்ரஸுப்த பஸு பாலிகாம் - நன்றாக நித்திரை செய்யும் கோபஸ்திரீகளையுடையதும்
நிப்ருதம் ஆருதத் பாலிகாம் - மெதுவாக அழுகின்ற பெண் குழந்தையை யுடையதும்,
அபாவ்ருத கவாடிகாம் - திறக்கப்பட்ட கதவுகளையுடையதுமான
பஶுபவாடிகாம் ஆவிஶன் - நந்தகோபருடைய கிருஹத்திற்குச் சென்று
பவந்தம் ப்ரஸவ தல்பகே கர்பயன் - தங்களை பிரசவப்படுக்கையில் படுக்க வைத்து,
தத்பதாத் - அந்த இடத்திலிருந்து
கபட கன்யகாம் வஹன் வேகத: - கபடப் பெண்ணை எடுத்துக்கொண்டு மிக வேகமாக
ஸ்வபுரம் ஆகத: - தம்மிருப்பிடம் வந்துசேர்ந்தார்.

ततस्त्वदनुजारवक्षपितनिद्रवेगद्रव-
द्भटोत्करनिवेदितप्रसववार्तयैवार्तिमान् ।
विमुक्तचिकुरोत्करस्त्वरितमापतन् भोजरा-
डतुष्ट इव दृष्टवान् भगिनिकाकरे कन्यकाम् ॥ ३॥

ததஸ்த்வதனுஜா ரவக்ஷபித நித்ரவேக த்ரவத்
படோத்கர நிவேதித ப்ரஸவ வார்த்தயைவார்த்திமான் ।
விமுக்த சிகுரோத்கர ஸ்த்வரித மாபதன் போஜரா -
டதுஷ்ட இவ த்ருஷ்டவான் பகினிகாகரே கன்யகாம் ॥ 3 ॥

தத: போஜராட் - அதன்பிறகு கம்ஸன்
த்வதநு ஜாரவக்ஷாபித நித்ர வேக த்ரவத் படோத்கர படோத்கர நிவேதித ப்ரஸுவ வார்தயா ஏவ - தங்கள் தங்கையின் அழுகையால் நித்திரை கலைந்து வேகமாக ஓடிய சேவக சமூஹத்தால் அறிவிக்கப்பட்ட பிரசவ சமாசாரத்தைக் கேட்டவுடன்
ஆர்த்திமான் - வருத்தமடைந்தவனாய்
விமுக்த சிகுரோத்கர: - தலைவிரிகோலமாக
த்வரிதம் ஆபதன் - விரைவாக ஓடிவந்து
அதுஷ்ட இவ - ஸந்தோஷமடையாதவன்போல
பகினிகாகரே - இரங்கத்தகுந்த தங்கையின் கையில்
கன்யகாம் த்ருஷ்டவான் - ஒரு பெண்குழந்தையைக் கண்டான்.

ध्रुवं कपटशालिनो मधुहरस्य माया भवे-
दसाविति किशोरिकां भगिनिकाकरालिङ्गिताम् ।
द्विपो नळिनिकान्तरादिव मृणाळिकामाक्षिप-
न्नयं त्वदनुजामजामुपलपट्टके पिष्टवान् ॥ ४ ॥

த்ருவம் கபடஶாலினோ மதுஹரஸ்ய மாயா பவே -
தஸாவிதி கிஶோரிகாம் பகினிகா கராலிங்கிதாம் ।
த்விபோ நலினிகாந்தராதிவ ம்ருணாலிகாமாக்ஷிப -
ந்நயம் த்வதனுஜாமஜா முபலபட்டகே பிஷ்டவான் ॥ 4 ॥

| | | |
|---|---|---|
| அஸௌ கபட ஶாலின | - | "இந்தக் கன்னிகை கபடசாலியான |
| மதுஹரஸ்ய | - | மதுஸூதனமஹாவிஷ்ணுவின் |
| மாயா பவேத் | - | மாயையாகத்தான் இருக்கவேண்டும், |
| த்ருவம் இதி அயம் | - | நிச்சயம்" என்றெண்ணி அந்தக்கம்ஸன் |
| பகினி காகராலிங்கிதாம் | - | இளந்தங்கையின் கைகளால் அணைத்துக் கொள்ளப்பட்டிருக்கும் |
| கிஶோரிகாம் | - | அந்தப் பெண்குழந்தையை |
| த்விப: நளினி காந்தராத் | - | ஒரு யானைதாமரைக்குளத்தின் நடுவிலிருந்து |
| ம்ருணாலிகாம் இவ ஆக்ஷிபன் | - | ஒரு தாமரைத்தண்டை பிடுங்குவதுபோல் பிடுங்கிக்கொண்டு, |
| த்வனுஜாம் அஜாம் | - | தங்கள் தங்கையான அந்த மாயாதேவியை |
| உபலபட்டகே பிஷ்டவான் | - | கற்பாறையில் ஓங்கியடித்தான். |

ततो भवदुपासको झटिति मृत्युपाशादिव
प्रमुच्य तरसैव सा समधिरूढरूपान्तरा ।
अधस्तलमजग्मुषी विकसदष्टबाहुस्फुरन्-
महायुधमहो गता किल विहायसा दिद्युते ॥ ५ ॥

ததோ பவதுபாஸகோ ஜடிதி ம்ருத்யுபாஶாதிவ
ப்ரமுச்ய தரஸைவ ஸா ஸமதிரூட ரூபாந்தரா ।
அதஸ்தல மஜக்முஷீ விகஸ தஷ்டபாஹுஸ்புரன்
மஹாயுதமஹோ கதா கில விஹாய்ஸா தித்யுதே ॥ 5 ॥

| | | |
|---|---|---|
| தத: பவதுபாஸக: | - | அப்பொழுது தங்களையுபாஸிக்கின்ற பக்தன் |
| ஜடிதி ம்ரித்யுபாஸாத் இவ | - | சீக்கிரமாக யமபாசத்திலிருந்து விடப்படுவதுபோல |
| ஸா ப்ரமுச்ய | - | அந்த யோகமாயை கம்ஸன் கையிலிருந்து விடுபட்டு |
| தரஸா ஸமாதிரூட ரூபாந்தரா | - | உடனேயே வேறொரு ரூபத்தை யடைந்தவளாய் |

| | | |
|---|---|---|
| அதஸ்தலம் அஜக்முஷீ ஏவ | - | பூமிக்கு வராதவளாகவே |
| விகஸதஷ்டபாஹு ஸ்புரன் மஹாயுதம் | - | பிரகாசிக்கின்ற எட்டு கைகளிலும் விளங்குகின்ற பெரும் ஆயுதங்களுடன் |
| விஹாயஸா கதா அஹோ | - | ஆகாசத்தையடைந்தவளாகவே ஆச்சரியகரமாக |
| தித்யுதே கில | - | விளங்கினாள் அல்லவா. |

नृशंसतर कंस ते किमु मया विनिष्पिष्टया
बभूव भवदन्तकः क्वचन चिन्त्यतां ते हितम् ।
इति त्वदनुजा विभो खलमुदीर्य तं जग्मुषी
मरुद्गणपणायिता भुवि च मन्दिराण्येयुषी ॥ ६ ॥

ந்ருஶம்ஸதர கம்ஸ தே கிமு மயா விநிஷ்பிஷ்டயா
பபூவ பவதந்தக: க்வசன சிந்த்யதாம் தே ஹிதம் ।
இதி த்வதனுஜா விபோ கலமுதீர்ய தம் ஜக்முஷீ
மருத்கணபணாயிதா புவி ச மந்திராண்யேயுஷீ ॥ 6 ॥

| | | |
|---|---|---|
| "ந்ருஶம்ஸதர கம்ஸ | - | "மிகக்கொடியவனான ஹே கம்ஸா! |
| மயா விநிஷ்-பிஷ்டயா தே கிமு | - | என்னைக் கொல்வதால் உனக்கென்ன பிரயோஜனம்? |
| பவதந்தக: | - | உன்னைக் கொல்லுகின்றவன் |
| க்வசன பபூவ | - | ஏதோ ஓரிடத்தில் ஜனித்திருக்கிறான். |
| தே ஹிதம் சிந்த்யதாம்" | - | உனக்கு வேண்டிய நன்மை ஆலோசிக்கப் படட்டும்" |
| விபோ த்வதனுஜா | - | ஹே பிரபுவே! தங்கள் ஸஹோதரி |
| கலம் தம் இதி உதீர்ய | - | துஷ்டனான அந்தக் கம்ஸனிடம் இவ்விதம் சொல்லிவிட்டு |
| மருத்கண பணாயிதா | - | தேவகணங்களால் துதிக்கப்பட்டவளாய் |
| ஜக்முஷீ புவி | - | அவ்விடமிருந்து சென்று பூலோகத்தில் |
| மந்திராணி ச ஏயுஷீ | - | அனேக ஆலயங்களையும் அடைந்தாளல்லவா. |

प्रगे पुनरगात्मजावचनमीरिता भूभुजा
प्रलम्बबकपूतनाप्रमुखदानवा मानिनः ।
भवन्निधनकाम्यया जगति बभ्रमुर्निर्भयाः
कुमारकविमारकाः किमिव दुष्करं निष्कृपैः ॥ ७ ॥

ப்ரகே புன ரகாத்மஜா வசன மீரிதா பூபுஜா
ப்ரலம்ப பக பூதனா ப்ரமுக தானவா மானின:।
பவந்நிதன காம்யயா ஜகதி பப்ரமுர் நிர்பயா:
குமாரக விமாரகா: கிமிவ துஷ்கரம் நிஷ்க்ருபை: ॥ 7 ॥

| | | |
|---|---|---|
| புன: ப்ரகே பூபுஜா | - | மறுநாள் காலையில் கம்ஸனால் |
| அகாத்மஜா வசனம் ஈரிதா: | - | யோகமாயையின் வசனத்தை சொல்லப்பட்டவர்களும் |
| மானின: | - | துரபிமானமுடையவர்களுமான |
| ப்ரலம்ப பக பூதநா ப்ரமுக தானவா: | - | பிரலம்பன், பகன், பூதனை முதலிய அசுரர்கள் |
| பவந்நிதன காம்யயா | - | தங்களைக்கொல்லும் விருப்பத்தால் |
| குமாரக விமாரகா: | - | மற்றக் குழந்தைகளைக் கொன்றுகொண்டு |
| நிர்பயா: ஜகதி பப்ரமு: | - | பயமற்றவர்களாக உலகில் சுற்றித் திரிந்தனர். |
| நிஷ்க்ருபை: | - | கருணையற்றவர்களால் |
| துஷ்கரம் கிமிவ | - | செய்யத்தகாதது என்னதான் உண்டு? |

ततः पशुपमन्दिरे त्वयि मकुन्द नन्दप्रिया-
प्रसूतिशयनेशये रुदति किञ्चिदञ्चत्पदे ।
विबुध्य वनिताजनैस्तनयसंभवे घोषिते
मुदा किमु वदाम्यहो सकलमाकुलं गोकुलम् ॥ ८॥

தத: பஶுபமந்திரே த்வயி முகுந்த நந்தப்ரியா
ப்ரஸூதி ஶயனே ஶயே ருததி கிஞ்சிதஞ்சத் பதே ।
விபுத்ய வநிதாஜனைஸ்தனய ஸம்பவே கோஷிதே
முதா கிமு வதாம்யஹோ ஸகலமாகுலம் கோகுலம் ॥ 8 ॥

| | | |
|---|---|---|
| முகுந்த | - | முக்தியளிக்கும் கிருஷ்ணா! |
| தத: பஶுப மந்திரே த்வயி | - | அதன்பிறகு நந்தகோபன் கிருஹத்தில் தாங்கள் |
| நந்த ப்ரியா ப்ரஸூதி ஶயனேஶயே | - | நந்தன் பத்தினியான யசோதையின் பிரசவப் படுக்கையில் படுத்துக்கொண்டு |
| கிஞ்சி தஞ்சத் பதே ருததி | - | கால்களை சிறிது அசைத்துக்கொண்டு அழும்பொழுது |
| விபுத்ய வனிதாஜனை: | - | நித்திரைவிட்டெழுந்து, ஸ்திரீஜனங்களால் |
| தன்ய ஸம்பவே கோஷிதே | - | புத்திரப்பேறு கோஷிக்கப்பட்டபொழுது |
| அஹோ கிமு வதாமி | - | ஆச்சரியம்! நான் என்ன சொல்லுவேன்!! |
| ஸகலம் கோகுலம் முதா ஆகுலம் | - | கோகுலம் முழுவதும் ஆனந்தபரவசமாயிற்றல்லவா. |

अहो खलु यशोदया नवकळायचेतोहरं
भवन्तमलमन्तिके प्रथममापिबन्त्या दृशा ।
पुनः स्तनभरं निजं सपदि पाययन्त्या मुदा
मनोहरतनुस्पृशा जगति पुण्यवन्तो जिताः ॥ ९॥

அஹோ கலு யஶோதயா நவகலாய சேதோஹரம்
பவந்தமலமந்திகே ப்ரதம மாபிபந்த்யாத்ருஶா ।
புன: ஸ்தனபரம் நிஜம் ஸபதி பாயயத்யா முதா
மனோஹர தநுஸ்ப்ருஶா ஜகதி புண்யவந்தோ ஜிதா: ॥ 9 ॥

நவகலாய சேதோஹரம் பவந்தம் - புதுக்காயாம்பூபோல் மனதைக்கவருகின்ற தங்களை
அந்திகே ப்ரதமம் - பக்கத்தில் முதன்முதலாக
த்ருஶா அலம் அபிபந்த்யா - கண்ணெடுத்து நன்றாகப் பார்க்கிறவளும்,
புன: நிஜம் ஸ்தனபரம் - பிறகு தனது ஸ்தனங்களை
ஸபதி பாயயந்த்யா முதா - உடனே பருகச் செய்கின்றவளும், ஸந்தோஷத்துடன்
மனோஹர தனுஸ் ப்ருஶா - மனோஹரமான சரீரத்தைத் தொடுகின்றவளுமான
யஶோதயா ஜகதி - யசோதையால் உலகத்திலுள்ள
புண்யவந்த: ஜிதா: கலு - புண்ணியவான்கள்ஜயிக்கப்பட்டார்கள் அல்லவா?
அஹோ - ஆச்சரியம்!

भवत्कुशलकाम्यया स खलु नन्दगोपस्तदा
प्रमोदभरसङ्कुले द्विजकुलाय किं नाददात् ।
तथैव पशुपालकाः किमु न मङ्गलं तेनिरे
जगत्त्रितयमङ्गल त्वमिह पाहि मामामयात् ॥ १० ॥

பவத்குஶல காம்யயா ஸ கலு நந்தகோபஸ்ததா
ப்ரமோதபரஸங்குலோ த்விஜ குலாய கிம் நாததாத் ।
ததைவ பஶுபாலகா: கிமு ந மங்கலம் தேநிரே
ஜகத் த்ரிதயமங்கள த்வமிஹ பாஹி மாமாமயாத் ॥ 10 ॥

ததாஸ: நந்தகோப: கலு - அப்பொழுது அந்த நந்தகோபரும்
ப்ரமோதபர ஸங்குல: - ஆனந்தபரவசராய்
பவத்குஶல காம்யயா - தங்களுடைய க்ஷேமத்தில் விருப்பத்தால்
த்விஜகுலாய கிம் ந அததாத் - பிராம்மணர்களுக்கு எதைத்தான் கொடுக்கவில்லை;
ததா ஏவ பஶுபாலகா: - அவ்விதமே மற்ற இடையர்களும்
கிமு மங்களம் ந தேநிரே - என்னென்னமங்களத்தைத்தான்செய்யவில்லை?
ஜகத் த்ரிதய மங்கள - மூவுலகங்களுக்கும் மங்களங்களை செய்யும் ஹே ஸ்ரீ கிருஷ்ணா
த்வம் இஹ மாம் - தாங்கள் இப்பொழுத என்னை
ஆமயாத் பாஹி - ரோகத்திலிருந்து காப்பாற்றவேண்டும்.

இதி ஸ்ரீமந் நாராயணீயே யோகமாயா நயநாதி வர்ணனம்
நாம ஏகோன சத்வாரிம்ஸம் தஶகம்.

[ஆதித ஸ்லோக: 405] [தஶம ஸ்கந்தே ஸ்லோகா: 30]

# தஶகம் - 40

## பூதனையின் மோக்ஷம்

तदनु नन्दममन्दशुभास्पदं
नृपपुरीं करदानकृते गतम् ।
समवलोक्य जगाद्भवत्पिता
विदितकंससहायजनोद्यमः ॥१॥

ததனு நந்த மமந்த ஶுபாஸ்பதம்
ந்ருப புரீம் கரதான க்ருதே கதம் ।
ஸமவலோக்ய ஜகாத பவத்பிதா
விதித கம்ஸ ஸஹாய ஜனோத்யம: ॥ 1 ॥

ததனு - அதன்பிறகு
விதித கம்ஸ ஸஹாய ஜனோத்யம: - கம்ஸனுடைய ஸஹாயபூதர்களான பூதனைமுதலியவர்களுடையபிரயத்தனத்தையறிந்த
பவத்பிதா - தங்கள் பிதாவான வசுதேவர்
கரதான க்ருதே - கப்பம் கொடுப்பதற்காக
ந்ருபபுரீம் கதம் - மதுராபுரிக்குச் சென்றவனும்
அமந்தஶுபாஸ்பதம் - அளவற்ற நற்குணங்களுக்கு இருப்பிடமானவனுமான
நந்தம் ஸமவலோக்ய ஜகாத் - நந்தகோபனைப் பார்த்து பின்வருமாறு சொன்னார்.

अयि सखे तव बालकजन्म मां
सुखयतेऽद्य निजात्मजजन्मवत् ।
इति भवत्पितृतां व्रजनायके
समधिरोप्य शशंस तमादरात् ॥२॥

அயி ஸகே தவ பாலக ஜன்ம மாம்
ஸுகயதேऽத்ய நிஜாத்மஜ ஜன்மவத் ।
இதி பவத்பித்ருதாம் வ்ரஜநாயகே
ஸமதிரோப்ய ஶஶம்ஸ தமாதராத் ॥ 2 ॥

அயிஸகேதவபாலகஜன்ம - தோழா உமக்குப் பிள்ளைபிறந்தது
நிஜாத்மஜ ஜன்மவத் - எனக்குப்பிள்ளை பிறந்ததுபோல
அத்யமாம் ஸுகயதே - இப்பொழுது என்னைசந்தோஷப்படுத்துகிறது
இதி பவத் பித்ருதாம் - என்று தங்கள் பிதாவாக இருக்கும் தன்மையை

| | |
|---|---|
| வ்ரஜநாயகே ஸமதிரோப்ய - | நந்தகோபரிடம் ஆரோபணஞ்செய்து, |
| தம் ஆதராத் ஶஶம்ஸ - | அந்த நந்தகோபனை ஆதரவுடன் துதித்தார். |

इह च सन्त्यनिमित्तशतानि ते
कटकसीम्नि ततो लघु गम्यताम् ।
इति च तद्वचसा व्रजनायको
भवदपायभिया द्रुतमाययौ ॥ ३ ॥

இஹ ச ஸந்த்யநிமித்த ஶதானி தே
கடக ஸீம்னி ததோ லகு கம்யதாம் ।
இதி ச தத்வசஸா வ்ரஜநாயகோ
பவதபாயபியா த்ருத மாயயௌ ॥ 3 ॥

| | |
|---|---|
| தே இஹ ச - | உமக்கு இவ்விடத்தில் |
| அநிமித்த ஶதானி ஸந்தி - | அனேகம் அபசகுனங்கள் தோன்றுகின்றன |
| தத: கடக ஸீம்னி - | ஆகையால் கோகுலத்திற்கு |
| லகு கம்யதாம் - | சீக்கிரம் போகவேண்டும் |
| இதி ச தத்வசஸா - | என்ற வஸுதேவருடைய வசனத்தால் |
| வ்ரஜநாயக - | நந்தகோபன் |
| பவதபாயபியா - | தங்களுக்கு ஆபத்துண்டாகுமென்ற எண்ணத்தால் |
| த்ருதம் ஆயயௌ - | சீக்கிரம் வந்தார். |

अवसरे खलु तत्र च काचन
व्रजपदे मधुराकृतिरङ्गना ।
तरळषट्पदलालितकुन्तला
कपटपोतक ते निकटं गता ॥ ४ ॥

அவஸரே கலு தத்ர ச காசன
வ்ரஜபதே மதுராக்ருதிரங்கனா ।
தரல ஷட்பத லாலித குந்தலா
கபட போதக தே நிகடம் கதா ॥ 4 ॥

| | |
|---|---|
| கபட போதக - | ஹா! கபடசிசுவே! |
| தத்ர அவஸ்ரே ச - | அந்த சமயத்தில் |
| தரள ஷட் பதலாலித குந்தளா - | சலிக்கின்ற வண்டுகளால்மொய்க்கப்பட்ட கூந்தலையுடையவளும் |
| மதுராக்ருதி: - | மனோஹரமான உருவமுடையவளுமான |
| காசனா அங்கனா வ்ரஜபதே - | ஒரு ஸ்திரீ கோகுலத்தில் |
| தே நிகடம் கதா கலு - | தங்கள் அருகில் வந்தாள் அல்லவா. |

सपदि सा हृतबालकचेतना
निशिचरान्वयजा किल पूतना ।
व्रजवधूष्विह केयमिति क्षणं
विमृशतीषु भवन्तमुपाददे ॥ ५ ॥

ஸபதி ஸா ஹ்ருதபாலக சேதனா
நிஶிசரான்வயஜா கில பூதனா ।
வ்ரஜவதூஷ்விஹ கேயமிதி க்ஷணம்
விம்ருஶதீஷு பவந்தமுபாததே ॥ 5 ॥

ஸபதி ஹ்ருதபாலக சேதனா - உடனே குழந்தைகளின் பிராணனை யபஹரிக்கின்றவளும்,
நிஶிசரான் வயஜா - அரக்கர் குலத்தில் ஜனித்தவளுமான
ஸா பூதனா இஹ - அந்தப் பூதனை அந்த கோலத்தில்
வ்ரஜவதூஷு இயம் கா இதி- கோபஸ்திரீகள் இவள் யார் என்று
க்ஷணம் விம்ருஶ தீஷு - சிறிதுநேரம் ஆலோசித்து கொண்டிருக்கும் பொழுது
பவந்தம் உபாததே கில - தங்களை கையிலெடுத்தாளல்லவா.

ललितभावविलासहृतात्मभि
र्युवतिभिः प्रतिरोद्धुमपारिता ।
स्तनमसौ भवनान्तनिषेदुषी
प्रददुषी भवते कपटात्मने ॥ ६ ॥

லலிதபாவ விலாஸ ஹ்ருதாத்மபிர் -
யுவதிபி: ப்ரதிரோத்துமபாரிதா ।
ஸ்தனமஸௌ பவனாந்தநிஷேதுஷீ
ப்ரததுஷீ பவதே கபடாத்மனே ॥ 6 ॥

அஸௌ - அந்தப் பூதனை
லலிதபாவ விலாஸ ஹ்ருதாத்மபி: - மனோஹரங்களான ஸாத்விக பாவங்களாலும் அங்கசேஷ்டைகளாலும் கவரப்பட்ட மனதையுடைய
யுவதிபி: ப்ரதிரோத்தும் அபாரிதா - பெண்மணிகளால் தடுக்கமுடியாதவளாய்
பவநாந்த நிஷேதுஷீ - வீட்டிற்குள் உட்கார்ந்துகொண்டு
கபடாத்மனே பவதே - கபடரூபியாகிய தங்களுக்கு
ஸ்தனம் ப்ரததுஷீ - முலை கொடுத்தாளல்லவா.

समधिरुह्य तदङ्कमशङ्कितस्त्व
मथ बालकलोपनरोषितः ।
महदिवाम्रफलं कुचमण्डलं
प्रतिचुचूषिथ दुर्विषदूषितम् ॥ ७॥

ஸமதிருஹ்ய ததங்கமஶங்கிதஸ்த்வ -
மத பாலகலோபன ரோஷித: ।
மஹதிவாம்ரபலம் குசமண்டலம்
ப்ரதிசுசூஷித துர்விஷ தூஷிதம் ॥ 7 ॥

அதத்வம் - உடனே தங்களை
பாலகலோபன ரோஷித- குழந்தைகளைக் கொன்றதால் மிகக் கோபமடைந்தவராய்
அஶங்கித: தத் அங்க ஸமதிருஹ்ய - அச்சமற்றவராய் அவள் மடியில் ஏறி
மஹத் ஆம்ரபலம் இவ - பெரும் மாம்பழத்தைப் போன்றதும்
துர்விஷதூஷிதம் - கடும் விஷத்தால் கெடுதியுற்றதுமான
குசமண்டலம் - ஸ்தன மண்டலத்தை
ப்ரதிசுசூஷித - அடியோடு உறிஞ்சிக் குடித்தீரல்லவா.

असुभिरेव समं धयति त्वयि
स्तनमसौ स्तनितोपमनिस्वना ।
निरपतद्भयदायि निजं वपुः
प्रतिगता प्रविसार्य भुजावुभौ ॥ ८॥

அஸுபிரேவ ஸமம் தயதி த்வயி
ஸ்தனமஸௌ ஸ்தனிதோப மநஸ்விநா ।
நிரபதத் பயதாயி நிஜம் வபு:
ப்ரதிகதா ப்ரவிஸார்ய புஜாவுபௌ ॥ 8 ॥

த்வயி அஸுபி: ஸமம் ஏவ- தாங்கள் பிராணனோடுகூடவே
ஸ்தனம் தயதி அஸௌ - முலை குடிக்கும்பொழுது அந்தப்பூதனை
ஸ்தநிதோப மனஸ்விநா- இடிக்கொப்பான குரலுடையவளாய்
பய தாயி - பயத்தை உண்டுபண்ணும்
நிஜம் வபு: ப்ரதிகதா - நிஜமான தன் உருவத்தையடைந்தவளாய்,
உபௌ புஜௌ ப்ரவிஸார்ய - இரண்டு கைகளையும் விரித்துக்கொண்டு
நிரபதத் - கீழே விழுந்தாள்.

भयदघोषणभीषणविग्रह
श्रवणदर्शनमोहितवल्लवे ।
व्रजपदे तदुर:स्थलखेलनं
ननु भवन्तमगृह्णत गोपिका: ॥ ९ ॥

பயதகோஷண பீஷண விக்ரஹ
ஶ்ரவண தர்ஶன மோஹித வல்லவே ।
வ்ரஜபதே ததுர: ஸ்த்தல கேலனம்
நனு பவந்த மக்ருஹ்ணத கோபிகா: ॥ 9 ॥

| | | |
|---|---|---|
| வ்ரஜபத | - | கோகுலமானது |
| பயதகோஷண பீஷண விக்ர ஶ்ரவண தர்ஶன மோஹித வல்லவே | } | பயந்தரும் குரலைக்கேட்டதாலும் பயங்கரமான சரீரத்தைக் கண்டதாலும் மயக்கமடைந்த கோபர்களையுடையதாக ஆகியபொழுது |
| ததுர ஸ்தல கேலனம் | - | அவளுடைய மார்பில் விளையாடிக் கொண்டிருந்த |
| பவந்தம் கோபிகா: | - | தங்களை கோபிகைகள் |
| அக்ருஹ்ணத் நனு | - | வந்தெடுத்தார்களல்லவா. |

भुवनमङ्गलनामभिरेव ते
युवतिभिर्बहुधा कृतरक्षण: ।
त्वमयि वातनिकेतननाथ
मामगदयन् कुरु तावकसेवकम् ॥ १० ॥

புவன மங்கல நாமபிரேவ தே
யுவதிபிர் பஹுதா க்ருதரக்ஷண:
த்வமயி வாதநிகேதனநாத
மாமகதயன் குரு தாவக ஸேவகம் ॥ 10 ॥

| | | |
|---|---|---|
| புவன மங்கள | - | ஜகன்மங்களமூர்த்தியான |
| அயி வாதநிகேதனனாத | - | ஹே! குருவாயூரப்பனே! |
| தே நாமபி: ஏவ | - | தங்கள் திருநாமங்களைக்கொண்டே |
| யுவதிபி: பஹுதா | - | பெண்மணிகளால் பலவிதத்திலும் |
| க்ருத ரக்ஷண: த்வம் | - | ரக்ஷைசெய்யப்பட்டவரான தாங்கள் |
| மாம் அகதயன் | - | என்னை ரோகமில்லாதவனாகச் செய்து |
| தாவக ஸேவகம் குரு | - | தங்கள்சேவகனாகச்செய்தருளவேண்டும். |

இதி ஶ்ரீமந் நாராயணீயே பூதனாமோக்ஷோ நாம சத்வாரிம்ஶம் தஶகம்.

[ஆதித ஶ்லோக: 415] [தஶம ஸ்கந்தே ஶ்லோகா: 40]

# தஶகம் - 41

## கோபியர்கள் பாராட்டு

व्रजेश्वरः शौरिवचो निशम्य
समाव्रजन्नध्वनि भीतचेताः ।
निष्पिष्टनिश्शेषतरुं निरीक्ष्य
कञ्चित्पदार्थं शरणं गतस्त्वाम् ॥१॥

வ்ரஜேஶ்வர: ஶௌரிவசோ நிஶம்ய
ஸமாவ்ரஜந்நத்வனி பீத சேதா: ।
நிஷ்பிஷ்ட நி: ஶேஷ தரும் நிரீக்ஷ்ய
கஞ்சித் பதார்த்தம் ஶரணம் கதஸ்த்வாம் ॥ 1 ॥

| | |
|---|---|
| வ்ரஜேஸ்வர: | - கோகுலத்திற்கதிபதியான நந்தகோபர் |
| ஶௌரிவச: நிஶம்ய | - வஸுதேவர் கூறியதைக்கேட்டு |
| ஸமாவ்ரஜன் அத்வனி | - திரும்பிவரும்பொழுது வழியில் |
| நிஷ்பிஷ்டநிஸ்ஶேஷதரும் | - எல்லா மரங்களையும் பொடியாக்கியதும் |
| கஞ்சித் பதார்தம் | - இன்னதென்றறியமுடியாததுமானஒருவஸ்துவை |
| நிரீக்ஷ்ய பீதசேதா: | - கண்டு பயந்தவராய் |
| பதார்தம் | - தங்களுடைய ரக்ஷைக்காக |
| கஞ்சித் பதார்தம் | - பரப்பிரம்மஸ்வரூபியும், 'சித்' பதவாச்யனுமான |
| த்வாம் ஶரணம் கத: | - தங்களைச் சரணமடைந்தானல்லவா. |

निशम्य गोपीवचनादुदन्तं
सर्वेऽपि गोपा भयविस्मयान्धाः ।
त्वत्पातितं घोरपिशाचदेहं
देहुर्विदूरेऽथ कुठारकृत्तम् ॥ २॥

நிஶம்ய கோபீவசனுதுதந்தம்
ஸர்வே஽பி கோபா பய விஸ்மயாந்தா: ।
த்வத்பாதிதம் கோர பிஶாச தேஹம்
தேஹுர்விதூரே஽த குடாரக்ருத்தம் ॥ 2 ॥

| | |
|---|---|
| அத கோபீவசநாத் | - அதன்பிறகு கோபஸ்திரீகளின் வசனத்தால் |
| உதந்தம் நிஶம்ய | - நடந்த ஸமாசாரத்தையறிந்து |
| ஸர்வே அபி கோபா: | - எல்லா கோபர்களும் |
| பயவிஸ்மயாந்தா: | - பயத்தாலும் ஆச்சரியத்தாலும் செய்ய வேண்டியதையறியாதவர்களாய் |
| த்வத்பாதிதம் | - தங்களால் வீழ்த்தப்பட்ட |

| | |
|---|---|
| கோர பிஶாச தேஹம் | - பயங்கரமான அந்த பிசாசின் தேஹத்தை |
| குடாரக்ருத்தம் விதூரே தேஹு: | மழுவால் வெட்டி வெகுதூரத்தில் எரித்தனர். |

त्वत्पीतपूतस्तनतच्छरीरात
समुच्चलन्नुच्चतरो हि धूमः ।
शङ्कामधादागरवः किमेषु
किं चान्दनो गौल्गुलवोऽथवेति ॥ ३ ॥

த்வத்பீத பூதஸ்தன தச்சரீராத்
ஸமுச்சலன்னுச்சதரோ ஹி தூம: ।
சங்காமதா தாகரவ: கிமேஷு :
கிம் சாந்தனோ கௌல குலவோऽதவேதி ॥ 3 ॥

| | |
|---|---|
| த்வத்பீத பூத ஸ்தந தச்சரீராத் | - தங்களால் பானம்பண்ணப்பட்டதும் அதனால் பரிசுத்தமுமான ஸ்தனங்களையுடைய அந்தப் பூதனையின் தேஹத்திலிருந்து |
| உச்சரத: சமுச்சலன் தூம: | - மிக உயரமாகக் கிளம்பிய புகை |
| ஏஷ ஆகரவ: கிம் | - இது அகிற்கட்டையிலிருந்துண்டானதா, |
| சாந்தன: கிம் | - அல்லது சந்தனத்திலிருந்துண்டானதா, |
| அதவா கௌல்குலவ: | - அல்லது குங்கிலியத்திலிருந்துண்டானதா |
| இதி ஸங்காம் அதாத் ஹி | - என்ற சந்தேஹத்தை உண்டு பண்ணிற்றல்லவா. |

मदङ्गसङ्गस्य फलं न दूरे
क्षणेन तावद्भवतामपि स्यात् ।
इत्युल्लपन्वल्लवतल्लजेभ्य
स्त्वं पूतनामातनुथास्सुगन्धिम् ॥ ४ ॥

மதங்க ஸங்கஸ்ய பலம் தூரே
க்ஷணேன தாவத் பவதாமபி ஸ்யாத் ।
இத்யுல்லபன் வல்லவதல்லஜேப்ய -
ஸ்த்வம் பூதனா மாதனுதா: ஸுகந்த்திம் ॥ 4 ॥

| | |
|---|---|
| மதங்க ஸங்கஸ்ய பலம் | - என்னுடைய அங்கசங்கத்திற்கு (அவயவங்களுடன் சேர்க்கைக்கு) பலம் |
| தூரே ந | - வெகுதூரத்தில் (ஜன்மாந்திரத்தில்) அல்ல; |
| பவதாம் அபிக்ஷணே நதா வத்ஸ்யாத் | - உங்களுக்கும் சீக்கிரமாகவே கிடைத்துவிடும்; |
| இதி வல்லவதல்ல ஜேப்யா: உல்லபன் | - என்று கோபசிரேஷ்டர்களுக்குச் சொல்லிக்கொண்டு |
| த்வம் பூதனாம் | - பரிசுத்தமான நாமங்களையுடைய தாங்கள் பூதனையை |
| ஸுகந்திம் ஆதநுதா: | - சுகந்தமுடையவளாகச் செய்தீர்களல்லவா. |

चित्रं पिशाच्या न हतः कुमार
स्त्रित्रं पुरैवाकथि शौरिणेदम् ।
इति प्रशंसन्किल गोपलोको
भवन्मुखालोकरसे न्यमाङ्क्षीत् ॥ ५ ॥

சித்ரம் பிஶாச்யா ந ஹத: குமார:
சித்ரம் புரைவாகதி ஶௌரிணேதம் ।
இதி ப்ரஶம்ஸன் கில கோபலோகோ
பவன் முகாலோகரஸே ந்யமாங்க்ஷீத் ॥ 5 ॥

பிஶாச்யா: - பிசாசியான பூதனையால்
குமார: நஹத: - குழந்தை கொல்லப்படவில்லை;
சித்ரம் - இது ஆச்சரியம்;
ஶௌரிணா இதம் புரா ஏவ அகதி - வஸுதேவரால் இது முந்தியே கூறப்பட்டது,
சித்ரம் இதி ப்ரஶம்ஸன் - அதுவும் ஆச்சர்யம் என்று சொல்லிக்கொண்டே
கோபலோக: - இடையர்கள்
பவன் முகாலோகரஸே - தங்கள் திருமுகத்தைப் பார்ப்பதென்ற ஆனந்தத்தில்
ந்யமாங்க்ஷீத் கில - மூழ்கிவிட்டார்களல்லவா.

दिने दिनेऽथ प्रतिवृद्धलक्ष्मी
रक्षीणमङ्गल्यशतो व्रजोऽयम् ।
भवन्निवासादयि वासुदेव
प्रमोदसान्द्रः परितो विरेजे ॥ ६ ॥

தினே தினேऽத ப்ரதிவ்ருத்த லக்ஷ்மீ -
ரக்ஷீண மாங்கல்ய ஶதோ வ்ரஜோऽயம்
பவந் நிவாஸாதயி வாஸுதேவ
ப்ரமோத ஸாந்த்ர: பரிதோ விரேஜே ॥ 6 ॥

அத அயி வாஸுதேவ - அதன்பிறகு ஓ! வாசுதேவனே!
அயம் வ்ரஜ: பரித: - அந்தக் கோகுலம் முழுவதும்,
பவந் நிவாஸாத் தினே தினே - தாங்கள் அங்கு வசித்ததால் ஒவ்வொரு நாளும்
ப்ரதி வ்ருத்த லக்ஷ்மீ - ஓங்கிவளர்ந்த ஐசுவரியத்தையுடையதாய்
அக்ஷீண மங்கல்யஶத: - என்றும் குன்றாத அனேகம் மங்கள காரியங்களையுடையதாய்
ப்ரமோத ஸாந்த்ர: விரேஜே - ஆனந்தம் நிறைந்ததாய் விளங்கிற்றல்லவா

गृहेषु ते कोमलरूपहास
मिथः कथासङ्कुलिताः कमन्यः ।
वृत्तेषु कृत्येषु भवन्निरीक्षा
समागताः प्रत्यहमत्यनन्दन् ॥ ७॥

க்ருஹேஷு தே கோமல ரூப ஹாஸ -
மித: கதா ஸங்குலிதா: கமன்ய: ।
வ்ருத்தேஷு க்ருத்யேஷு பவந் நிரீக்ஷா -
ஸமாகதா: ப்ரத்யஹமத்யனந்தன் ॥ 7 ॥

| | | |
|---|---|---|
| கமன்ய: க்ருஹேஷு தே | - | கோபிகைகள் தங்கள் தங்கள் வீடுகளில் உமது |
| கோமள ரூப ஹாஸமித: கதா-ஸங்குலிதா: | - | அழகான உருவத்தையும் மந்தஹாஸத்தையும்பற்றி ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளுவதில் ஈடுபட்டவர்களாய் |
| க்ருத்யேஷு வருதேஷு ப்ரத்யஹம் | - | வீட்டுவேலைகள் முடிந்த உடன் ஒவ்வொரு நாளும் |
| பவன் நிரீக்ஷா ஸமாகதா: | - | தங்களைப் பார்ப்பதற்காக வந்து |
| அத்ய நந்தன் | - | மிகவும் மகிழ்ந்தார்கள். |

अहो कुमारो मयि दत्तदृष्टिः
स्मितः कृतं मां प्रति वत्सकेन ।
एह्येहि मामित्युपसार्य पाणिं
त्वयीश किं किं न कृतं वधूभिः ॥ ८॥

அஹோ குமாரோ மயி தத்த த்ருஷ்டி:
ஸ்மிதம் க்ருதம் மாம் ப்ரதி வத்ஸகேன ।
ஏஹ்யேஹி மாமித்யுபஸார்ய பாணிம்
த்வயீஶ கிம் கிம் ந க்ருதம் வதூபி: ॥ 8 ॥

| | | |
|---|---|---|
| "அஹோ | - | "ஆச்சரியம்! |
| குமார: மயிதத்த த்ருஷ்டி:" | - | குழந்தை என்னைப் பார்த்தான்" |
| வத்ஸகேன மாம் ப்ரதி | - | "குழந்தையால் என்னைப்பார்த்து |
| "ஸ்மிதம் க்ருதம் | - | புன்னகை செய்யப்பட்டது |
| "மாம் ஏஹி ஏஹி" | - | "என்னிடத்தில் வா வா" |
| இதி பாணிம் உபஸார்ய | - | என்றும் கையை நீட்டிக்கொண்டு |
| வதூபி: | - | கோபிகைகளால் |
| ஈஶ த்வயி | - | ஈசா! தங்கள் விஷயத்தில் |
| கிம்கிம் ந க்ருதம் | - | என்னென்ன செய்யப்படவில்லை? |

भवद्वपुःस्पर्शनकौतुकेन
करात्करं गोपवधूजनेन ।
नीतस्त्वमाताम्रसरोजमाला
व्यालम्बिलोलम्बतुलामलासीः ॥ ९ ॥

பவத்வபு: ஸ்பர்ஶன கௌதுகேன
கராத்கரம் கோபவதூஜனேன ।
நீதஸ்த்வமாதாம்ர ஸரோஜமாலா
வ்யாலம்பி லோலம்பதுலாமலாஸீ: ॥ 9 ॥

| | | |
|---|---|---|
| கோபவதூ ஜனேன | - | கோபஸ்திரீகளால் |
| பவத்வபு: ஸ்பர்ஶன கௌது கேன | - | தங்கள் திருமேனியைத் தொடுவதின் குதூஹலத்தால் |
| கராத் கரம் | - | ஒரு கையிலிருந்து வேறொரு கைக்கு |
| நீத த்வம் | - | கொண்டுபோகப்பட்ட தாங்கள் |
| ஆதாம்ரஸரோஜமாலா வ்யாலம் விலோலம்ப துலாம் | | சிவந்த தாமரைப் புஷ்பமாலையில் பற்றியிருக்கும் வண்டின் உவமையை |
| அலாஸீ: | - | கைக்கொண்டீர்களல்லவா. |

निपाययन्ती स्तनमङ्कगं त्वां
विलोकयन्ती वदनं हसन्ती ।
दशां यशोदा कतमां न भेजे
स तादृशः पाहि हरे गदान्माम् ॥ १० ॥

நிபாயயந்தீ ஸ்தனமங்ககம் த்வாம்
விலோகயந்தீ வதனம் ஹஸந்தீ ।
தஶாம் யஶோதா கதமாம் ந பேஜே
ஸ தாத்ருஶ: பாஹி ஹரே கதான்மாம் ॥ 10 ॥

| | | |
|---|---|---|
| அங்ககம் த்வாம் | - | மடியிலிருக்கும் தங்களை |
| ஸ்தனம் நிபாயயந்தீ | - | ஸ்தனத்தைப் பருகச் செய்துகொண்டும் |
| வதனம் விலோகயந்தீ | - | திருமுகத்தைப் பார்த்துக்கொண்டும் |
| ஹ்ஸந்தீ யஶோதாம் | - | சிரிக்கின்றவளான யசோதை |
| கதமாம் தஶாம் ந பேஜே | - | எந்த (உத்தம) நிலைமையைத்தான் அடையவில்லை |
| ஹரே | - | ஹே! ஸ்ரீ கிருஷ்ணா! |
| தாத்ருஶ: ஸ: த்வம் | - | அப்படிப்பட்ட தாங்கள் |
| கதாத் மாம் பாஹி | - | வியாதியிலிருந்து என்னைக் காப்பாற்ற வேண்டும். |

இதி ஸ்ரீமந் நாராயணீயே பூதனா ஶரீர தாஹாதி வர்ணனம்
நாம ஏகசத்வாரிம்ஶம் தஶகம்.

[ஆதித ஸ்லோக: 425] [தஶம ஸ்கந்தே ஶ்லோகா: 50]

# தஶகம் - 42

## சகடாஸுர வதம்

कदाऽपि जन्मर्क्षदिने तव प्रभो
निमन्त्रितज्ञातिवधूमहीसुरा ।
महानसस्त्वां सविधे निधाय
सा महानसादौ ववृते व्रजेश्वरी ॥१॥

கதாऽபி ஜன்மர்க்ஷதினே தவ ப்ரபோ
நிமந்த்ரித ஜ்ஞாதி வதூ மஹீஸுரா ।
மஹானஸஸ்த்வாம் ஸவிதே நிதாயஸா
மஹானஸாதௌ வவ்ருதே வ்ரஜேஶ்வரீ ॥ 1 ॥

| | | |
|---|---|---|
| ப்ரபோ கதா அபி | - | பிரபுவே! ஒருக்கால் |
| தவ ஜன்மர்க்ஷ தினே | - | தங்களுடைய பிறந்தநாளன்று |
| வ்ரஜேஸ்வரீ ஸா | - | கோகுலநாயகியான அந்த யசோதை |
| நிமந்த்ரித க்ஞாதிவதூ மஹீஸுரா: த்வாம் | - | பந்துக்களையும், பெண்டுகளையும், பிராம்மணர்களையும் தன் வீட்டிற்கழைத்தவளாய் தங்களை |
| மஹாநஸ: ஸவிதே நிதாய | - | ஒரு பெரும் வண்டியின் பக்கத்தில் படுக்க வைத்து, |
| மஹா ந ஸாதௌ வவ்ருதே | - | அடுக்களை முதலிய இடங்களில் வேலை செய்துக் கொண்டிருந்தாள். |

ततो भवत्त्राणनियुक्तबालक
प्रभीतिसङ्क्रन्दनसङ्कुलारवैः ।
विमिश्रमश्रावि भवत्समीपतः
परिस्फुटद्दारुचटच्चटारवः ॥२॥

ததோ பவத் த்ராண நியுக்த பாலக
ப்ரபீதி ஸங்க்ரந்தன ஸங்குலாரவை: ।
விமிஶ்ர மஶ்ராவி பவத்ஸமீபத:
பரிஸ்புடத்தாரு சடச்சடாரவ: ॥ 2 ॥

| | | |
|---|---|---|
| தத: பவத் ஸமீபத: | - | அப்பொழுது தங்கள் பக்கத்திலிருந்து |
| பவத்ராண நியுக்த பாலக ப்ரபீதிஸங்ருந்தன ஸங்குலா ரவை: விமிஶ்ரம் | | தங்களைக் காப்பாற்றுவதற்காக நியமிக்கப் பட்ட பையன்களுடைய பயத்தாலுண்டான ஆரவாரமும் கூக்குரலும் கூடினதாக, |

பரிஸ்புடத்தாரு சடச்சடாரவ: அஸ்ராவி } உடைகின்ற மரங்களுடைய 'சடசட' என்ற சத்தம் கேட்கப்பட்டது.

ततस्तदाकर्णनसंभ्रमश्रम
प्रकम्पिवक्षोजभरा व्रजाङ्गनाः ।
भवन्तमन्तर्ददृशुः समन्ततो
विनिष्पतद्दारुणदारुमध्यगम् ॥ ३ ॥

ததஸ் ததாகர்ணன ஸம்ப்ரம ஶ்ரம
ப்ரகம்பி வக்ஷோஜ பரா வ்ரஜாங்கனா: ।
பவந்தமந்தர் தத்ருஶு: ஸமந்ததோ
விநிஷ்பதத் தாருண தாருமத்யகம் ॥ 3 ॥

தத: - அப்பொழுது
ததாகர்ணன ஸம்ப்ரம ஸ்ரம ப்ரகம்பிவக்ஷோஜபரா: } அதைக்கேட்டு பரபரப்புடன் ஓடிவந்ததால் உண்டான சிரமத்தால் அசைகின்ற ஸ்தனங்களையுடைய
வ்ரஜாங்கனா: - கோபஸ்திரீகள்,
அந்த: ஸமந்தத: - வீட்டினுள் நாற்பக்கங்களிலும்
விநிஷ்பதத் தாருண தாருமத்யகம் } - பயங்கரமாய் வீழ்கின்ற மரங்களின் நடுவில் இருக்கும்
பவந்தம் தத்ருஶு: - தங்களைக் கண்டார்கள்.

शिशोरहो किं किमभूदिति द्रुतं
प्रधाव्य नन्दः पशुपाश्च भूसुराः ।
भवन्तमालोक्य यशोदया धृतं
समाश्वसन्नश्रुजलार्द्रलोचनाः ॥ ४ ॥

ஶிஶோரஹோ கிம் கிமபூதிதி த்ருதம்
ப்ரதாவ்ய நந்த: பஶுபாஶ்ச பூஸுரா: ।
பவந்த மாலோக்ய யஶோதயா த்ருதம்
ஸமாஶ்வஸன்னஶ்ரு ஜலார்த்ர லோசனா: ॥ 4 ॥

அஹோ ஶிஶோ: - கஷ்டம்! குழந்தைக்கு
கிம் கிம் அபூத் - என்ன நேர்ந்தது? என்ன நேர்ந்தது?
இதி - என்று சொல்லிக்கொண்டு
நந்த: பஶுபா: பூஸுரா: ச } - நந்தகோபனும், இடையர்களும் பிராம்மணர்களும்,
அஸ்ருஜலார்த்ரலோசனா: - கண்ணுங்கண்ணீருமாக
த்ருதம் ப்ரதாவ்ய - சீக்கிரமாக ஓடிவந்து
யஶோதயா த்ருதம் - யசோதையால் கையில் எடுக்கப்பட்ட

பவந்தம் அவலோக்ய ஸமாஸ்வஸன் } - தங்களைப் பார்த்து தேறுதலடைந்தனர்.

कस्को नु कौतस्कुत एष विस्मयो
विशङ्कटं यच्छकटं विपाटितम् ।
न कारणं किञ्चिदिहेति ते स्थिताः
स्वनासिकादत्तकरास्त्वदीक्षकाः ॥ ५ ॥

கஸ்கோ நு கௌதஸ்குத ஏஷ விஸ்ம்யோ
விஶங்கடம் யச்சகடம் விபாடிதம் ।
ந காரணம் கிஞ்சிதிஹேதி தே ஸ்த்திதா:
ஸ்வநாஸிகாதத்த கராஸ் த்வதீக்ஷகா: ॥ 5 ॥

க: க: நு - "இதென்ன? இதென்ன?
கௌதஸ்குத: - எங்கிருந்துண்டானது?
விஶங்கடம் ச ஶகடம் - விசாலமான வண்டியானது
விபாடிதம் யத் - உடைக்கப்பட்டது என்ற
ஏஷ: விஸ்மய: - இது ஆச்சரியமே.
இஹ - இதற்கு இவ்விடத்தில்
கிஞ்சித் காரணம் ந இதி தே } - ஒரு காரணமும் இல்லை" என்று அவர்கள்
ஸ்வநாஸிகா தத்தகரா: - தங்கள் மூக்கில் கையைவைத்துக்கொண்டு
த்வதீக்ஷகா: ஸ்திதா: - தங்களைப் பார்த்துக்கொண்டே இருந்தார்களல்லவா.

कुमारकस्यास्य पयोधरार्थिनः
प्ररोदने लोलपदाम्बुजाहतम् ।
मया मया दृष्टमनो विपर्यगा
दितीश ते पालकबालका जगुः ॥ ६ ॥

குமாரகஸ்யாஸ்ய பயோதரார்த்தின:
ப்ரரோதனே லோல பதாம்புஜாஹதம் ।
மயா மயா த்ருஷ்ட மனோ விபர்யகா -
திதீஶ தே பாலக பாலகா ஜகு: ॥ 6 ॥

பயோதரார்தின: - முலைகுடிக்க விரும்பிய
அஸ்ய குமாரகஸ்ய ப்ரரோதனே } - இந்தக் குழந்தை அழும்பொழுது
லோலபதாம்புஜா ஹதம் } - அசைகின்ற தாமரைபோன்ற காலினால் உதைக்கப்பட்ட
அன: விபர்யகாத் - வண்டி தலைகீழாக வீழ்ந்தது

மயா மயா த்ருஷ்டம் இதி - என்னால் பார்க்கப்பட்டது, என்னால் பார்க்கப்பட்டது என்று
ஈஶ தே பாலக பாலகா: - ஹே! ஈசா! தங்களுக்குக் காவலரான குழந்தைகள்
ஜகு: - சொன்னார்களல்லவா.

भिया तदा किञ्चिदजानतामिदं
कुमारकाणामतिदुर्घटं वचः ।
भवत्प्रभावाविदुरैरितीरितं
मनागिवाशङ्क्यत दृष्टपूतनैः ॥ ७॥

பியா ததா கிஞ்சிதஜானதாமிதம்
குமார காணா மதிதுர்கடம் வச: ।
பவத் ப்ரபாவாவிதுரை ரிதீரிதம்
மனாகிவாஶங்க்யத த்ருஷ்ட பூதனை: ॥ 7 ॥

ததா பியா - அப்பொழுது பயத்தால்
கிஞ்சித் அஜானதாம் - ஒன்றும் அறியாத
குமாரகாணாம் இதம் வச: - சிறு குழந்தைகளுடைய இந்தச் சொல்
அதிதுர்கடம் இதி - பொருத்தமற்றது என்று
பவத் ப்ரபாவா விதுரை: ஈரிதம் - தங்கள் மகிமையையறியாதவர்களால் கூறப்பட்டது.
த்ருஷ்ட பூதனை - பூதனையைக்கண்ட நந்தன் முதலியவர்களால்
மனாக் இவ அஶங்க்யத - சிறிது சந்தேகமடையப்பட்டதல்லவா.

प्रवाळताम्रं किमिदं पदं क्षतं
सरोजरम्यौ नु करौ विरोजितौ ।
इति प्रसर्पत्करुणातरङ्गितास्
त्वदङ्गमापस्पृशुरङ्गनाजनाः ॥ ८॥

ப்ரவாலதாம்ரம் கிமிதம் பதம் க்ஷதம்
ஸரோஜ ரம்யௌ நு கரௌ விரோஜிதௌ ।
இதி ப்ரஸர்ப்பத் கருணாதரங்கிதாஸ் -
த்வதங்கமாபஸ் ப்ருஶுரங்கனா ஜனா: ॥ 8 ॥

ப்ரவாலதாம்ரம் இதம் பதம் - "பவழம்போல் சிவந்த இந்தக்கால்
க்ஷதம் கிம் - அடிபட்டதா என்ன?
ஸரோஜ ரம்யௌ கரௌ - தாமரைபோல் அழகான இருகைகளும்
விரோஜிதௌ நு இதி - புண்பட்டதா என்ன? என்று

| | | |
|---|---|---|
| ப்ரஸர்பத் கருணா தரங்கிதா: | - | கருணைவெள்ளம் பெருகிய |
| அங்கனாஜனா: | - | கோபஸ்திரீகள் |
| த்வதங்கம் ஆபஸ் ப்ருமூ | - | தங்கள் திருமேனியைத் தொட்டுத் தடவினார்களல்லவா. |

अये सुतं देहि जगत्पतेः कृपा
तरङ्गपातात्परिपातमद्य मे ।
इति स्म सङ्गृह्य पिता त्वदङ्गकं
मुहुर्मुहुः श्लिष्यति जीतकण्टकः ॥ ९ ॥

அயே ஸுதம் தேஹி ஜகத்பதே: க்ருபா -
தரங்க பாதாத் பரிபாதமத்ய மே ।
இதி ஸ்ம ஸங்க்ருஹ்ய பிதா த்வதங்ககம்
முஹுர் முஹு: ஶ்லிஷ்யதி ஜாதகண்டக: ॥ 9 ॥

| | | |
|---|---|---|
| "அயே அத்ய | - | ஏ! கோபியே! இப்பொழுது |
| ஜகத்பதே: க்ருபா தரங்கபாதாத் | - | ஜகதீசனுடைய கிருபாகடாக்ஷத்தால் |
| பரிபாதம் | - | நன்கு காப்பாற்றப்பட்ட |
| மே ஸுதம் தேஹி" இதி | - | என் குழந்தையைக் கொடு என்று |
| பிதாஸங்க்ருஹ்ய | - | தங்கள் பிதா கையில் எடுத்துக்கொண்டு |
| ஜாதகண்டக: | - | ரோமாஞ்சமடைந்தவராய் |
| த்வதங்ககம் முஹு:முஹு: | - | தங்களுடைய சிறிய சரீரத்தை அடிக்கடி |
| ஶ்லிஷ்யதி ஸ்ம | - | ஆலிங்கனஞ் செய்துகொண்டாரல்லவா. |

अनोनिलीनः किल हन्तुमागतः
सुरारिरेवं भवता विहिंसितः ।
रजोऽपि नोदृष्टममुष्य तत्कथं
स शुद्धसत्त्वे त्वयि लीनवान्ध्रुवम् ॥ १० ॥

அனோநிலீன: கில ஹந்துமாகத:
ஸுராரிரேவம் பவதா விஹிம்ஸித: ।
ரஜோऽபி நோ த்ருஷ்டமமுஷ்ய தத் கதம்
ஸ ஶுத்த ஸத்வே த்வயி லீனவான் த்ருவம் ॥ 10 ॥

அநோநிலீன: - வண்டியில் ஒளிந்திருந்துகொண்டு
ஹந்தும் ஆகத: ஸுராரி: - தங்களைக் கொல்லவந்த அசுரன்
பவதா ஏவம் விஹிம்ஸித: கில - தங்களால் இவ்விதம் கொல்லப்பட்டான் அல்லவா.
அமுஷ்ய - அந்த அசுரனுடைய
ரஜ: அபிநோ த்ருஷ்டம் - பொடிகூட (ரஜோகுணம்கூட) காணப்பட வில்லை.
தத் கதம் - அது ஏன் என்றால்
த்ருவம் ஸ: - நிச்சயமாக அந்த அசுரன்
ஶுத்த ஸத்வே த்வயி - சுத்த ஸத்துவ ரூபியான தங்களிடம்
லீனவான் - லயித்துவிட்டான் அல்லவா.

प्रपूजितैस्तत्र ततो द्विजातिभिर्विशेषतो लम्भितमङ्गलाशिषः ।
व्रजं निजैर्बाल्यरसैर्विमोहयन्मरुत्पुराधीश रुजां जहीहि मे ॥११॥

ப்ரபூஜிதைஸ் தத்ர ததோத்விகாதிபிர்
விஶேஷதோ லம்பித மங்களாஶிஷ: ।
வ்ரஜம் நிஜைர் பால்யரஸைர் விமோஹயன்
ருஜம் மருத்புராதீஶ ஜஹீஹி ॥ 11 ॥

மருத்புராதீஶ தத: தத்ர - குருவாயூரப்பா! அதன்பிறகு அவ்விடத்தில்
ப்ரபூஜிதை: த்விஜாதிபி - நன்றாகப் பூஜிக்கப்பட்ட பிராம்மணர்களால்
விஸேஷத: - விசேஷமாக
லம்பித மங்களாஸிஷா - மங்களாசீர்வாதஞ் செய்யப்பட்டவரும்,
நிஜை: பால்யரஸை: - தங்களுடைய பாலியசேஷ்டைகளால்
வ்ரஜம் விமோஹயன் - கோகுலத்தை சந்தேகப்படுத்திக் கொண்டிருக்க
ஸ: த்வம் - அந்தத் தாங்கள்
மேருஜாம் ஜஹீஹி - எனது ரோகத்தைப் போக்கடிக்கவேண்டும்

இதி ஸ்ரீமந் நாராயணீயே ஶகடாசுரவத வர்ணனம்
நாம த்விசத்வாரிம்ஶம் தஶகம்.

[ஆதித ஸ்லோக: 436] [தஶம ஸ்கந்தே ஸ்லோகா: 61]

# தஸகம் - 43

## த்ருணாவர்த்த வதம்

त्वमेकदा गुरुमरुत्पुरनाथ वोढुं
गाढाधिरूढगरिमाणमपारयन्ती ।
माता निधाय शयने किमिदं बतेति
ध्यायन्त्यचेष्टत गृहेषु निविष्टशङ्का ॥ १ ॥

த்வமேகதா குருமருத்புர்நாத வோடும்
காடாதிரூட கரிமாண மபாரயந்தீ ।
மாதா நிதாய ஶயனே கிமிதம் பதேதி ।
த்யாயந்த்யசேஷ்டத க்ருஹேஷு நிவிஷ்ட ஶங்கா ॥ 1 ॥

| | |
|---|---|
| குருமருத்புரநாத | - குருவாயூரப்பா! |
| ஏகதா மாதா | - ஒருநாள் தங்கள் தாயான யசோதை |
| காடாதி ரூடகரிமாணம் | - 'கரிமா' என்ற யோகசித்தியை ஏற்று மிகவும் கனமாயிருந்த |
| த்வாமவோடும்அபாரயந்தீ | - தங்களைத் தாங்குவதற்கு முடியாதவளாய் |
| ஸயநே நிதாய | - படுக்கையில் இருத்திவிட்டு |
| கிம் இதம் பத இதி | - இதென்ன கஷ்டமென்று |
| நிவிஷ்ட ஶங்கா | - சங்கைகொண்டவளாய் |
| த்யாயந்தீ | - தங்களையே நினைத்துக்கொண்டு |
| க்ருஹேஷு அசேஷ்டத | - வீட்டு வேலைகளில் புகுந்திருந்தாள் அல்லவா. |

तावद्विदूरमुपकर्णितघोरघोष-
व्याजृम्भिपांसुपटलीपरिपूरिताशः ।
वात्यावपुः स किल दैत्यवरस्तृणाव-
र्ताख्यो जहार जनमानसहारिणं त्वाम् ॥ २ ॥

தாவத்விதூர முபகர்ணித கோர கோஷ
வ்யாஜ்ரும்பி பாம்ஸுபடலீ பரிபூரிதாஶ: ।
வாத்யாவபு: ஸ கில தைத்யவரஸ் த்ருணாவர் -
தாக் யோ ஜஹார ஜன மானஸ ஹாரிணம் த்வாம் ॥ 2 ॥

| | |
|---|---|
| தாவத் விதூரம் | - அப்பொழுது வெகுதூரத்தில் |
| உபகர்ணித கோரகோஷ வ்யாஜ்ரும்பி பாம்ஸு படலீ பரிபூரிதாஸ: | கேட்கப்பட்ட பயங்கர சத்தத்துடன் உயரக் கிளம்பிய தூளிப் படலத்தால் திக்குகளை நிறைப்பவனும், |

வாத்யாவபு: - சுழல்காற்றின் வடிவமுடையவனும்
த்ருணா வர்தாக்ய: - திருணாவர்த்தன் என்று பெயருடையவனுமான
ஸ: தைத்யவர: - அப்பெரும் அசுரன்
ஜனமானஸ ஹாரிணம் த்வாம் } ஜனங்களுடைய மனதைக்கவரும் தங்களை
ஜஹார கில - எடுத்துச் சென்றானல்லவா.

उद्दामपांसुतिमिराहतदृष्टिपाते
द्रष्टुं किमप्यकुशले पशुपाललोके ।
हा बालकस्य किमिति त्वदुपान्तमाप्ता
माता भवन्तमविलोक्य भृशं रुरोद ॥ ३ ॥

உத்தாமபாம்ஸு திமிராஹத த்ருஷ்டிபாதே
த்ரஷ்டும் கிமப்ய குஶலே பஶுபால லோகே ।
ஹா பாலகஸ்ய கிமிதி த்வதுபாந்த மாப்தா
மாதா பவந்தமவிலோக்ய ப்ருஶம் ருரோத ॥ 3 ॥

உத்தாம பாம்ஸு திமிராஹத த்ருஷ்டி பாதே } எல்லையற்ற புழுதிகளாலுண்டான இருட்டினால் பார்வையிழந்த
பஶுபாலலோகே - இடையர்கள்
கிம் அபித்ரஷ்டும்அகுஶலே - ஒன்றையும் பார்க்கமுடியாதிருந்தபொழுது
ஹா பாலகஸ்ய கிம் இதி - ஐயோ! குழந்தைக்கு என்ன நேர்ந்தது? என்று
த்வது பாந்தம் ஆப்தா - தங்கள் பக்கத்தில் வந்த
மாதா - தாயான யசோதை
பவந்தம் அவிலோக்ய - தங்களைக்காணாமல்
ப்ருஶம் ருரோத: - உரக்க அழுதாளல்லவா.

तावत्स दानववरोऽपि च दीनमूर्ति-
र्भावत्कभारपरिधारणलूनवेगः ।
सङ्कोचमाप तदनु क्षतपांसुघोषे
घोषे व्यतायत भवज्जननीनिनादः ॥ ४ ॥

தாவத் ஸ தானவ வரோऽபி ச தீனமூர்த்திர் -
பாவத்க பார பரிதாரண லூன வேக: ।
ஸங்கோசமாப ததனு க்ஷதபாம்ஸுகோஷே
கோஷவ்யதாயத பவஜ்ஜனனீ நிநாத: ॥ 4 ॥

தாவத்ஸ: தானவவர: அபி - அப்பொழுது அப்பெரும் அசுரனும்
பாவத்கபார பரிதாரண லூன வேக: } தங்கள் பாரத்தைச் சுமந்ததால் வேகம் குன்றியவனாய்

| | | |
|---|---|---|
| தீனமூர்தி ஸங்கோசம் ஆப ச | - | உடல் சோர்ந்து அசைவற்றவனாகவும் ஆனான். |
| ததனு | - | அதன்பிறகு |
| க்ஷுதபாம்ஸு கோஷே | - | புழுதியும் சத்தமும் அடங்கிய |
| கோஷே பவஜ்ஜனனீ நிநாத: | - | கோகுலத்தில் தங்கள் தாயின் அழுகைக் குரல் |
| வ்யதாயத | - | பெருகிற்றல்லவா. |

रोदोपकर्णनवशादुपगम्य गेहं
क्रन्दत्सु नन्दमुखगोपकुलेषु दीनः ।
त्वां दानवस्त्वखिलमुक्तिकरं मुमुक्षु-
स्त्वय्यप्रमुञ्चति पपात वियत्प्रदेशात् ॥ ५ ॥

ரோதோப கர்ணன வஶாதுபகம்ய கேஹம்
க்ரந்தத்ஸு நந்தமுக கோப குலேஷு தீன: ।
த்வாம் தானவஸ்த்வகில முக்திகரம் முமுக்ஷுஸ் -
த்வய்யப்ரமுஞ்சதி பபாத வியத்ப்ரதேஶாத் ॥ 5 ॥

| | | |
|---|---|---|
| ரோதோப கர்ணந வஸாத் | - | அழுகையைக் கேட்டதால் |
| கேஹம் உபகம்ய | - | வீட்டிற்கு ஓடிவந்து |
| நந்த்முக கோப குலேஷு | - | நந்தன் முதலிய கோபாலர்களும் |
| க்ரந்தத்ஸு | - | அழுதுகொண்டிருக்கும்பொழுது |
| தானவ: து தீன: | - | அந்த அசுரனும் சோர்வையடைந்தவனாய் |
| அகில முக்திகரம் | - | எல்லோருக்கும் விடுதலையை (முக்தியை) யளிக்கின்ற |
| த்வாம் முமுக்ஷு: | - | தங்களை விட விரும்பியும்கூட |
| திவயி அப்ரமுஞ்சதி | - | தாங்கள் விடாதபொழுது |
| வியத் ப்ரதேஸாத் பபாத் | - | ஆகாயத்திலிருந்து கீழே வீழ்ந்தானல்லவா. |

रोदाकुलास्तदनु गोपगणा बहिष्ठ-
पाषाणपृष्ठभुवि देहमतिस्थविष्ठम् ।
प्रैक्षन्त हन्त निपतन्तममुष्य वक्ष-
स्यक्षीणमेव च भवन्तमलं हसन्तम् ॥ ६ ॥

ரோதாகுலாஸ்ததனு கோபகணு பஹிஷ்ட -
பாஷாணப்ருஷ்ட புவி தேஹமதிஸ்தவிஷ்டம் ।
ப்ரைக்ஷந்த ஹந்த நிபதந்த - மமுஷ்ய வக்ஷ -
ஸ்யக்ஷீணமேவ ச பவந்தமலம் ஹஸந்தம் ॥ 6 ॥

| | | |
|---|---|---|
| ததனு | - | அதன்பிறகு |
| ரோதா குலா கோபகணா | - | அழுதுகொண்டிருந்த இடையர்கள் |

| | | |
|---|---|---|
| பஹிஷ்ட பாஷாண ப்ருஷ்ட புவி | - | வெளியிலிருக்கும் பாறைமேல் |
| நிபதந்தம் அதிஸ்த விஷ்டம் தேஹம் | - | வீழ்கின்ற மிகப்பெருத்த சரீரத்தையும் |
| அமுஷ்ய வக்ஷஸி | - | அதன் மார்பில் |
| அக்ஷீணம் ஏவ | - | களைப்படையாதவனும் |
| அலம் ஹஸந்தம் ச | - | அதனால் நன்றாகச் சிரித்துக் கொண்டும் இருக்கும் |
| பவந்தம் ப்ரைக்ஷந்த ஹந்த | - | தங்களைக் கண்டார்களல்லவா; ஆச்சரியம் |

ग्रावप्रपातपरिपिष्टगरिष्ठदेह-
भ्रष्टासुदुष्टदनुजोपरि धृष्टहासम् ।
आघ्नानमम्बुजकरेण भवन्तमेत्य
गोपा दधुर्गिरिवरादिव नीलरत्नम् ॥ ७॥

க்ராவ ப்ரபாத பரிபிஷ்ட கரிஷ்டதேஹ -
ப்ரஷ்டாஸு துஷ்டதனுஜோபரி த்ருஷ்ட ஹாஸம் ।
ஆக்ஞன மம்புஜகரேண பவந்தமேத்ய
கோபா ததுர்கிரிவராதிவ நீலரத்னம் ॥ 7 ॥

| | | |
|---|---|---|
| க்ராவ ப்ரபாத பரிபிஷ்ட கரிஷ்ட தேஹ ப்ரஷ்டாஸு துஷ்ட தனுஜோபரி | | பாறையில் வீழ்ந்ததால் சிதைந்த பெருத்த சரீரத்திலிருந்து பிராணன் பிரிந்துபோன துஷ்டனான அசுரன் மேல் |
| அம்புஜகரேண ஆக்னானாம் | - | தாமரைபோன்ற கையால் அடித்துக் கொண்டு |
| த்ருஷ்ட ஹாஸம் பவந்தம் | - | உரக்கச் சிரித்துக் கொண்டிருக்கும் தங்களை |
| கோபா: ஏத்ய | - | கோபர்களும் கோபிகைகளும் பக்கத்தில் வந்து |
| கிரிவராத் | - | மாமலையிலிருந்து |
| நீலரத்னம் இவ தது: | - | ஒரு நீலமணியைப்போல எடுத்தார்களல்லவா. |

एकैकमाशु परिगृह्य निकामनन्द-
न्नन्दादिगोपपरिरब्धविचुम्बिताङ्गम् ।
आदातुकामपरिशङ्कितगोपनारी-
हस्ताम्बुजप्रपतितं प्रणुमो भवन्तम् ॥ ८॥

ஏகைகமாஶு பரிக்ருஹ்ய நிகாமநந்தன் -
நந்தாதிகோப பரிரப்த விசும்பிதாங்கம் ।
ஆதாதுகாம பரிஶங்கித கோப நாரீ
ஹஸ்தாம்புஜ ப்ரபதிதம் ப்ரணுமோ பவந்தம் ॥ 8 ॥

அபரம் கைலாஸ ஶைலம் இவ - வேறொரு கைலாஸ மலைபோலிருக்கும்
சலித கருதம் - சிறகுகளை அசைத்துக்கொண்டிருக்கும்
பகம்ப்ரேக்ஷாமாஸு:கலு: - பகாஸுரனை கண்டீர்களல்லவா.

पिबति सलिलं गोपव्राते भवन्तमभिद्रुतः
स किल निगिलन्नग्निप्रख्यं पुनर्द्रुतमुद्वमन् ।
दलयितुमगात्त्रोट्याः कोट्या तदा तु भवान्विभो
खलजनभिदाचुञ्चुश्चञ्चू प्रगृह्य ददार तम् ॥८॥

பிபதி ஸலிலம் கோபவ்ராதே பவந்தமபித்ருத:
ஸ கில நிகிலன்னக்னிப்ரக்யம் புனர்த்ருத முத்வமன் ।
தலயிது மகாத் த்ரோட்யா: கோட்யா ததா து பவான் விபோ
கலஜன பிதா சுஞ்சுச்சஞ்சூ ப்ரக்ருஹ்ய ததார தம் ॥8॥

கோபவ்ராதே ஸலிலம் பிபதி - கோபாலர்கள் ஜலம் குடிக்கும்பொழுது
ஸ: கில பவந்தம் அபித்ருத: - அந்த பகனும் தங்களை எதிர்த்து,
நிகிலன் - விழுங்கி
அக்னி ப்ரக்யம் - நெருப்புக்கொப்பான தங்களை
த்ருதம் உத்வமன் புன: - சீக்கிரமாக வாந்திபண்ணிக்கொண்டு மறுபடியும்
த்ரோட்யா: கோட்யா. - அலகின் நுனியால்
தளயிதும் அகாத் - கிழிக்க வந்தானல்லவா.
து விபோ - ஆனால் பிரபுவே!
கலஜன பிதா சுஞ்சு: - துஷ்டஜனங்களைக் கொல்லுவதில் தேர்ச்சிபெற்ற
பவான் சஞ்சூ ப்ரக்ருஹ்ய - தாங்கள் (அவனுடைய) கீழ்மேல் அலகுகளைப்பிடித்து
தம் ததார - அவனைப் பிளந்தீர்களல்லவா.

सपदि सहजां सन्द्रष्टुं वा मृतां खलु पूतना-
मनुजमघमप्यग्रे गत्वा प्रतीक्षितुमेव वा ।
शमननिलयं याते तस्मिन्बके सुमनोगणे
किरति सुमनोबृन्दं बृन्दावनाद्गृहमैयथाः ॥९॥

ஸபதி ஸஹஜாம் ஸந்த்ரஷ்டும் வா ம்ருதாம் கலு பூதனா-
மனுஜமகமப்யக்ரே கத்வா ப்ரதீக்ஷிதுமேவ வா ।
ஶமன நிலயம் யாதே தஸ்மின் பகே ஸுமனோகணே
கிரதி ஸுமனோ ப்ருந்தம் ப்ருந்தாவனாத் க்ருஹமையதா: ॥9॥

सुरभिलतमा मूर्धन्यूर्ध्वं कुतः कुसुमावली
निपतति तवेत्युक्तो बालैः सहेलमुदैरयः ।
झटिति दनुजक्षेपेणोर्ध्वं गतस्तरुमण्डलात्
कुसुमनिकरस्सोऽयं नूनं समेति शनैरिति ॥ ६ ॥

ஸுரபிலதமா மூர்த்தன்யூர்த்த்வம் குத: குஸுமாவலீ
நிபததி தவேத்யுக்தோ பாலை: ஸஹேல முதைரய: ।
ஜடிதி தனுஜ க்ஷேபேணோர்த்த்வம் கதஸ்தருமண்டலாத்
குஸுமநிகர : ஸோऽயம் நூனம் ஸமேதி ஶனைரிதி ॥ 6 ॥

ஸுரபி லதமா - மிகவும் நறுமணம் வாய்ந்த
குஸுமாவலீ - இந்தப் புஷ்பக்குவியல்
தவ மூர்தனி ஊர்த்வம் - தங்கள் தலைமேல்
குத: நிபததி: - எங்கிருந்து வீழ்கிறது?
இதி பாலை: உக்த: - என்று பாலர்களால் கேட்கப்பட்ட தாங்கள்
தனுஜ க்ஷேபேண தருமண்டலாத் } - அஸுரனையெறிந்ததால் மரக் கூட்டத்திலிருந்து
ஜடிதி ஊர்த்வம் கத: - விரைவாக உயரச்சென்ற
ஸ: அயம் குஸுமநிகர: - அந்தப் புஷ்பக்குவியல்
ஶனை: ஸமேதி நூனம் - மெதுவாகக் கீழே விழுகிறது என்று எண்ணுகிறேன்
இதி ஸஹேலம் உதைரய: } - என்று விளையாட்டாக பதிலளித்தீர்கள் அல்லவா.

क्वचन दिवसे भूयो भूयस्तरे परुषातपे
तपनतनयापाथः पातुं गता भवदादयः ।
चलितगरुतं प्रेक्षामासुर्बकं खलु विस्मृतं
क्षितिधरगरुच्छेदे कैलासशैलमिवापरम् ॥ ७ ॥

க்வசந திவஸே பூயோ பூயஸ்தரே பருஷாதபே
தபநதநயாபாத: பாதும் கதா பவதாதய: ।
சலிதகருதம் ப்ரேக்ஷாமாஸுர் பகம் கலு விஸ்ம்ரும்
க்ஷிதிதர கருச்சேதே கைலாஸ ஶைல மிவாபரம் ॥ 7 ॥

பூய: பூயஸ்தரே பருஷாதபே } - பிறகு மிகவும் கடுமையான வெப்பத்தை உடைய
க்வசன திவஸே - ஒருநாள்,
தபன தனயாபாத: பாதும் கதா: } - யமுனாஜலத்தை குடிக்கச்சென்ற
பவதாதய: - தாங்களும் மற்றவர்களும்
க்ஷிதிதர கருச்சேதே - ... அப்பொழுது

| | | |
|---|---|---|
| அபரம் கைலாஸ ஶைலம் இவ | - | வேறொரு கைலாஸ மலைபோலிருக்கும் |
| சலித கருதம் | - | சிறகுகளை அசைத்துக்கொண்டிருக்கும் |
| பகம்ப்ரேக்ஷாமாஸு:கலு: | - | பகாஸுரனை கண்டீர்களல்லவா. |

पिबति सलिलं गोपव्राते भवन्तमभिद्रुत:
स किल निगिलन्नग्निप्रख्यं पुनर्द्रुतमुद्वमन् ।
दलयितुमगात्त्रोट्या: कोट्या तदा तु भवान्विभो
खलजनभिदाचुञ्चुश्चञ्चू प्रगृह्य ददार तम् ॥ ८॥

பிபதி ஸலிலம் கோபவ்ராதே பவந்தமபித்ருத:
ஸ கில நிகிலன்னக்னிப்ரக்யம் புனர்த்ருத முத்வமன் ।
தலயிது மகாத் த்ரோட்யா: கோட்யா ததா து பவான் விபோ
கலஜன பிதா சுஞ்சுச்சஞ்சூ ப்ரக்ருஹ்ய ததார தம் ॥8॥

| | | |
|---|---|---|
| கோபவ்ராதே ஸலிலம் பிபதி | | கோபாலர்கள் ஜலம் குடிக்கும்பொழுது |
| ஸ: கில பவந்தம் அபித்ருத: | - | அந்த பகனும் தங்களை எதிர்த்து, |
| நிகிலன் | - | விழுங்கி |
| அக்னி ப்ரக்யம் | - | நெருப்புக்கொப்பான தங்களை |
| த்ருதம் உத்வமன் புன: | - | சீக்கிரமாக வாந்திபண்ணிக்கொண்டு மறுபடியும் |
| த்ரோட்யா: கோட்யா. | - | அலகின் நுனியால் |
| தளயிதும் அகாத் | - | கிழிக்க வந்தானல்லவா. |
| து விபோ | - | ஆனால் பிரபுவே! |
| கலஜன பிதா சுஞ்சு: | - | துஷ்டஜனங்களைக் கொல்லுவதில் தேர்ச்சிபெற்ற |
| பவான் சஞ்சூ ப்ரக்ருஹ்ய | - | தாங்கள் (அவனுடைய) கீழ்மேல் அலகுகளைப்பிடித்து |
| தம் ததார | - | அவனைப் பிளந்தீர்களல்லவா. |

सपदि सहजां सन्द्रष्टुं वा मृतां खलु पूतना
मनुजमघमप्यग्रे गत्वा प्रतीक्षितुमेव वा ।
शमननिलयं याते तस्मिन्बके सुमनोगणे
किरति सुमनोबृन्दं बृन्दावनाद्गृहमैयथा: ॥ ९॥

ஸபதி ஸஹஜாம் ஸந்த்ரஷ்டும் வா ம்ருதாம் கலு பூதனா-
மனுஜமகமப்யக்ரே கத்வா ப்ரதீக்ஷிதுமேவ வா ।
ஶமன நிலயம் யாதே தஸ்மின் பகே ஸுமனோகணே
கிரதி ஸுமனோ ப்ருந்தம் ப்ருந்தாவனாத் க்ருஹ மையதா: ॥9॥

| | | |
|---|---|---|
| ம்ருதாம் ஸஹஜாம் பூதனாம் | - | முதலில் இறந்த ஸஹோதரியான பூதனையை |
| ஸபதி ஸம்த்ரஷ்டும் கலு வா | - | சீக்கிரத்தில் சென்று பார்ப்பதற்கோ, அல்லது |
| அக்ரே கத்வா அனுஜம் அகம் அபி | | முதலில் சென்று தம்பியான அகாசுரனையும் |
| ப்ரதீக்ஷிதும் ஏவ வா | - | எதிர்பார்ப்பதற்காகவேதானோ, |
| தஸ்மின் பகே | - | அந்த பகாசுரன் |
| ஶமந நிலயம் யாதே | - | யமலோகத்தையடைந்தபொழுது, |
| ஸுமனோகணே | - | தேவர்கள் |
| ஸுமனோப்ருந்தம் கிரதி | - | புஷ்பக்குவியலை வாரியிறைக்கும் பொழுது |
| ப்ருந்தாவநாத் | - | பிருந்தாவனத்திலிருந்து |
| க்ருஹம் ஐயதா: | - | வீட்டிற்குச் சென்றீர்களல்லவா. |

लळितमुरळीनादं दूरान्निशम्य वधूजनै
स्त्वरितमुपगम्याराादारूढमोदमुदीक्षितः ।
जनितजननीनन्दानन्दस्समीरणमन्दिर
प्रथितवसते शौरे दूरीकुरुष्व ममामयान् ॥ १० ॥

லலித முரளீநாதம் தூராந் நிஶம்ய வதூஜனைஸ்-
த்வரித முபகம்யாராதாரூட மோத முதீக்ஷித: ।
ஜனித ஜனனீ நந்தானந்த : ஸமீரண மந்திர
ப்ரதித வஸதே ஶௌரே தூரீ குருஷ்வ மமாமயான்: ॥ 10 ॥

| | | |
|---|---|---|
| ஸமீரண மந்திர ப்ரதித வஸதே | - | குருவாயூரில் பிரஸித்தமாக வாழும் |
| ஶௌரே: | - | சூரவம்சத்தில் பிறந்த ஹே கிருஷ்ணா! |
| தூராந் | - | தூரத்திலிருந்து |
| லலித முரளீ நாதம் நிஶம்ய | - | இனிமையான புல்லாங்குழல் சத்தத்தைக் கேட்டு, |
| வதூஜனை: | - | கோபிகைகளால் |
| த்வரிதம் ஆராத் உபகம்ய | - | சீக்கிரமாக பக்கத்தில் வந்து, |
| ஆரூடமோதம் உதீக்ஷித: | - | மிக ஸந்தோஷத்துடன் பார்க்கப்பட்டவரும், |
| ஜனித ஜனனீ நந்தானந்த: | - | யசோதைக்கும் நந்தகோபருக்கும் ஆனந்தத்தையுண்டு பண்ணியவருமான தாங்கள் |
| மமஆமயான்தூரீகுருஷ்வ | - | எனது சோகங்களை விலக்கவேண்டும். |

இதி ஸ்ரீமந் நாராயணீயே வத்ஸாஸுர், பகாஸுர வதவர்ணனம் நாம பஞ்சாஸம் தஶகம்.

[ஆதித: ஶ்லோகா: 516] [தஶமஸ்கந்த ஸ்லோக: 141]

# தஶகம் - 51

## அகாஸுர வதம்

कदाचन व्रजशिशुभिः समं भवान्
वनाशने विहितमतिः प्रगेतराम् ।
समावृतो बहुतरवत्समण्डलैः
सतेमनैर्निरगमदीश जेमनैः ॥ १ ॥

கதாசன வ்ரஜஶிஶுபி: ஸமம் பவான்
வனாஶனே விஹிதமதி: ப்ரகேதராம் ।
ஸமாவ்ருதோ பஹுதர வத்ஸமண்டலை:
ஸதேமனைர் நிரகம தீசஜேமனை: ॥ 1 ॥

ஈஶ பவான் கதாசன - ஹே ஸர்வேசுவர! தாங்கள் ஒருநாள்
வ்ரஜ ஶிஶுபி: ஸமம் - பாலகோபர்களுடன்
வநாஶனே விஹிதமதி - வனபோஜனஞ்செய்ய தீர்மானம் பண்ணிக்கொண்டு
ப்ரகேதராம் பஹுதர வத்ஸ மண்டலை: } அதிகாலையில் பற்பலக் கன்றுக் கூட்டங்களால்
ஸமாவ்ருத: - சூழப்பட்டவராய்
ஸதேமனை: ஜேமனை: - ஊறுகாயுடன் கூடின கட்டுச்சோற்றுடன்
நிரகமத் - வெளிச்சென்றீரல்லவா.

विनिर्यतस्तव चरणाम्बुजद्वया
दुदञ्चितं त्रिभुवनपावनं रजः ।
महर्षयः पुलकधरैः कलेबरै
रुदूहिरे धृतभवदीक्षणोत्सवाः ॥ २ ॥

விநிர்யதஸ்தவ ஶரணாம்புஜத்வயா-
துதஞ்சிதம் த்ரிபுவன பாவனம் ரஜ:
மஹர்ஷய: புலகதரை: களேபரை
உதூஹிரே த்ருதபவதீக்ஷணோத்ஸவா: ॥ 2 ॥

விநிர்யத: - வெளிக்கிளம்பி செல்லுகின்ற
தவசரணாம்புஜத்வயாத் - தங்கள் திருவடி மலர்களிரண்டிலிருந்து
உதஞ்சிதம் திரிபுவன பாவனம் } - கிளம்பின மூவுலகங்களையும் பரிசுத்த மாக்குகிற
ரஜ: மஹர்ஷய: - பொடியை மஹரிஷிகள்
த்ருதபவதீக்ஷணோத் ஸவா } - உமது தர்சனோத்ஸவத்தை யனுபவித்துக் கொண்டு

| | | |
|---|---|---|
| புலகதரை: களேபரை: உதூஹிரே | - | மயிர்ச்சிலித்த சரீரங்களால் வஹித்தார்கள். |

प्रचारयत्यविरलशाद्वले तलेपशून्विभो भवतिसमंकुमारकैः ।
अघासुरो न्यरुणदघाय वर्तनींभयानकः सपदि शयानकाकृतिः ॥

ப்ரசாரயத்யவிரல ஶாத்வலே தலே
பஶூன் விபோ பவதி ஸமம் குமாரகை: ।
அகாஸுரோ ந்யருணதகாய வர்தனீம்
பயானக: ஸபதி ஶயானகா க்ருதி: ॥3॥

| | | |
|---|---|---|
| விபோ பவதி | - | ஸர்வேசுவர! தாங்கள் |
| குமாரகை: ஸமம் | - | சிறுவர்களுடன் |
| அவிரலஶாத்வலே தலே | - | பச்சைப்புல் நிறைந்த தறையில் |
| பஶூன்ப்ரசாரயதி அகாஸுர:- | | பசுக்களை மேய்க்கும்பொழுது அகாசுரன் |
| அகாய | - | தீங்கிழைப்பதற்கு (தன் பாபங்கள் நசிப்பதற்கு) |
| பயானக: ஶயானகாக்ருதி: | - | மிக பயங்கரமான மலைப்பாம்பு உருவத்துடன் |
| ஸபதி வர்தனீம் ந்யருணத் | - | திடீரென்று வழிமறைத்தானல்லவா. |

महाचलप्रतिमतनोर्गुहानिभप्रसारितप्रथितमुखस्य कानने ।
मुखोदरं विहरणकौतुकाद्गताःकुमारकाः किमपि विदूरगे त्वयि ॥

மஹாசல ப்ரதிமதனோர் குஹா.
நிப ப்ரஸாரித முகஸ்ய கானனே ।
முகோதரம் விஹரண கௌதுகாத்கதா:
குமாரகா: கிமபி விதூரகே த்வயி ॥4॥

| | | |
|---|---|---|
| குமாரகா: த்வயி | - | அச்சிறுவர்களும் தாங்கள் |
| கிமபி விதூரகே | - | சிறிது எட்டிச்சென்ற பொழுது |
| கானனே விஹரண கௌதுகாத் | - | காட்டில் விளையாட ஆவலால் |
| மஹாசல ப்ரதிமதனோ:- | | மாமலைபோன்ற சரீரமுடையவனும், |
| குஹாநிப ப்ரஸாரித: ப்ரதிதமுகஸ்ய | - | குகைபோல் துறக்கப்பட்ட அகன்ற வாயை உடையவனுமான அந்த அகாஸுரனுடைய |
| முகோதரம் கதா: | - | வாய்க்குள் சென்றனரல்லவா. |

प्रमादतः प्रविशति पन्नगोदरंक्वथत्तनौ पशुपकुले सवात्सके ।
विदन्निदं त्वमपि विवेशिथ प्रभोसुहृज्जनं विशरणमाशु रक्षितुम् ॥५॥

ப்ரமாதத: ப்ரவிஶதி பன்னகோதரம்
க்வதத்தநௌ பஶுபகுலே ஸவத்ஸகே ।
விதந்நிதம் த்வமபி விவேஶிச ப்ரபோ
ஸுஹ்ருஜ்ஜனம் விஶரண மாஶு ரக்ஷிதும் ॥5॥

| | | |
|---|---|---|
| ப்ரபோ பஶுபகுலே | - | ஹே பிரபுவே! கோபாலர்களும் |
| ஸவத்ஸகே ப்ரமாத த: | - | கன்றுகளுடன் மதியீனத்தால் |
| பன்னகோதரம் ப்ரவிஶதி | - | பாம்பின் வயிற்றில் செல்லும்பொழுதே |
| க்வதத்தனௌ | - | சரீரம் வெந்தவர்களானபொழுது |
| இதம் விதன் த்வம் அபி | - | இதையறிந்த தாங்களும் |
| விசரணம் ஸுஹ்ருஜ்ஜனம் | - | சரணமற்றவர்களான தோழர்களை |
| ரக்ஷிதும் ஆஶு விவேசித | - | காப்பாற்ற விரைவாக உட்சென்றீர்களல்லவா. |

गळोदरे विपुलितवर्ष्मणा त्वयामहोरगे लुठतिनिरुद्धमारुते ।
द्रुतं भवान्विदलितकण्ठमण्डलोविमोचयन्पशुपशून् विनिर्ययौ ॥

கலோதரே விபுலித வர்ஷ்மணா த்வயா
மஹோரகே லுடதி நிருத்த மாருதே ।
த்ருதம் பவான் விதலித கண்ட மண்டலோ
விமோசயன் பஶு பஶூன் விநிர்யயௌ ॥ 6 ॥

| | | |
|---|---|---|
| கலோதரே | - | கழுத்தின் நடுவில் |
| விபுலித வர்ஷ்மணாத் வயா | - | வளர்க்கப்பட்ட சரீரத்தையுடைய தங்களால் |
| நிருத்த மாருதே | - | தகையப்பட்ட மூச்சுக்காற்றையுடையதாய் |
| மஹோரகே லுடதி | - | மலைப்பாம்பு (தரையில்) புரளும்பொழுது |
| பவான் த்ருதம் | - | தாங்கள் சீக்கிரமாக |
| விதளித கண்ட மண்டல: | - | அவன் கழுத்தைப்பிளந்துகொண்டு |
| பஶு பஶூன் | - | கோபர்களையும் பசுக்களையும் |
| விமோசயன் | - | விடுவித்துக்கொண்டு |
| விநிர்யயௌ | - | வெளியே வந்தீர்களல்லவா. |

क्षणं दिवि त्वदुपगमार्थमास्थितं
महासुरप्रभवमहो महो महत् ।
विनिर्गते त्वयि तु निलीनमञ्जसा
नभःस्थले ननृतुरथो जगुस्सुराः ॥ ७ ॥

க்ஷணம் திவி த்வதுபகமார்த்த மாஸ்த்திதம்
மஹாஸுரப்ரபவ மஹோ மஹோ மஹத் ।
விநிர்கதே த்வயி து நிலீன மஞ்ஜஸா
நப: ஸ்த்தலே நந்ருதுரதோ ஜகு: ஸுரா: ॥ 7 ॥

| | | |
|---|---|---|
| த்வதுபகமார்தம் | - | தங்களையடைவதற்காக (தாங்கள் வெளிவருவதற்காக) |
| க்ஷணம் திவி ஆஸ்திதம் | - | சிறிதுநேரம் ஆகாசத்தில் காத்துநின்றிருந்த |
| மஹாஸுர ப்ரபவம் | - | பெரும் அசுரனிடத்திலிருந்துண்டான |
| மஹத்மஹ: அஞ்ஜஸா | - | பெரும் சோதியானது விரைவாக |
| த்வயி விநிர்கதே து | - | தாங்கள் வெளியே வந்தவுடன் |

நிலீனம் - தாங்களிடத்தில் புகுந்ததல்லவா (லயித்ததல்லவா);
அஹோ - ஆச்சரியம்.
அதோ நப: ஸ்தலே - அப்பொழுது ஆகாசத்தில்
ஸுரா: நந்ருது: - தேவர்கள் ஆடினார்கள்;
ஜகு: - பாடவுஞ்செய்தார்கள்.

सविस्मयैः कमलभवादिभिः सुरै
रनुद्रुतस्तदनु गतः कुमारकैः ।
दिने पुनस्तरुणदशामुपेयुषि
स्वकैर्भवानतनुत भोजनोत्सवम् ॥ ८ ॥

ஸ விஸ்மயை: கமலபவாதிபி: ஸுரை-
ரனுத்ருதஸ் ததனு கத: குமாரகை: ।
தினே புனஸ்தருண தஶாமுபேயுஷி
ஸ்வகைர்ப்பவானதனுத போஜனோத்ஸவம் ॥8॥

த்தனு பவான் ஸவிஸ்மயை: - அதன்பிறகு தாங்கள், ஆச்சரியமடைந்த
கமல பவாதிபி: - பிரம்மதேவர் முதலிய
ஸுரை: அனுத்ருத: - தேவர்களால் பின்தொடரப்பட்டவராய்
ஸ்வகை: குமாரகை - தன்னைச்சேர்ந்த சிறுவர்களுடன்
கத: தினே புன: - வேறிடத்திற்குச் சென்று ப்கலும்
தருணதஶாம் உபேயுஷி: - தாருண்யத்தையடைந்தபொழுது (உச்சியானபொழுது)
போஜநோத்ஸவம்அதனுத - போஜனஞ்செய்தீரல்லவா.

विषाणिकामपि मुरलीं नितम्बके
निवेशयन्कबळधरः कराम्बुजे ।
प्रहासयन्कलवचनैः कुमारकान्
बुभोजिथ त्रिदशगणैर्मुदा नुतः ॥ ९ ॥

விஷாணிகாமபி முரலீம் நிதம்பகே
நிவேஶயன் கபலதர: கராம்புஜே ।
ப்ரஹாஸயன் கலவசனை: குமாரகான்
புபோஜித த்ரிதசகணைர் முதா நுத: ॥9॥

| | | |
|---|---|---|
| விஷாணிகாம் | - | கொம்பையும் |
| முரளீம் அபி | - | வேணுவையும் (புல்லாங்குழலையும்) |
| நிதம்பகே நிவேஶயன் | - | இடையில் வைத்துக்கொண்டும் |
| கராம்புஜே | - | தாமரைபோன்ற கையில் |
| கமலதர: | - | அன்னகவளத்தை வைத்துக்கொண்டும் |
| கலவசனை: | - | இனிமையான சொற்களால் |
| குமாரகான் ப்ரஹாஸயன் | - | சிறுவர்களை சிரிக்கச் செய்துகொண்டும், |
| முதா | - | சந்தோஷத்துடன் |
| த்ரிதஶகணை: நுத | - | தேவகணங்களால் துதிக்கப்பட்டும் |
| புபோஜித | - | தாங்கள் போஜனஞ் செய்தீர்களல்லவா. |

सुखाशनं त्विह तव गोपमण्डले
मखाशनात्प्रियमिव देवमण्डले ।
इति स्तुतस्त्रिदशवरैर्जगत्पते
मरुत्पुरीनिलय गदात्प्रपाहि माम् ॥ १० ॥

ஸுகாஶனம் த்விஹ தவ கோபமண்டலே
மகாஶனாத் ப்ரியமிவ தேவ மண்டலே ।
இதி ஸ்துதஸ்த்ரிதஶவரைர் ஜகத்பதே
மருத் புரீ நிலய கதாத் ப்ரபாஹி மாம் ॥ 10 ॥

| | | |
|---|---|---|
| மருத்புரீநிலய ஜக்த்பதே | - | குருவாயூரில் குடிகொண்டிருக்கும் ஹே ஜகதீசுவரா! |
| தவ இஹ கோப மண்டலே | - | தங்களுக்கு இந்த வனத்தில் கோபாலர் கூட்டத்தில் |
| ஸுகாஶனம் து | - | சுகமான போஜனந்தான் |
| தேவ மண்டலே | - | தேவர்கூட்டத்தில் |
| மகாஶனாத் | - | யாகத்தில் ஹவிஸ்ஸை பக்ஷிப்பதைவிட |
| ப்ரியம் இவ இதி | - | மிகப் பிரியம் போலிருக்கிறது என்று |
| த்ரி தஶவரை: ஸ்துத | - | தேவர் பெரியோர்களால் ஸ்துதிக்கப்பட்ட தாங்கள் |
| மாம் கதாத் ப்ரபாஹி | - | என்னை வியாதியிலிருந்து நன்கு காப்பாற்றவேண்டும். |

இதி ஶ்ரீமந் நாராயணீயே அகாஸுர வத வர்ணனம்
நாம ஏக பஞ்சாஶம் தஶகம் ஸமாப்தம்.

[ஆதித: ஶ்லோகா: 526] [தஶமஸ்கந்த ஶ்லோகா: 151]

# தஶகம் - 52

## பிரம்மாவின் வத்ஸாபஹாரம்

अन्यावतारनिकरेष्वनिरीक्षितं ते
भूमातिरेकमभिवीक्ष्य तदाऽघमोक्षे ।
ब्रह्मा परीक्षितुमनाः स परोक्षभावं
निन्येऽथ वत्सकगणान्प्रवितत्य मायाम् ॥ १॥

அன்யாவதார-நிகரேஷ்வநிரீக்ஷிதம் தே
பூமாதிரேக-மபிவீக்ஷ்ய ததாக் கமோக்ஷே ।
ப்ரஹ்மா பரீக்ஷிது மனா: ஸ பரோக்ஷபாவம்
நின்யேஸ் த வத்ஸக கணான் ப்ரவிதத்ய மாயாம் ॥1॥

| | |
|---|---|
| அன்யாவதார நிகரேஷு - | மற்ற அவதாரங்களில் |
| அநிரீக்ஷிதம் - | காணப்படாத |
| தே பூமாதி ரேகம் - | தங்களுடைய ஐசுவரியத்தின் மேன்மையை |
| ததா அகமோக்ஷே - | அந்த அகாசுரமோக்ஷத்தில் |
| அபிவீக்ஷ்ய ஸ: ப்ரம்ஹா - | பிரத்யக்ஷமாகக்கண்டு, அந்த பிரம்மதேவர் |
| பரீக்ஷிது மனா: - | மறுபடியும் சோதிக்க எண்ணியவராய் |
| அத மாயாம் ப்ரவிதத்ய - | அப்பொழுது மாயையை பிரயோகித்து |
| வத்ஸகணான் - | கன்றுக்கூட்டங்களை |
| பரோக்ஷ பாவம் நின்யே - | கண்களுக்குப் புலன்படாத அவஸ்தையை அடைவித்தார். |

वत्सानवीक्ष्य विवशे पशुपोत्करे ता-
नानेतुकाम इव धातृमतानुवर्ती ।
त्वं सामिभुक्तकबलो गतवांस्तदानीं
भुक्तांस्तिरोधित सरोजभवः कुमारान् ॥ २॥

வத்ஸானவீக்ஷ்ய விவஶே பஶுபோத்கரே தா-
னானேது காம: இவ தாத்ரு மதானுவர்த்தீ ।
த்வம் ஸாமி புக்த-கபலோ கதவாம் ஸ்ததானீம்
புக்தாம் ஸ்திரோதித ஸரோஜபவ: குமாரான் ॥2॥

| | |
|---|---|
| வத்ஸான் அவீக்ஷ்ய - | கன்றுகளைக் காணாமல் |
| பஶுபோத்கரேவிவஶே - | கோபாலர்கள் கலங்கியபொழுது |
| தான் ஆநேது காம: இவ - | அவைகளைக்கொண்டுவர விரும்பியவர் போல |

| | | |
|---|---|---|
| தாத்ரு மதானு வர்த்தீ த்வம் | - | பிரம்மதேவருடைய இஷ்டத்தை அனுசரித்து தாங்கள் |
| ஸாமிபுக்த கபள: | - | பாதி உண்ட அன்னகபளத்தை உடையவராய் |
| ததானீம் கதவான் | - | அப்பொழுது சென்றீரல்லவா. |
| ஸரோஜபவ: புக்தான் | - | பிரம்மதேவரும் சாப்பிட்டுக் கொண்டிருந்த |
| குமாரான் திரோஹித | - | சிறுவர்களையும் மறைத்தாரல்லவா. |

वत्सायितस्तदनु गोपगणायितस्त्वं
शिक्यादिभाण्डमुरलीगवलादिरूप: ।
प्राग्वद्विहृत्य विपिनेषु चिराय सायं
त्वं माययाथ बहुधा व्रजमाययाथ ॥ ३॥

வத்ஸாயிதஸ் ததனு கோப கணாயித ஸ்த்வம்
சிக்யாதி பாண்ட முரலீ கவலாதிரூப: ।
ப்ராக்வத்விஹ்ருத்ய விபினேஷு சிராய ஸாயம்
த்வம் மாயயாऽத பஹுதா வ்ரஜமாயயாத ॥3॥

| | | |
|---|---|---|
| ததனு த்வம் மாயயா | - | அதன்பிறகு தாங்கள் மாயையினால் |
| வத்ஸாயித: | - | கன்றுகளாக பவித்தும் |
| கோபகணாயித: | - | கோபாலர்களாகவும் பவித்தும், |
| ஶிக்யாதி பாண்ட முரளீகவலாதிரூப: | - | உறி, அதிலிருக்கும் பாத்திரங்கள், புல்லாங்குழல்கள், கொம்புவாத்தியங்கள் இவைகளுடைய ரூபத்தை யுடையவராகவும் |
| ப்ராக்வத் விபினேஷு | - | முன்போலவே காடுகளில் |
| சிராய பஹுதா விஹ்ருத்ய அத | - | வெகுநேரம் பலவாறாக விளையாடிய பிறகு |
| ஸாயம் வ்ரஜம் ஆயயாத | - | மாலைப்பொழுதில் கோகுலத்திற்கு வந்தீர்களல்லவா. |

त्वामेव शिक्यागवलादिमयं दधानो
भूयस्त्वमेव पशुवत्सकबालरूप: ।
गोरूपिणीभिरपि गोपवधूमयीभि
रासादितोऽसि जननीभिरतिप्रहर्षात् ॥ ४॥

த்வாமேவ ஶிக்யா-கவலாதிமயம் ததானோ
பூயஸ்த்வமேவ பஶுவத்ஸக-பாலரூப: ।
கோரூபிணீபிரபி கோபவதூமயீபி-
ராஸாதிதோऽஸி ஜனனீபிரதி ப்ரஹர்ஷாத் ॥4॥

பூய: பஶுவத்ஸக பால ரூப: த்வம் ஏவ - பிறகு கன்றுகளுடையவும், சிறுவர்களுடையவும் உருவந்தரித்த தாங்களே,
ஶிக்யகவலாதி மயம் - உறி, கொம்புவாத்தியம் முதலானதாக பவித்த
த்வாம் ஏவ ததான: - தாங்களையே எடுத்துக்கொண்டு
கோரூபிணீபி: - பசுக்களும்
கோபவதூமயீபி: அபி ஜனனீபி: - கோபஸ்திரீகளுமாகிற தாய்மார்களால்
அதிப்ரஹர்ஷாத் - அதிக ஸந்தோஷத்துடன்
ஆஸாதித: அஸி - அடையப்பட்டீர்களல்லவா.

जीवं हि किञ्चिदभिमानवशात्स्वकीयं
मत्वा तनुज इति रागभरं वहन्त्यः ।
आत्मानमेव तु भवन्तमवाप्य सूनुं
प्रीतिं ययुर्न कियतीं वनिताश्च गावः ॥ ५ ॥

ஜீவம் ஹி கஞ்சிதபிமான வஶாத்ஸ்வகீயம்
மத்வா தனூஜ இதி ராகபரம் வஹந்த்ய: ।
ஆத்மானமேவ து பவந்த-மவாப்ய ஸூனும்
ப்ரீதிம் யயுர்-ந கியதீம் வனிதாஶ்ச காவ: ॥5॥

கஞ்சித் ஜீவம் - (இன்னானென்று தெரியாத) ஒரு ஜீவனை
தனூஜ: இதி அபிமான வஶாத் - பிள்ளையென்ற அபிமானம் காரணமாக
ஸ்வகீயம் மத்வா - தன்னைச் சேர்ந்தவன் என்றெண்ணி (ஒருவன்)
ராகபரம் வஹந்த்ய: ஹி - மிக வாத்ஸல்யத்தை (அன்பை) வைக்கும்பொழுது
வனிதா: காவ: ச - கோபிகைகளும், பசுக்களும்
ஆத்மானம் ஏவ பவந்தம் - தமது ஆத்மாவாகவே இருக்கும் தங்களை
ஸூனும் அவாப்ய து - பிள்ளையாக அடைந்த உடன்
கியதீம் ப்ரீதிம் ந யயு: - எவ்வளவு ஸந்தோஷத்தை அடைந்திருக்க மாட்டார்கள்.

एवं प्रतिक्षणविजृम्भितहर्षभार
निश्शेषगोपगणलालितभूरिमूर्तिम् ।
त्वामग्रजोऽपि बुबुधे किल वत्सरान्ते
ब्रह्मात्मनोरपि महान्युवयोर्विशेषः ॥ ६ ॥

ஏவம் ப்ரதிக்ஷண விஜ்ரும்பித ஹர்ஷபார
நி:ஶேஷ கோபகண லாலித பூரி மூர்த்திம் ।
த்வா மக்ரஜோऽபி புபுதே கில வத்ஸராந்தே
ப்ரஹ்மாத்மநோரபி மஹான் யுவயோர் விஶேஷ: ॥ 6 ॥

ஏவம் - இவ்விதம்
ப்ரதிக்ஷண விஜ்ரும்பித ஹர்ஷ பார நிஶ்ஶேஷ கோப கண லாலித பூரி மூர்திம் } ஒவ்வொரு வினாடியிலும் வளருகின்ற அதிகமான சந்தோஷத்தையுடைய ஸமஸ்த கோபர்களாலும் சீராட்டப்பட்ட அனேக சரீரங்களையுடைய
த்வாம் அக்ரஜ: அபி - தங்களை தமயனான பலராமன்கூட
வத்ஸராந்தே கில புபுதே - வருஷ முடிவில் தானல்லவா அறிந்தார்.
ப்ரஹ்மாத்மநோ: அபி - பரப்பிரம்ம ரூபிகளாக இருந்துங்கூட
யுவயோ: - உங்களிருவருக்கும்
மஹான் விஶே ஷ: - மஹத்தான பேதமுண்டு.

वर्षावधौ नवपुरातनवत्सपालान्
दृष्ट्वा विवेकमसृणे द्रुहिणे विमूढे ।
प्रादीदृशः प्रतिनवान्मकुटान्गदादि
भूषांश्चतुर्भुजयुजः सजलाम्बुदाभान् ॥ ७ ॥

வர்ஷாவதௌ நவ புராதன வத்ஸ பாலான்
த்ருஷ்ட்வா விவேக மஸ்ருணே த்ருஹிணே விமூடே ।
ப்ராதீத்ருஶ: ப்ரதிநவான் மகுடாங்கதாதி-
பூஷாம்ஶ்சதுர்ப்புஜ யுஜ: ஸஜலாம்புதாபான் ॥ 7 ॥

வர்ஷாவதௌ - வருஷமுடிவில்
நவ புராதன வத்ஸ பாலான் த்ருஷ்ட்வா } - புதியவர்களும், பழையவர்களுமான கன்றுகளையும் கோபாலர்களையும் கண்டு,
த்ருஹிணே விவேக மஸ்ருணே } - பிரம்மதேவர் பகுத்தறிய முடியாதவராய்
விமூடே - மயக்கத்தையடைந்தபொழுது
ப்ரதிநவான் - புதிதான ஒவ்வொருவரையும் (கன்றுகளையும் கோபாலர்களையும்)
மகுடாங்கதாதி பூஷான் } - கிரீடம், தோள்வளை முதலிய அலங்காரமுடையவர்களாகவும்,
சதுர்புஜ யுஜ: - நான்கு கைகளையுடையவர்களாகவும்
ஸ ஜலாம்புதாபான் - நீருண்ட மேகம்போன்ற நிறமுடையவர்களாகவும்
ப்ராதீத்ருஶ: - காண்பித்தீர்களல்லவா.

प्रत्येकमेव कमलापरिलालिताङ्गान्
भोगीन्द्रभोगशयनान्नयनाभिरामान् ।
लीलानिमीलितदृशः सनकादियोगि
व्यासेवितान्कमलभूर्भवतो ददर्श ॥ ८ ॥

ப்ரத்யேகமேவ கமல பரிலாலிதாங்கான்
போகீந்த்ர போகஶயனாந் நயனாபிராமான் ।
லீலா நிமீலித த்ருஶ: ஸநகாதி யோகி-
வ்யாஸேவிதான் கமலபூர்ப்பவதோ ததர்ஶ ॥8॥

| | | |
|---|---|---|
| ப்ரத்யேகம் ஏவ | - | ஒவ்வொருவரையும் |
| கமலாபரி லாலிதாங்கான் | - | லக்ஷ்மீதேவியால் சீராட்டப்பட்ட அவயவங்களை யுடையவர்களும், |
| போகீந்த்ர போக ஶயனான் | - | ஸர்ப்பராஜனான ஆதிசேஷனுடைய உடலில் படுத்திருப்பவர்களும், |
| நயனாபிராமான் | - | கண்களுக்கு ஆனந்தமளிப்பவர்களும், |
| லீலா நிமீலித த்ருஶ: | - | லீலையாகவே யோகநித்திரை செய்கிறவர்களும் |
| ஸனகாதியோகி வ்யாஸே விதான் | - | ஸநகர் முதலிய யோகிகளால் ஸேவிக்கப்பட்டவர்களுமான |
| பவத: கமல பூ: ததர்ஶ | - | அனேகம் தாங்களாகவே பிரம்மதேவர் கண்டார். |

नारायणाकृतिमसंख्यतमान्निरीक्ष्य
सर्वत्र सेवकमपि स्वमवेक्ष्य धाता ।
मायानिमग्नहृदयो विमुमोह यावदेको
बभूविथ तदा कबळार्धपाणिः ॥ ९ ॥

நாராயணாக்ருதிமஸங்க்யதமாம் நிரீக்ஷ்ய
ஸர்வத்ர ஸேவகமபி ஸ்வமவேக்ஷ்ய தாதா ।
மாயா நிமக்ன ஹ்ருதயோ விமுமோஹ யாவ
தேகோ பபூவித ததா கபலார்த்தபாணி: ॥9॥

| | | |
|---|---|---|
| தாதா அஸங்க்யதமாம் | - | பிரம்மதேவர் எண்ணிக்கையில்லாத |
| நாராயணாக்ருதிம் நிரீக்ஷ்ய | - | நாராயணமூர்த்தியைக் கண்டு, |

ஸர்வத்ர - எல்லா இடத்திலும்
ஸ்வம் ஸேவகம் அபி அவேக்ஷ்ய - தன்னை சேவகனாகவும் கண்டு
மாயா நிமக்ன ஹ்ருதய- மாயையில் முழுகின மனதையுடையவராக
யாவத் விமுமோஹ - எப்பொழுது அறிவிழந்தாரோ,
ததா ஏக: - அப்பொழுது தாங்கள் ஒருவராக
கபளார்த பாணி: - கையில் பாதி அன்னகபளத்தை உடையவராக
பபூவித - பவித்தீர்களல்லவா.

नश्यन्मदे तदनु विश्वपतिं मुहुस्त्वां
नत्वा च नूतवति धातरि धाम याते ।
पोतैः समं प्रमुदितैः प्रविशन्निकेतं
वातालयाधिप विभो परिपाहि रोगात् ॥ १० ॥

நச்யன் மதே ததனு விஶ்வபதிம் முஹுஸ்த்வாம்
நத்வா ச நூதவதி தாதரி தாம யாதே ।
போதை: ஸமம் ப்ரமுதிதை: ப்ரவிஶந்நிகேதம்
வாதாலயாதிப விபோ பரிபாஹி ரோகாத் ॥ 10 ॥

விபோ - ஹே பிரபுவே!
ததனு நஶ்யன்மதே தாதரி - அதன் பிறகு கர்வம் நசித்த பிரம்மதேவர்
விஶ்வபதிம் த்வாம் - லோகநாதனான தங்களை
முஹு: தத்வா நூதவதி - பலதடவை நமஸ்கரித்து ஸ்துதித்து
தாம ச யாதே - ஸத்யலோகஞ் சென்றபிறகு
ப்ரமுதிதை: - மிக சந்தோஷமடைந்த
போதை: ஸமம் - கன்றுகளுடனும் சிறுவர்களுடனும்
நிகேதம் ப்ரவிஶன் வாதாலயாதிப - வீட்டிற்குச்சென்ற ஹே குருவாயூரப்பா!
ரோகாத் பரிபாஹி - தாங்கள் வியாதியிலிருந்து நன்றாகக் காப்பாற்றவேண்டும்.

இதி ஶ்ரீமந் நாராயணீயே வத்ஸாபஹார வர்ணனம் நாம த்விபஞ்சாஶம் தஶகம் ஸமாப்தம்.

[ஆதித: ஶ்லோகா: 536] [தஶமஸ்கந்த லோகா:161]

# தஶகம் - 53

## தேனுகாஸுர வதம்

अतीत्य बाल्यं जगतां पते त्वम् उपेत्य पौगण्डवयो मनोज्ञम् ।
उपेक्ष्य वत्सावनमुत्सवेन प्रावर्तथा गोगणपालनायाम् ॥१॥

அதீத்ய பால்யம் ஜகதாம்பதே த்வம்
உபேத்ய பௌகண்டவயோ மனோஜ்ஞம்।
உபேக்ஷ்ய வத்ஸாவன முத்ஸவேன
ப்ராவர்த்ததா கோகணபாலனாயாம் ॥1॥

ஜகதாம் பதே த்வம் - ஹே லோகநாதா! தாங்கள்
பால்யம்அதீத்யமனோக்ஞம் - ஐந்தாவது வயதைக்கடந்து அழகான
பௌகண்டவய: உபேத்ய - ஆறாவது வ்யதையடைந்து
வத்ஸாவனம் உபேக்ஷ்ய - கன்றுகளை மேய்ப்பதை விட்டு
உத்ஸவேன - உற்சாகத்துடன்
கோகண பால நாயாம் ப்ராவர்ததா: } பசுக்களைக் காப்பாற்றத் துடங்கினீர்களல்லவா.

उपक्रमस्यानुगुणैव सेयं मरुत्पुराधीश तव प्रवृत्तिः ।
गोत्रापरित्राणकृतेऽवतीर्णस्तदेव देवाऽऽरभथास्तदा यत् ॥

உபக்ரமஸ்யானுகுணைவ ஸேயம்
மருத்புராதீச தவ ப்ரவ்ருத்தி: ।
கோத்ரா பரித்ராணக்ருதேऽவதீர்ணஸ்
ததேவ தேவாऽரபதாஸ்ததா யத் ॥2॥

தேவ - ஹே தேவ!
கோத்ராபரித்ராணக்ருதே - பூமியை (பசுக்களை) காப்பாற்றுவதற்காக
அவதீர்ண: ததா - அவதரித்த தாங்கள் அந்த பௌகண்ட வயதில்
ததேவ ஆரபதா: யத் - அதையே ஆரம்பித்தீர்கள் என்று யாதொன்றுண்டோ,
மருத்புராதீஶ - குருவாயூரப்பா!
தவ ஸா இயம் ப்ரவ்ருத்தி: - தங்களுடைய இந்தப் பிரவிருத்தியானது
உபக்ரமஸ்ய அனுகுணா ஏவ - துவக்கத்திற்கு ஏற்றதே.

कदापि रामेण समं वनान्ते वनश्रियं वीक्ष्य चरन्सुखेन ।
श्रीदामनाम्नः स्वसखस्य वाचामोदादगा धेनुककाननं त्वम् ॥

கதாऽபி ராமேண ஸமம் வனாந்தே
வனஶ்ரியம் வீக்ஷ்ய சரன் ஸுகேன ।
ஶ்ரீதாம நாம்ன: ஸ்வ ஸகஸ்ய வாசா
மோதாதகா தேனுக கானனம் த்வம் ॥3॥

கதாபி ராமேண ஸமம் - ஒரு நாள் பலராமனுடன்
வனாந்தே - காட்டின் நடுவில்
வனஶ்ரியம் வீக்ஷ்ய - காட்டின் சோபையைப் பார்த்துக்கொண்டு
ஸுகேன சரன் த்வம் - சுகமாக சுற்றித்திரிந்துகொண்டு தாங்கள்
ஸ்ரீதாமநாம்ன:ஸ்வஸகஸ்ய - "ஸ்ரீதாமா" என்ற பெயருடைய தோழனுடைய
வாசா மோதாத் - பேச்சைக்கேட்டு சந்தோஷத்துடன்
தேனுக கானனம் - தேனுகாசுரனுடைய காட்டிற்கு
அகா: - சென்றீர்களல்லவா.

उत्तालतालीनिवहे त्वदुक्त्याबलेन धूतेऽथ बलेन दोर्भ्याम् ।
मृदुः खरश्चाभ्यपतत्पुरस्तात् फलोत्करो धेनुकदानवोऽपि ॥

உத்தால தாலீ நிவஹே த்வதுக்த்யா
பலேன தூதேऽத பலேன தோர்ப்ப்யாம் ।
ம்ருது: கரச்சாப்யபதத் புரஸ்தாத்
பலோத்கரோ தேனுக தானவோऽபி ॥4॥

த்வதுக்த்யா பலேன - தங்களுடைய வசனத்தால் பலராமனால்
உத்தால தாலீ நிவஹே - உயர்ந்த பனைமரக்கூட்டம்
பலேன தோர்ப்யாம் - பலமாக இரண்டு கைகளால்
தூதே அத - குலுக்கப்பட்ட உடனே
ம்ருது: கர: ச - பழுத்ததும் பழுக்காததுமான
பலோத் கர: - பழவர்க்கம்
தேனுகதாநவ: அபி அப்ய பதத் - தேனுகாசுரனும் எதிர்த்துவந்தான்.

समुद्यतो धैनुकपालनेऽहं वधं कथं धैनुकमद्य कुर्वे ।
इतीव मत्वा ध्रुवमग्रजेन सुरौघयोद्धारमजीघनस्त्वम् ॥ ५ ॥

ஸமுத்யதோ தேனுக பாலனேநஹம் வதம்
வதம் தைனுக மத்ய குர்வே ।
இதீவ மத்வா த்ருவமக்ரஜேன ஸுரௌக
யோத்தாரமஜீகனஸ் த்வம் ॥5॥

தேனுக பாலனே - பசுக்கூட்டத்தைக் காப்பாற்ற
ஸமுத்யத: அஹம் அத்ய - முயலும் நான் இப்பொழுது
தைனுகம் வதம் - தேனுக்களுடையதான (தேனுகனுடையதான) வதத்தை
கதம் குர்வே - எவ்விதஞ் செய்வேன்?
இதி இவ மத்வா - என்று ஆலோசித்துத்தான்
த்ருவம் த்வம் - நிச்சயமாகத் தாங்கள்
அக்ரஜேன - அண்ணனான பலராமனைக்கொண்டு
ஸுரௌக யோத்தாரம் - தேவர்களுக்குச் சத்துருவான தேனுகாசுரனை
அஜீகன: - கொல்லச்செய்தீர்களல்லவா.

तदीयभृत्यानपि जम्बुकत्वेनोपागतानग्रजसंयुतस्त्वम् ।
जम्बूफलानीव तदा निरास्थस्तालेषु खेलन्भगवन्निरास्थः ॥

ததீய ப்ருத்யானபி ஜம்புகத்வேனோ
பாகதானக்ரஜ-ஸம்யுதஸ்த்வம் ।
ஜம்பூ பலானீவ ததா நிராஸ்தஸ்தாலேஷு
கேலன் பகவந்நிராஸ்த்த: ॥6॥

| | | |
|---|---|---|
| பகவன் ததா | - | பகவானே! அப்பொழுது |
| ஜம்புகத்வேன உபாகதான் | - | நரிவேஷம் பூண்டு பக்கத்தில் வந்த |
| ததீய ப்ருத்யான் அபி | - | அவனுடைய வேலையாட்களையும், |
| அக்ரஜ ஸம்யுத: த்வம் | - | பல்ராமனுடன்கூடின தாங்கள் |
| நிராஸ்த: கேலன் | - | சிரமமில்லாமல் விளையாடிக்கொண்டு |
| ஜம்பூ பலானி இவ | - | நாவற்பழங்களைப்போல |
| தாலேஷு நிராஸ்த்த: | - | பனைமரங்களில் எறிந்தீர்களல்லவா. |

विनिघ्नति त्वय्यथजम्बुकौघं सनामकत्वाद्वरुणस्तदानीम् ।
भयाकुलो जम्बुकनामधेयं श्रुतिप्रसिद्धं व्यधितेति मन्ये ॥

விநிக்னதி த்வய்யத ஜம்புகௌகம்
ஸ நாமகத்வா த்வருணஸ்ததாநீம் ।
பயாகுலோ ஜம்புக நாமதேயம் ஶ்ருதி
ப்ரஸித்தம் வ்யதிதேதி மன்யே ॥7॥

| | | |
|---|---|---|
| த்வயி ஜம்புகௌ கம் | - | தாங்கள் (ஜம்புக) நரிக்கூட்டத்தை |
| விநிக்நதி அத வருண: | - | கொல்லத்துணிந்தபொழுது, வருணன் |
| ஸநாமகத்வாத் | - | ஒரே பெயரையுடையவனாக இருப்பதால் |
| பயாகுல: ததானீம் | - | பயத்தால் கலக்கமுற்றவனாய் அப்பொழுது |
| ஜம்புகநாமதேயம் | - | ஜம்புகன் என்ற பெயரை |
| ஶ்ருதி ப்ரஸித்தம் | - | வேதத்தில்(கேட்பதில்)மாத்திரம்பிரசித்திபெற்றதாக |
| வ்யதித இதி மன்யே | - | செய்தான், என்று நான் எண்ணுகிறேன். |

तवावतारस्य फलं मुरारे सञ्जातमद्येति सुरैर्नुतस्त्वम् ।
सत्यं फलं जातमिहेति हासी बालैः समं तालफलान्यभुङ्क्थाः ॥८॥

தவாவதாரஸ்ய பலம் முராரே
ஸஞ்ஜாதமத்யேதி ஸுரைரர்நுதஸ்த்வம் ।
ஸத்யம் பலம் ஜாதமிஹேதி ஹாஸீ பாலை:
ஸமம் தால பலான்யபுங்க்தா: ॥8॥

| | | |
|---|---|---|
| முராரே | - | ஹே முராரியே! |
| தவ அவதாரஸ்ய | - | தங்கள் திருவவதாரத்திற்கு |
| பலம் அத்ய ஸஞ்ஜா தம் | - | பிரயோஜனம் இப்பொழுதுதானுண்டானது |
| இதி ஸுரை: நுத: த்வம் | - | என்று தேவர்களால் ஸ்துதிக்கப்பட்ட தாங்கள் |
| ஸத்யம் இஹ பலம் | - | வாஸ்தவம் இவ்விடத்தில் இப்பொழுது |
| ஜாதம் | | பிரயோஜனம் (பழம்) ஸித்தித்தது (கிடைத்தது) |

| | |
|---|---|
| இதி ஹாஸீ: பாலை: ஸமம் | - என்று சொல்லிச் சிரித்துக்கொண்டு சிறுவர்களுடன் |
| தால பலானி அபுங்க்தா: | - பனம்பழங்களைத் தின்றீர்களல்லவா. |

मधुद्रवस्रुन्ति बृहन्ति तानि फलानि मेदोभरभृन्ति भुक्त्वा ।
तृप्तैश्च दृप्तैर्भवनं फलौघं वहद्भिरागाः खलु बालकैस्त्वम् ॥ ९ ॥

மது த்ரவஸ்ருந்தி ப்ருஹந்தி தானி பலானி
மேதோபரப்ருந்தி புக்த்வா ।
த்ருப்தைஶ்ச த்ருப்தைர்ப்பவனம் பலௌகம்
வஹத்பிராகா: கலு பாலகைஸ்த்வம் ॥9॥

| | |
|---|---|
| மதுத்ரவஸ்ருந்தி | - தேனைப்பெருக்குகின்றவைகளும் |
| ப்ருஹந்தி | - பெருத்தவைகளும் |
| மேதோபர ப்ருந்தி | - தசைப்பற்றுள்ளவைகளுமான |
| தானி பலானி புக்த்வா | - அந்தப் பழங்களைத் தின்று |
| த்ருப்தை: | - திருப்தியடைந்தவர்களும், |
| த்ருப்தை: | - அதனால் மதித்தவர்களும், |
| பலௌகம் வஹத்பி: ச | - பழக்குவியலையெடுத்துக்கொண்டவர்களுமான |
| பாலகை: த்வம் | - சிறுவர்களுடன் தாங்கள் |
| பவனம் ஆகா: கலு | - வீட்டிற்குத் திரும்பிவந்தீர்களல்லவா. |

हतो हतो धेनुक इत्युपेत्य फलान्यदद्भिर्मधुराणि लोकैः ।
जयेति जीवेति नुतो विभो त्वं मरुत्पुराधीश्वर पाहि रोगात् ॥ १० ॥

ஹதோ ஹதோ தேனுக இத்யுபேத்ய
பலான்ய தத்பிர் மதுராணி லோகை: ।
ஜயேதி ஜீவேதி நுதோ விபோ த்வம்
மருத்புராதீச்வர பாஹி ரோகாத் ॥10॥

| | |
|---|---|
| மருத்புராதீஶ்வர | - ஹே குருவாயூரப்பா! |
| தேனுக: ஹத ஹத: | - தேனுகாசுரன் "கொல்லப்பட்டான், கொல்லப்பட்டான்" |
| இதி உபேத்ய | - என்று சொல்லிக்கொண்டு பக்கத்தில் வந்து |
| மதுராணி பலானி | - இனிப்பான பழங்களை |
| அதத்பி: லோகை: விபோ | - தின்னுகின்ற ஜனங்களால், ஹே பிரபுவே! |
| ஜய இதி | - "தாங்கள் மேன்மைபெற்று விளங்கவேண்டும்; |
| ஜீவ | - வெகுகாலம் ஜீவித்திருக்கவேண்டும்" |
| இதி நுத: த்வம் | - என்று புகழப்பட்ட தாங்கள் |
| ரோகாத்பாஹி | - வியாதியிலிருந்து என்னைக்காப்பாற்றவேண்டும். |

இதி ஶ்ரீமந் நாராயணீயே தேனுகாஸுர வத வர்ணனம்
நாம த்ரிபஞ்சாஶம் தஶகம் ஸமாப்தம்.

[ஆதித: ஶ்லோகா: 546] [தஶமஸ்கந்த ஸ்லோகா: 171]

# தசகம் - 54

## காளியன் வரலாறு

त्वत्सेवोत्कः सौभरिर्नाम पूर्वं कालिन्द्यन्तर्द्वादशाब्दं तपस्यन् ।
मीनव्राते स्नेहवान्भोगलोले तार्क्ष्यं साक्षादैक्षताग्रे कदाचित् ॥१॥

த்வத்ஸேவோத்க: ஸௌபரிர்நாம பூர்வம்
காலிந்த்யந்தர்த்வாதஶாப்தம் தபஸ்யன் ।
மீனவ்ராதே ஸ்நேஹவான் போகலோலே
தார்க்ஷ்யம் ஸாக்ஷாதைக்ஷதாக்ரே கதாசித் ॥1॥

| | | |
|---|---|---|
| த்வத் ஸேவோகித: | - | தங்களை சேவிப்பதில் ஈடுபட்டிருந்த |
| ஸௌபரிர் நாம | - | ஸௌபரி என்பவர், |
| பூர்வம் காளிந்த்யந்த: | - | முன்காலத்தில் யமுனாநதிக்குள் |
| த்வாதஶாப்தம் | - | பன்னிரண்டு வருஷங்கள் |
| தபஸ்யன் | - | த்வம்புரிந்து கொண்டிருக்கும்பொழுது |
| போகலோலே | - | விஷய சுகமனுபவிப்பதில் ஈடுபட்ட |
| மீனவ்ராதே ஸ்நேஹவான் | - | மீன்களிடத்தில் சினேகமுள்ளவராக பவித்து |
| கதாசித் தார்க்ஷ்யம் | - | ஒரு நாள் கருடனை |
| அக்ரே ஸாக்ஷாத் ஐக்ஷத் | - | எதிரில் பிரத்யக்ஷமாகக் கண்டார். |

त्वद्वाहं तं सक्षुधं तृक्षसूनुं मीनं कञ्चिज्जक्षतं लक्षयन् सः ।
तप्तश्चित्ते शप्तवानत्र चेत्त्वं जन्तून् भोक्ता जीवितं चापि मोक्ता ॥२॥

த்வத்வாஹம் தம் ஸக்ஷுதம் த்ருக்ஷஸூனும்
மீனம் கஞ்சிஜ்ஜக்ஷதம் லக்ஷயன் ஸ: ।
தப்தஸ்சித்தே ஶப்தவானத்ர சேத்த்வம் ஜந்தூன்
போக்தா ஜீவிதம் சாபி மோக்தா ॥2॥

| | | |
|---|---|---|
| ஸ ஸக்ஷுதம் | - | அம்முனிவர் பசியுடன் கூடினவனும், |
| கஞ்சித் மீனம் ஜக்ஷதம் | - | ஒரு மீனைத் தின்றவனும், தங்கள் |
| த்வத்வாஹம் | | வாஹனமுமான |
| தம் த்ருக்ஷஸூநம் லக்ஷயன் | - | அந்த கருடனைப் பார்த்து, |
| சித்தே தப்த: | - | மனஸ்தாபமடைந்தவராய் |
| த்வம் அத்ர | - | "நீ இவ்விடத்தில் |
| ஜந்தூன் போக்தா சேத் | - | பிராணிகளைத் தின்பாயாகில் |

| | |
|---|---|
| ஜீவிதம் ச அபி போக்தா- | உயிரையும் இழந்துவிடுவாய்'' என்று |
| ஶப்தவான் - | சபித்தார். |

तस्मिन्काले कालियः क्ष्वेळदर्पात्सर्पारातेः कल्पितं भागमश्नन् ।
तेन क्रोधात्त्वत्पदाम्भोजभाजा पक्षक्षिप्तस्तद्दुरापं पयोऽगात् ॥ ३ ॥

தஸ்மின் காலே காலிய: க்ஷ்வேல தர்ப்பாத்
ஸர்பாராதே: கல்பிதம் பாகமஶ்னம் ।
தேன க்ரோதாத் த்வத் பதாம்போஜபாஜா
பக்ஷக்ஷிப்தஸ் தத்துராபம் பயோநகாத் ॥3॥

| | |
|---|---|
| தஸ்மின் காலே - | அக்காலத்தில் |
| காலிய: க்ஷ்வேல தர்பாத் - | காளியன் என்ற பாம்பு, விஷமதத்தால் |
| ஸர்பா ராதே: - | பாம்புகளுக்குப் பகைவனான கருடனுக்கு |
| கல்பிதம் பாகம் அஶ்னன்- | வைக்கப்பட்ட பாகத்தைத் தின்றவனாய் |
| த்வத் பதாம் போஜ பாஜா - | தங்கள் திருமலரடிகளை சேவிக்கின்ற |
| தேன க்ரோதாத் - | அந்த கருடனால் கோபத்தால் |
| பக்ஷ க்ஷிப்த: - | தனது இறக்கைகளால் அடித்து விரட்டப்பட்டவனாய் |
| தத்து ராபம் - | அந்த கருடனால் வரமுடியாத |
| பய: அகாத் - | யமுனாஜலத்தையடைந்தான். |

घोरे तस्मिन्सूरजानीरवासे तीरे वृक्षा विक्षताः क्ष्वेळवेगात् ।
पक्षिव्राताः पेतुरभ्रे पतन्तः कारुण्यार्द्रं त्वन्मनस्तेन जातम् ॥ ४ ॥

கோரே தஸ்மின் ஸூரஜா நீரவாஸே
தீரே வ்ருக்ஷா விக்ஷதா: க்ஷ்வேலவேகாத் ।
பக்ஷிவ்ராதா: பேதுரப்ரே பதந்த:
காருண்யார்த்ரம் த்வன்மனஸ்தேன ஜாதம் ॥4॥

| | |
|---|---|
| கோரே தஸ்மின் - | கொடியவனான அந்தக் காளியன் |
| ஸூரஜாநீரவாஸே - | யமுனாநதியில் வஸிக்கும்பொழுது |
| க்ஷ்வேல வேகாத் - | விஷவீரியத்தால் |
| தீரே வ்ருக்ஷா: விக்ஷதா: - | கரையிலிருக்கும் மரங்கள் நாசமடைந்தன. |
| அப்ரே பதந்த: - | ஆகாசத்தில் பறக்கின்ற |
| பக்ஷி வ்ராதா: பேது: - | பறவைக்கூட்டங்களும் கீழே விழுந்தன. |
| தேன த்வன்மன: - | அதனால் தங்கள் திருமனம் |
| காருண்யார்த்ரம் ஜாதம் - | கருணையால் கனிந்ததாக ஆனதல்லவா. |

काले तस्मिन्नेकदा सीरपाणिं मुक्त्वा याते यामुनं काननान्तम् ।
त्वय्युद्दामग्रीष्मभीष्मोष्मतप्ता गोगोपाला व्यापिबन् क्ष्वेळतोयम् ॥५॥

காலே தஸ்மின்னேகதா ஸீரபாணிம்
முக்த்வா யாதே யாமுனம் கானனாந்தம் ।
த்வய்யுத்தாம க்ரீஷ்ம பீஷ்மோஷ்மதப்தா
கோ: கோபாலா வ்யாபிபன் க்ஷ்வேலதோயம் ॥5॥

| | | |
|---|---|---|
| தஸ்மின்காலே ஏகதாத்வயி | - | அக்காலத்தில் ஒரு நாள்தாங்கள் |
| ஸீரபாணிம் முக்த்வா | - | பலராமனில்லாமல் |
| யாமுனம்கானனாந்தம்யாதே | - | யமுனைக்கரையிலுள்ளகாட்டிற்குச்சென்றபொழுது |
| கோகோபாலா: | - | பசுக்களும் இடையர்களும், |
| உத்தாம க்ரீஷ்ம பீஷ்ம உஷ்மதப்தா: | - | பொறுக்கமுடியாத வெயிற்காலத்தின் கொடியதாபத்தால்தபிப்பிக்கப்பட்டவர்களாய் |
| க்ஷ்வேலதோயம்வ்யாபிபன் | - | விஷஜலத்தை நன்றாகப் பருகினார்கள். |

नश्यज्जीवान् विच्युतान् क्ष्मातले तान् विश्वान् पश्यन्नच्युत त्वं दयार्द्रः ।
प्राप्योपान्तं जीवयामासिथ द्राक् पीयूषाम्भोवर्षिभिः श्रीकटाक्षैः ॥६॥

நஶ்யஜ்ஜீவான் விச்யுதான் க்ஷ்மாதலே
தான் விஶ்வான் பஶ்யன்னச்யுத த்வம் தயார்த்ர: ।
ப்ராப்யோபாந்தம் ஜீவயாமாஸித த்ராக்
பீயூஷாம்போ-வர்ஷிபி: ஸ்ரீகடாக்ஷை: ॥6॥

| | | |
|---|---|---|
| அச்யுத | - | தன்னையடைந்தவர்களைக்கைவிடாத ஹே ஈசா! |
| த்வம் தான் விச்வான் | - | தாங்கள் அவர்களெல்லோரையும் |
| நஸ்யஜ் ஜீவான் | - | உயிரிழந்தவர்களாகவும் |
| க்ஷ்மாதலே விச்யுதான் | - | அதனால் தரையில் வீழ்ந்தவர்களாகவும் |
| பஶ்யன் தயார்த்ர: | - | கண்டு கருணைகூர்ந்து |
| உபாந்தம் ப்ராப்ய | - | அவர்கள் பக்கத்தில் சென்று |
| பீயூஷாம் போ வர்ஷிபி: | - | அமிருதத்தை வருஷிக்கின்ற |
| ஸ்ரீகடாக்ஷை: | - | கடைக்கண் பார்வைகளால் |
| த்ராக் ஜீவயாமாஸித | - | விரைவில் உயிர்ப்பித்தீர்களல்லவா. |

किं किं जातो हर्षवर्षातिरेकः सर्वाङ्गेष्वित्युत्थिता गोपसङ्घाः ।
दृष्ट्वाऽग्रे त्वां त्वत्कृतं तद्विदन्तस्त्वामालिङ्गन् दृष्टनानाप्रभावाः ॥७॥

கிம் கிம் ஜாதோ ஹர்ஷவர்ஷாதிரேக:
ஸர்வாங்கேஷ்வித்யுத்திதா கோபஸ்ங்க்கா: ।
த்ருஷ்ட் வாஸி க்ரே த்வாம் த்வத்க்ருதம்
தத்விதந்தஸ்த்வா-மாலிங்கன் த்ருஷ்ட நானாப்ரபாவா: ॥7॥

| | | |
|---|---|---|
| கோப ஸங்கா: கிம்கிம் | - | கோபாலர்கள், "என்னஆச்சரியம்!ஆச்சரியம்!! |
| ஸர்வாங்கேஷு | - | உடம்பெல்லாம் |
| ஹர்ஷவர்ஷாதி ரேக: ஜாத: | - | அதிகமான ஆனந்தவர்ஷமுண்டாயிற்றே" |
| இதி உத்திதா: | - | என்று சொல்லிக்கொண்டே எழுந்து |
| த்வாம் அக்ரே த்ருஷ்ட்வா | - | தங்களை எதிரில் கண்டு |
| த்ருஷ்ட நாநா ப்ரபாவா: | - | உமது அனேக ப்ரபாவங்களைக் கண்டவர்களானதால் |
| தத் த்வத் க்ருதம் விதந்த: | - | அது தங்களால் செய்யப்பட்டதென்று அறிந்தவர்களாய் |
| த்வாம் ஆலிங்கன் | - | தங்களை ஆலிங்கனஞ் செய்து கொண்டார்களல்லவா. |

गावश्चैवं लब्धजीवाः क्षणेन स्फीतानन्दास्त्वां च दृष्ट्वा पुरस्तात् ।
द्रागावव्रुः सर्वतो हर्षबाष्पं व्यामुञ्चन्त्यो मन्दमुद्यन्निनादाः ॥८॥

காவஸ்சைவம் லப்த ஜீவா: க்ஷணேன
ஸ்பீதானந்தாஸ்த்வாஞ் ச த்ருஷ்ட்வா புரஸ்தாத் ।
த்ராகாவவ்ரு: ஸர்வதோ ஹர்ஷபாஷ்பம்
வ்யாமுஞ்சந்த்யோ மந்தமுத்யந்நிநாதா: ॥8॥

| | | |
|---|---|---|
| ஏவம் காவ: ச | - | அவ்விதமே பசுக்களும், |
| க்ஷணேன லப்தஜீவா: | - | ஒரு நொடியில் உயிர்பெற்றவைகளாய், |
| ஸ்பீதாநந்தா: | - | ஆனந்தம் பெருகியவைகளாய், |
| த்வாம் ச புரஸ்தாத் த்ருஷ்ட்வா | - | தங்களையும் எதிரில் பார்த்து |
| ஸர்வத: ஹர்ஷ பாஷ்பம் | - | எல்லாயிடத்திலும் ஆனந்தக்கண்ணீரை |
| வ்யாமுஞ்சந்த்ய: | - | பெருக்கிக்கொண்டு |
| மந்தம் உத்யந்நிநாதா: | - | மெதுவாக கத்திக்கொண்டு |
| த்ராக் ஆவவ்ரு: | - | சீக்கிரம் தங்களைச் சுற்றி நின்றன. |

रोमाञ्चोऽयं सर्वतो नः शरीरे भूयस्यन्तः काचिदानन्दमूर्छा ।
आश्चर्योऽयं क्ष्वेळवेगो मुकुन्देत्युक्तो गोपैर्नन्दितो वन्दितोऽभूः ॥९॥

ரோமாஞ்சோ‌ஙி யம் ஸர்வதோ ந: ஶரீரே
பூயஸ்யந்த: காஸிதானந்த மூர்ச்சா
ஆச்சர்யோ‌ஙி யம் க்ஷ்வேலவேகோ முகுந்தே
த்யுக்தோ கோபைர் நந்திதோ வந்திதோ‌ஙி பூ: ॥ 9 ॥

முகுந்த - முக்தியைக்கொடுக்கும் ஹே ஈசா!
ந ஶரீரே ஸர்வத: - எங்கள் தேகத்தில் எல்லா இடத்திலும்
அயம் ரோமாஞ்ச: - இதோ ரோமாஞ்சமுண்டாகிறது.
அந்த: காசித் - உள்ளில் இன்னதென்று சொல்லமுடியாத
ஆனந்த மூர்ச்சா பூயஸி - ஆனந்தப்பெருக்கு விருத்தியடைகின்றது.
அயம் க்ஷ்வேல வேக: - இந்த விஷத்தின் வேகமோ
ஆஶ்சர்ய: - ஆச்சரியமாக இருக்கிறது;
இதி கோபை: உக்த: - என்று கோபர்களால் சொல்லப்பட்டு
நந்தித: - கொண்டாடப்பட்டு
வந்தித: அபூ: - வணங்கப்பட்டீர்களல்லவா.

एवं भक्तान्मुक्तजीवानपि त्वं मुग्धापाङ्गैरस्तरोगांस्तनोषि ।
तादृग्भूतस्फीतकारुण्यभूमा रोगात्पाया वायुगेहाधिनाथ ॥ १० ॥

ஏவம் பக்தான் முக்தஜீவானபி த்வம்
முக்தாபாங்கை-ரஸ்தரோகாம்ஸ்தனோஷி ।
தாத்ருக்பூத ஸ்ப்பீத-காருண்ய பூமா
ரோகாத்பாயா வாயுகேஹாதிநாத ॥ 10 ॥

ஏவம் பக்தான் - இவ்விதம் பக்தர்களை
முக்த ஜீவான் அபி - உயிரிழந்தவர்களாக இருந்தாலுங்கூட
த்வம் முக்தா பாங்கை: - தாங்கள் அழகிய கடைக்கண் பார்வைகளால்
அஸ்த் ரோகான் தனோஷி - வியாதிகூட இல்லாதவர்களாகச் செய்கிறீர்.
வாயு கேஹாதி நாத - ஹே குருவாயூரப்பா!
தாத்ருக் பூதஸ்ப் பீத - அப்படி விருத்தியடைந்த
காருண்ய பூமா கருணாதிசயத்தை உடைய தாங்கள்
ரோகாத் பாயா: - வியாதியிலிருந்து என்னைக்காப்பாற்ற வேண்டும்.

இதி ஸ்ரீமந் நாராயணீயே காளிய மர்தன வர்ணனம்
நாம சது: பஞ்சாஶம் தஶகம்.

[ஆதித: ஶ்லோகா: 526] [தஶமஸ்கந்த ஸ்லோக: 181]

# தசகம் - 55

## காளிய நர்த்தனம்

अथ वारिणि घोरतरं फणिनं प्रतिवारयितुं कृतधीर्भगवन् ।
द्रुतमारिथ तीरगनीपतरुं विषमारुतशोषितपर्णचयम् ॥१॥

அத வாரிணி கோரதரம் பணினம்
ப்ரதிவாரயிதும் க்ருததீர்ப்பகவன் ।
த்ருதமாரித தீரக நீபதரும்
விஷமாருத ஶோஷித பர்ணசயம் ॥1॥

| | | |
|---|---|---|
| பகவான் அத | - | ஹே பகவானே! பிறகு |
| வாரிணி கோரதரம் பணினம் | - | யமுனாஜலத்திலிருக்கும் கொடிய காளிய ஸர்ப்பத்தை |
| ப்ரதிவாரயிதும் க்ருததீ: | - | அவ்விடமிருந்து விரட்ட நிச்சயித்துக் கொண்டு |
| விஷமாருத ஶோஷித பர்ணசயம் | - | விஷக்காற்றினால் உலர்த்தப்பட்ட இலைக் கூட்டத்தையுடைய |
| தீர கநீபதரும் | - | கரையிலிருக்கும் கதம்பமரத்தில் |
| த்ருதம் ஆரித | - | விரைவாக ஏறினீர்களல்லவா. |

अधिरुह्य पदाम्बुरुहेण च तं नवपल्लवतुल्यमोज्ञरुचा ।
ह्रदवारिणि दूरतरं न्यपतः परिघूर्णितघोरतरङ्गगणे ॥२॥

அதிருஹ்ய பதாம்புருஹேண ச தம்
நவபல்லவ துல்ய மனோஜ்ஞருசா ।
ஹ்ரதவாரிணி தூரதரம் ந்யபத:
பரிகூர்ணித கோரதரங்க கணே ॥2॥

| | | |
|---|---|---|
| நவ பல்லவ துல்ய மனோக்ஞருசா | - | இளந்துளிர்களுக்கொத்த அழகான நிறத்தையுடைய |
| பதாம்புருஹேணதம் அதிருஹ்ய | - | தாமரைபோன்ற காலினால் அந்த மரத்தின் மீதேறி |
| பரிகூர்ணித கோர தரங்க கணே | - | நீர்ச்சுழிகளுடன் கூடின பயங்கர அலைகளையுடைய |
| ஹ்ருதவாரிணி | - | மடுவிலிருக்கும் ஜலத்தில் |
| தூரதரம் ந்யபத: ச | - | வெகுதூரத்தில் குதிக்கவும் செய்தீர்களல்லவா. |

भुवनत्रयभारभृतो भवतो गुरुभारविकम्पिविजृम्भिजला ।
परिमज्जयति स्म धनुःशतकं तटिनी झटिति स्फुटघोषवती ॥३॥

புவனத்ரய பாரப்ருதோ பவதோ
குருபாரவிகம்பி விஜ்ரும்பிஜலா ।
பரிமஜ்ஜயதி ஸ்ம தனு: ஶதகம்
தடினீ ஜடிதி ஸ்ப்புடகோஷவதீ ॥3॥

புவனத்ரய பார ப்ருத: - மூவுலகங்களுடைய பாரத்தையும் சுமக்கின்ற
பவத: - தங்களுடைய
குருபார விகம்பி விஜ்ரும்பி ஜலா } - அதிகமான பாரத்தால் சலிக்கின்றதும் உயரக் கிளம்பினதுமான ஜலத்தையுடையதும்
ஸ்புட கோஷவதீ தடினீ- பேரிரைச்சலுடையதுமான யமுனாநதி
ஜடிதி தனுஶ்ஶதகம் - வேகமாக நூறு வில்லிடை நிலத்தை
பரிமஜ்ஜயதி ஸ்ம - தண்ணீரில் மூழ்கடித்ததல்லவா.

अथ दिक्षु विदिक्षु परिक्षुभित भ्रमितोदरवारिनिनादभरैः ।
उदकादुदगादुरगाधिपतिस्त्वदुपान्तमशान्तरुषान्धमनाः ॥ ४ ॥

அத திக்ஷு விதிக்ஷு பரிக்ஷுபித
ப்ரமிதோதர வாரி நிநாதபரை: ।
உதகா துதகா துரகாதிபதிஸ் த்வதுபாந்த
மஶாந்தருஷாநந்தமனா: ॥4॥

அத உரகாதி பதி: - பிறகு அந்தக் காளியன்
திக்ஷு விதிக்ஷு - திக்குகளிலும் விதிக்குகளிலும்
பரிக்ஷுபித ப்ரமிதோதர வாரிநிநா தபரை: } கலக்கப்பற்றுசுழியுண்டாகும்படி செய்யப்பட்ட நடுஜலத்தின் அதிகமான ஒலியால் உண்டான
அஶாந்தருஷா - கடுஞ்சினத்தால்
அந்தமனா: - மெய்மறந்தவனாக
த்வது பாந்தம் உதகாத் - தங்கள் பக்கத்தில் ஜலத்திலிருந்து
உதகாத் - கிளம்பிவந்தானல்லவா.

फणशृङ्गसहस्रविनिस्सृमर ज्वलदग्निकणोग्रविषाम्बुधरम् ।
पुरतः फणिनं समलोकयथा बहुशृङ्गिणमञ्जनशैलमिव ॥ ५ ॥

பண: ஶ்ருங்க ஸஹஸ்ர விநி: ஸ்ருமர
ஜ்வலதக்னி கணோக்ர விஷாம்புதரம் ।
புரத: பணினம் ஸமலோகயதா
பஹுஶ்ருங்கிண மஞ்ஜன ஶைலமிவ ॥5॥

பண ஶ்ருங்க ஸஹஸ்ர விநி: ஸ்ருமர ஜ்வல தக்னி கணோக்ர விஷாம்பு தரம் } ஆயிரக்கணக்கான படங்களின் நுனியிலிருந்து வெளிக்கிளம்பின ஜ்வலிக்கின்ற தீக்கனலையுடையவனும் கடும் விஷ நீரைத் தரிக்கின்றவனும்,
பஹுஶ்ருங்கிணம் - அனேகம் கொடிமுடிகளுள்ள
அஞ்ஜனஶைலம் இவ பணினம் } - மை மலைபோலிருப்பவனுமான காளியனை
புரத: ஸமலோக யதா: - எதிரில் கண்டீரல்லவா.

ज्वलदक्षिपरिक्षरदुग्रविष श्वसनिष्मभरः स महाभुजगः ।
परिदश्य भवन्तमनन्तबलं समवेष्टयदस्फुटचेष्टमहो ॥ ६ ॥

ஜ்வலதக்ஷி பரிக்ஷர துக்ரவிஷ
ஶ்வஸநோஷ்மபர: ஸ மஹாபுஜக: ।
பரிதஶ்ய பவந்த மனந்தபலம் ஸம
வேஷ்டயதஸ்ப்புடசேஷ்ட மஹோ ॥6॥

ஜ்வல தக்ஷி பரிக்ஷர துக்ர விஷஶ்வஸ நோஷ்மபர: - ஜ்வலிக்கின்ற கண்களையுடையதாயிருக்கும்படி பெருகுகின்ற கடும் விஷத்துடன்கூடின மூச்சுக்காற்றின் வெப்பத்தையுடைய
ஸ மஹாபுஜக: - அப்பெரும் பாம்பு
அனந்தபலம் பவந்தம் பரிதஶ்ய - அளவற்ற பலமுடைய தங்களை கடித்ததும்
அஸ்புட சேஷ்டம் - அசைவற்றிருப்பதைக்கண்டு
ஸம வேஷ்டயத் அஹோ - சுற்றிக்கொண்டானல்லவா, ஆச்சரியம்!

अविलोक्य भवन्तमथाकुलिते तटगामिनि बालकधेनुगणे ।
व्रजगेहतलेऽप्यनिमित्तशतं समुदीक्ष्य गता यमुनां पशुपाः ॥७॥

அவிலோக்ய பவந்த-மதாகுலிதே
தடகாமினி பாலக தேனுகணே ।
வ்ரஜகேஹதலேஃப்ய நிமித்தஶதம்
ஸமுதீக்ஷ்ய கதா யமுனாம் பஶுபா: ॥7॥

அத தடகாமினி - அதன்பிறகு யமுனைக்கரையிலிருக்கும்
பாலக தேனுகணே - சிறுவர்களும் பசுக்கூட்டமும்
பவந்தம் அவிலோக்ய ஆகுலிதே - தங்களைக் காணாமல் வருந்தும்பொழுது,
வ்ரஜ கேஹதலே அபி - கோகுலத்திலும்
அநிமித்த ஶதம் ஸமுதீக்ஷ்ய - அனேகம் அபசகுனங்களைக் கண்டு
பஶுபா: யமுனாம் கதா: - கோபர்கள்யமுனைக்கு வந்தார்களல்லவா.

अखिलेषु विभो भवदीयदशा मवलोक्य जिहासुषु जीवभरम् ।
फणिबन्धनमाशु विमुच्य जवादुदगम्यत हासजुषा भवता ॥८॥

அகிலேஷு விபோ பவதீயதஶா
மவலோக்ய ஜிஹாஸுஷு ஜீவபரம் ।
பணி பந்தன மாஶு விமுச்ய ஜவா
துதகம்யத ஹாஸஜுஷா பவதா ॥8॥

விபோ அகிலேஷு - ஹே பிரபோ! அவர்கள் எல்லோரும்
பவதீயதஶாம்அவலோக்ய - தங்கள் நிலைமையைக் கண்டு
ஜீவபரம் ஜிஹாஸுஷு - உயிரைவிடத்துணிந்தபொழுது,
ஆஶு பணிபந்தனம் விமுச்ய - விரைவாக பாம்புக்கட்டையவிழ்த்துக் கொண்டு

பவதா ஹாஸஜுஷா - தங்களால் கிழித்துக்கொண்டு
ஜவாத் உதகம்யத - விரைவாக வெளியே வரப்பட்டதல்லவா.

अधिरुह्य ततः फणिराजफणा न्ननृते भवता मृदुपादरुचा ।
कलशिञ्चितनूपुरमञ्जुमिलत्करकङ्कणसकुलसंक्वणितम् ॥ ९ ॥

அதிருஹ்ய தத: பணிராஜபணான்
நந்ருதே பவதா ம்ருதுபாதருசா ।
கலஶிஞ்ஜித நூபுர மஞ்ஜுமிலத்
கரகங்கண ஸங்குல ஸங்க்வணிதம் ॥9॥

தத: - பிறகு
பணிராஜபணான் அதிருஹ்ய - ஸர்ப்பராஜனுடைய படங்களில் ஏறிக்கொண்டு
ம்ருது பாதருசா பவதா - அழகான திருவடிகளின் காந்தியையுடைய தங்களால்
கலா ஶிஞ்ஜித நூபுர மஞ்ஜு மிலத்கர கங்கண ஸங்குல ஸங்க்வணிதம் - இனிமையான தொனியையுடைய சலங்கைகளுடையவும் அழகாக ஒன்று சேருகின்ற இரு கைகளிலிருக்கும் வளையல்களுடையவும் ஒன்றுக்கொன்று கலந்த சத்தத்தையுடைத்தாயிருக்கும்படி
நந்ருதே - நர்த்தனஞ் செய்யப்பட்டதல்லவா.

जहृषुः पशुपास्तुतुषुर्मुनयो ववृषुः कुसुमानि सुरेन्द्रगणाः ।
त्वयि नृत्यति मारुतगेहपते परिपाहि स मां त्वमदान्तगदात् ॥ १० ॥

ஜஹ்ருஷு: பஶுபாஸ் துதுஷுர்
முனயோ வவ்ருஷு: குஸுமானி ஸுரேந்த்ரகணா: ।
த்வயி ந்ருத்யதி மாருதகேஹபதே பரிபாஹி
ஸ மாம் த்வமதாந்த கதாத் ॥10॥

மாருத கேஹபதே - ஹே குருவாயூரப்பா!
த்வயி ந்ருத்யதி - தாங்கள் நர்த்தனஞ் செய்யும்பொழுது
பஶுபா: ஜஹ்ருஷு: - கோபர்கள் சந்தோஷமடைந்தனர்.
முயை: துதுஷு: - முனிவர்களும் சந்தோஷமடைந்தனர்.
ஸுரேந்த்ர குணா: - இந்திராதிதேவர்கள்
குஸுமானி வவ்ருஷு - புஷ்பங்களைப் பொழிந்தனர்.
ஸ: த்வம் மாம் - அப்படிப்பட்ட தாங்கள் என்னை
அதாந்த கதாத் பரிபாஹி - தீரா வியாதியிலிருந்து காப்பாற்றவேண்டும்

இதி ஸ்ரீமந் நாராயணீயே காளிய மர்த்தனம் நாம பஞ்ச
பஞ்சாஶம் தஶகம் ஸமாப்தம்.

[ஆதித: ஶ்லோகா: 566] [தஶமஸ்கந்த ஸ்லோக: 191]

## தஶகம் - 56

### காளியன் சரணாகதியும் காட்டுத்தீயும்

रुचिरकम्पितकुण्डलमण्डलः सुचिरमीश ननर्तिथ पन्नगे ।
अमरताडितदुन्दुभिसुन्दरं वियति गायति दैवतयौवते ॥१॥

ருசிர கம்பித குண்டல மண்டல:
ஸுசிரமீஶ நநர்த்தித பன்னகே ।
அமரதாடித துந்துபி ஸுந்தரம்
வியதி காயதி தைவதயௌவதே ॥1॥

ஈஶ - ஹே ஸர்வேசுவர!
வியதி தைவத யௌவதே - ஆகாசத்தில் அப்ஸரஸ்திரீகள்
அமர தாடித துந்துபி ஸுந்தரம் காயதி - தேவர்களால் முழக்கப்பட்ட துந்துபி வாத்தியங்களுடன் இனிமையாக பாடும்பொழுது
ருசித கம்பித குண்டமண்டல: - அழகாக அசைக்கின்ற இரு குண்டலங்களையுடைய தாங்கள்
பன்னகே ஸுசிரம் நநர்த்தித - பாம்பின்மேல் வெகுநேரம் ஆடினீர்களல்லவா.

नमति यद्यदमुष्य शिरो हरे परिविहाय तदुन्नतमुन्नतम् ।
परिमथन्पदपङ्करुहा चिरं व्यहरथाः करतालमनोहरम् ॥२॥

நமதி யத்யதமுஷ்ய ஶிரோ ஹரே
பரிவிஹாயத துன்னதமுன்னதம் ।
பரிமதன் பதபங்கருஹா சிரம்
வ்யஹரதா: கரதால-மனோஹரம் ॥2॥

ஹரே அமுஷ்ய - ஹரே ஸ்ரீகிருஷ்ணா! அந்தக்காளியனுடைய
யத்யத் ஶிர: நமதி - எந்தெந்தத் தலை வணங்குகிறதோ
தத் பரிவிஹாய உன்னதம் உன்னதம் - அததை விட்டு மேல்மேல் கிளம்பின தலையை
பத பங்கருஹா - திருவடிமலரால்
கர தால மனோஹரம் பரிமதன் - கரதாளத்துடன் அழகாக மிதித்துக்கொண்டு
சிரம் வ்யஹரதா: - வெகுநேரம் விளையாடினீர்களல்லவா.

त्वदवभग्नविभुग्नफणागणे गलितशोणितशोणितपाथसि ।
फणिपतावव सीदति सन्नतास्तदबलास्तव माधव पादयोः ॥३॥

த்வதபக்ன விபுக்ன பணாகணே
கலிதஶோணித ஶோணித பாதஸி।
பணிபதாவவஸீததி ஸந்நதாஸ்
ததபலாஸ்தவ மாதவ பாதயோ: ॥3॥

மாதவ - ஹே லக்ஷ்மீகாந்தா!
த்வதவ ।பக்ன விபுக்ன பணாகணே - தங்களால் நசுக்கப்பட்டுத் தொங்கின படங்களையுடையவனும்,
கலித ஶோணித ஶோணித பாதஸி பணிபதௌ - பெருகிய ரத்தத்தால் சிவந்ததாகச் செய்யப்பட்ட ஜலத்தையுடையவனுமான ஸர்ப்பராஜன்
அவஸீததி ததபலா: - சோர்வடைந்தபொழுது அவன் பத்தினிகள்
தவ பாதயோ: ஸந்நதா: - தங்கள்திருவடிகளில்வணங்கினார்களல்லவா.

अयि पुरैव चिराय परिश्रुतत्वदनुभावविलीनहृदो हि ताः ।
मुनिभिरप्यनवाप्यपथैः स्तवैर्नुनुवुरीश भवन्तमयन्त्रितम् ॥ ४ ॥

அயி புரைவ சிராய பரிஶ்ருத த்வதனு
பாவ விலீன ஹ்ருதோ ஹிதா: ।
முனிபி ரப்யனவாப்ய பதை: ஸ்தவைர்
நுநுவுரீஶ பவந்த மயந்த்ரிதம் ॥4॥

அயி ஈஶ சிராய புரா ஏவ- ஹே ஸர்வேச்வரா! வெகுநாள் முந்தியே
பரிஶ்ருத த்வதனு பாவ விலீன ஹ்ருத: தா: - கேட்கப்பட்ட தங்களுடைய மஹிமையில் ஈடுபட்ட மனதையுடைய அவர்கள்
முனிபி: அபி - முனிவர்களாலுங்கூட
அனவாப்ய பதை: ஸ்தவை: - அடையமுடியாத வழிகளையுடைய ஸ்தோத்திரங்களால்
அயந்த்ரிதம் நுநுவு: ஹி - தங்குதடையின்றி ஸ்துதித்தார்கள்.

फणिवधूजनभक्तिविलोकनप्रविकसत्करुणाकुलचेतसा ।
फणिपतिर्भवताऽच्युत जीवितस्त्वयि समर्पितमूर्तिरवानमत् ॥ ५ ॥

பணிவதூஜன பக்திவிலோகன
ப்ரவிகஸத் கருணாகுல சேதஸா।
பணிபதிர் பவதாऽச்யுத ஜீவிதஸ்த்வயி
ஸமர்ப்பித மூர்த்தி ரவாநமத் ॥5॥

அச்யுத - தன்னையடைந்தவர்களைக் கைவிடாத ஹே அச்சுதா!

பணிவதூ ஜன பக்தி விலோகன ப்ரவிகத்ஸ கருணாகுல சேதஸா - காளியனுடைய பத்னிகளின் பக்தியைக் கண்டு மேலிட்ட கருணை நிறைந்த மனதையுடைய

பவதா ஜீவித: - தங்களால் உயிர்ப்பிக்கப்பட்ட

பணி பதி: - ஸர்ப்பராஜனான காளியன்

த்வயி ஸமர்பிதமூர்தி: - தங்களிடத்தில் சரீரத்தையர்ப்பணஞ் செய்தவனாய்,

அவானமத் - வணங்கினான்.

रमणकं व्रजे वारिधिमध्यगं फणिरिपुर्न करोति विरोधिताम् ।
इति भवद्वचनान्यतिमानयन् फणिपतिर्निरगादुरगैः समम् ॥ ६ ॥

ரமணகம் வ்ரஜ வாரிதி மத்யகம்
பணிரிபுர் ந கரோதி விரோதிதாம் ।
இதி பவத் வசனான்யதி மானயன்
பணிபதிர் நிரகாதுரகை: ஸமம் ॥6॥

வாரிதி மத்யகம் - "ஸமுத்திரத்தின் நடுவிலிருக்கும்

ரமணிகம் வ்ரஜ - ரமணகத்தீவுக்குப் போவாயாக;

பணிரிபு: விரோதிதாம் ந கரோதி - கருடன் விரோதத்தைச் செய்யமாட்டான்"

இதி பவத் வசனானி - என்ற தங்கள் வசனங்களை

அதி மானயன் - வெகுமானித்துக்கொண்டு

பணிபதி: உரகை: ஸமம் நிரகாத் - காளியன் பாம்புகளுடன் கிளம்பினான்.

फणिवधूजनदत्तमणिव्रज ज्वलितहारदुकूलविभूषितः ।
तटगतैः प्रमदाश्रुविमिश्रितैः समगथाः स्वजनैर्दिवसावधौ ॥ ७ ॥

பணிவதூஜன தத்த மணி வ்ரஜ
ஜ்வலிதஹார துகூல விபூஷித: ।
தடகதை: ப்ரமதாஸ்ருவிமிஸ்ரிதை:
ஸமகதா: ஸ்வஜனைர் திவஸாவதௌ ॥7॥

| | |
|---|---|
| பணி வதூ ஜன தத்த மணிவ்ரஜ ஜ்வலித ஹார து கூல விபூஷித: | நாகபத்னிகளால் கொடுக்கப்பட்ட அனேக ரத்தினங்களால் மிகவும் ப்ரகாசிக்கின்ற மாலையாலும் பட்டாலும் அலங்கரிக்கப்பட்ட தாங்கள் |
| தடகதை: ப்ரமதா ஶ்ரு விமி ஶ்ரிதை: | - கரையிலிருக்கும் ஆனந்தக்கண்ணீர் பெருகிய |
| ஸ்வஜனை: ஸமம் | - தன் பந்துக்களுடன் |
| திவஸாவஸௌ ஸமகதா: | - சாயங்காலத்தில் ஒன்றுசேர்ந்தீரல்லவா. |

निशि पुनस्तमसा व्रजमन्दिरंव्रजितुमक्षम एव जनोत्करे ।
स्वपति तत्र भवच्चरणाश्रये दवकृशानुररुन्ध समन्ततः ॥ ८॥

நிஶிபுனஸ்தமஸா வ்ரஜமந்திரம்
வ்ரஜிதுமக்ஷம ஏவ ஜனோத்கரே ।
ஸ்வபதி தத்ர பவச்சரணாஶ்ரயே
தவக்ருஶானுரருந்த ஸமந்தத: ॥8॥

| | |
|---|---|
| புன: நிஶி ஜனோத் கரே தமஸா | பிறகு இரவில் ஆள்கூட்டம் இருட்டினால் |
| வ்ரஜ மந்திரம் வ்ரஜிதும் அக்ஷமே | கோகுலத்திற்குச் செல்ல முடியாததாய் |
| பவச்சரணாஶ்ரயே | - தாங்கள் திருவடிகளையே ஆச்ரயித்து |
| தத்ர ஏவ ஸ்வபதி தவக்ருஶானு: | - அவ்விடத்திலேயே தூங்கும்பொழுது காட்டுத்தீ |
| ஸமந்தத: அருந்த | - நாற்பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டது. |

प्रबुधितानथ पालय पालयेत्युदयदार्तरवान् पशुपालकान् ।
अवितुमाशु पपाथ महानलं किमिह चित्रमयं खलु ते मुखम् ॥ ९॥

ப்ரபுதிதானத பாலய பாலயேத்யுதய-
தார்த்தரவான் பஶுபாலகான் ।
அவிதுமாஶு பபாத மஹானலம்
கிமிஹ சித்ரமயம் கலு தே முகம் ॥9॥

| | |
|---|---|
| அத ப்ரபுதிதான் | - அப்பொழுது விழித்துக்கொண்டவர்களும் |
| பாலய பாலய இதி | - ''காப்பாற்று, காப்பாற்று'' என்று |
| உதயதார்த்ரவான் | - வருத்தத்துடன் கூக்குரலிடுகின்றவர்களுமான |

பஶுபாலகான் அவிதும் - கோபர்களைக் காப்பாற்றுவதற்கு
மஹானலம் ஆஶு பபாத - பெருந்தீயை விரைவாகப் பானஞ் செய்தீர்களல்லவா.
இஹ சித்ரம் கிம்? - இதில் என்ன ஆச்சரியம்?
அயம் தே முகம் கலு - இந்த அக்னி தங்களுடைய திருவாயல்லவா.

शिखिनि वर्णत एव हि पीतता परिलसत्यधुना क्रिययाऽप्यसौ ।
इति नुतः पशुपैर्मुदितैर्विभो हर हरे दुरितैः सह मे गदान् ॥१०॥

ஶிகினி வர்ணத ஏவ ஹி பீததா
பரிலஸத்யதுனா க்ரியயாऽப்யஸௌ ।
இதி நுத: பஶுபைர் முதிதைர் விபோ
ஹர ஹரே துரிதை: ஸஹ மே கதான் ॥ 10 ॥

ஶிகினி வர்ணத: ஏவ ஹி - அக்னியிடத்தில் நிறத்தினால் மட்டுந்தானல்லவா
பீததா பரில ஸதி - பீதத்துவம் (மஞ்சள் நிறம்) ப்ரகாசிக்கின்றது
அது நா - இப்பொழுது
அஸௌ - அந்தப் பீதத்துவம் (குடிக்கப்பட்டவன் தன்மை)
க்ரியயா அபி - க்ரியாம்சத்தாலும் விளங்குகிறது.
ஹரே விபோ: - பாபங்களைப் போக்கடிக்கும் வல்லமை வாய்ந்த ஹே! ப்ரபுவே!
முதிதை: பஶு: - சந்தோஷமடைந்த கோபர்களால்
இதி நுத: - இவ்வாறு ஸ்துதிக்கப்புட்ட தாங்கள்
மே கதான் - எனது ரோகங்களை
துரிதை: ஸஹ - அதற்குக் காரணங்களான பாபங்களுடன்
ஹர - போக்கடிக்க வேண்டும்.

இதி ஶ்ரீமந் நாராயணீயே காளிய மர்தனே பகவத் அனுக்ரஹ வர்ணனம் நாம ஷட்பஞ்சாஶம் தஶகம்.

[ஆதித: ஶ்லோகா: 576] [தஶமஸ்கந்த ஶ்லோக: 201]

# தஶகம் - 57

## பிரலம்பாஸுர வதம்

रामसखः क्वापि दिने कामद भगवन् गतो भवान्विपिनम् ।
सूनुभिरपि गोपानां धेनुभिरभिसंवृतो लसद्वेषः ॥१॥

ராமஸக: க்வாபி தினே காமத
பகவன் கதோ பவான் விபினம் ।
ஸூனுபிரபி கோபானாம் தேனுபி
ரபி ஸம்வ்ருதோ லஸத்வேஷ: ॥1॥

காமத பகவன் - பக்தர்களுடைய இஷ்டத்தைக் கொடுக்கின்ற (துஷ்டர்களுடைய இஷ்டத்தைக் கெடுக்கின்ற) பகவானே;
பவான் க்வாபி தினே ராமஸக: - தாங்கள் ஒரு நாள் பலராமனுடன்கூட
லஸத்வேஷ: - ஆபரணங்களணிந்தவராய்
கோபானாம் ஸூனுபி: - வெகுதூரத்தில் மேய்ந்துகொண்டு
தேனுபி: அபி அபிஸம்வ்ருத: - ஐஷீகம் என்று பெயருடைய ஒரு வனத்தை
விபினம் கத: - அடைந்தனர்.

सन्दर्शयन्बलाय स्वैरं बृन्दावनश्रियं विमलाम् ।
काण्डीरैः सह बालैर्भाण्डी रकमागमो वटं क्रीडन् ॥२॥

ஸந்தர்ஶயன் பலாய ஸ்வைரம்
ப்ருந்தாவனஶ்ரியம் விமலாம் ।
காண்டீரை: ஸஹ பாலைர் பாண்டீ
ரகமாகமோ வடம் க்ரீடன் ॥2॥

விமலாம் வ்ருந்தாவனஶ்ரியம் - நிர்மலமான ப்ருந்தாவனத்தின் அழகை
ஸ்வைரம் பலாய ஸந்தர்ஶயன் - தன்னிஷ்டப்படி பலராமனுக்கு காண்பித்துக்கொண்டு
காண்டீரை: பாலை: ஸஹ - கையில் தடியெடுத்துக்கொண்ட சிறுவர்களுடன்
க்ரீடன் - விளையாடிக்கொண்டு
பாண்டீரகம் வடம் - பாண்டீரகம் என்ற ஆலமரத்தை
ஆகம: - அடைந்தீர்களல்லவா.

तावत्तावकनिधनस्पृहयालुर्गोपमूर्तिरदयालुः ।
दैत्यः प्रलम्बनामा प्रलम्बबाहुं भवन्तमापेदे ॥ ३ ॥

தாவத்தாவக நிதனஸ்ப்ருஹயாலுர்-
கோபமூர்த்தி-ரதயாலு: ।
தைத்ய: ப்ரலம்பநாமா ப்ரலம்ப
பாஹும் பவந்தமாபேதே ॥3॥

| | | |
|---|---|---|
| தாவத் | - | அப்பொழுது |
| தாவகநிதனஸ்ப்ருஹயாலு: | - | தங்களைக்கொல்ல விரும்பியவனும் |
| அதயாளு: | - | கருணையற்றவனும், |
| ப்ரலம்ப நாமா தைத்ய: | - | ப்ரலம்பனென்று பெயருடையவனுமான அசுரன் |
| கோப மூர்தி: | - | கோபவேஷம் பூண்டவனாய் |
| ப்ரலம்ப பாஹும் பவந்தம் ஆபேதே | - | நீண்ட கைகளையுடைய தங்களிடம் வந்தான். |

जानन्नप्यविजानन्निव तेन समं निबद्धसौहार्दः ।
वटनिकटे पटुपशुपव्याबद्धं द्वन्द्वयुद्धमारब्धाः ॥ ४ ॥

ஜானன்னப்ய விஜானன்னிவ தேன
ஸமம் நிபத்தஸௌஹார்த: ।
வடநிகடே படுபஶுப வ்யாபத்தம்
த்வந்த்வ யுத்த-மாரப்தா: ॥4॥

| | | |
|---|---|---|
| ஜானன் அபி | - | தாங்கள் அறிந்திருந்தாலும் |
| அவிஜானன் இவ தேன ஸமம் | | முற்றிலும் அறியாதவர்போல அவனுடன் |
| நிபத்த ஸௌஹார்த: | - | சினேகஞ்செய்து கொண்டு |
| வட நிகடே | - | ஆலமரத்தினடியில் |
| படுபஶு பவ்யா பத்தம் | - | நிபுணர்களான கோபசிறுவர்களுடன்கூடின |
| த்வந்த்வ யுத்தம் | - | துவந்த்வயுத்தத்தை |
| ஆரப்தா: | - | துவக்கினீர்களல்லவா. |

गोपान्विभज्य तन्वन्सङ्घं बलभद्रकं भवत्कमपि ।
त्वद्बलभीरुं दैत्यं त्वद्बलगतमन्वमन्यथा भगवन् ॥ ५ ॥

கோபான் விபஜ்ய தன்வன்
ஸங்கம் பலபத்ரகம் பவத்கமபி ।
த்வத் பலபீதம் தைத்யம் த்வத்-
பலகதமன்வமன்யதா பகவன் ॥5॥

பகவன் - எல்லாமறிந்த ஹே பகவானே!
கோபான் விபஜ்ய - கோபர்களை இரண்டாகப்பிரித்து
பலபத்ரகம் - பலராமனைத் தலைவனாகக்கொண்டதும்
பவத்கம் அபி - தங்களைத் தலைவனாகக்கொண்டதுமான
ஸங்கம் விதன்வன் - இரண்டு சேரியாகச்செய்து
த்வத்பலபீரும் தைத்யம்- தங்கள் பலத்தைக்கண்டு பயந்த அசுரனை
த்வத்பல கதம் - தங்கள் சேரியிலிருப்பதற்கு
அன்வ மன்யதா - அனுமதித்தீர்களல்லவா.

कल्पितविजेतृवहने समरे परयूथगं स्वदयिततरम् ।
श्रीदामानमधत्थाः पराजितो भक्तदासतां प्रथयन् ॥ ६॥

கல்பித விஜேத்ருவஹனே ஸமரே
பரயூதகம் ஸ்வதயித தரம் ।
ஸ்ரீதாமான மதத்தா பராஜிதோ
பக்த தாஸதாம் ப்ரதயன் ॥ 6 ॥

கல்பித விஜேத்ரு வஹனே - ஜயித்தவர்களை தோற்றவர்கள் தோளில் தூக்கிச் செல்ல வேண்டும் என்ற நிச்சயத்துடன்கூடின
ஸமரே பராஜித: - விளையாட்டுப்போரில் தோற்ற தாங்கள்
பக்த தாஸதாம் ப்ரதயன் - தான் பக்தனுக்கு தாஸன் என்பதை வெளிப்படுத்திக் கொண்டு
பரயூதகம் ஸ்வதயித தரம் - எதிர்பக்ஷத்திலிருக்கும்தனக்கு மிகவும் பிரியனான
ஸ்ரீதாமானம் அதத்தா - ஸ்ரீதாமா என்பவனைதூக்கிச்சென்றீர்களல்லவா.

एवं बहुषु विभूमन् बालेषु वहत्सु वाह्यमानेषु ।
रामविजितः प्रलम्बो जहार तं दूरतो भवद्भीत्या ॥ ७॥

ஏவம் பஹுஷு விபூமன் பாலேஷு
வஹத்ஸு வாஹ்ய மானேஷு ।
ராமவிஜித: ப்ரலம்போ ஜஹார தம்
தூரதோ பவத்பீத்யா ॥ 7 ॥

விபூமன் - எங்கும் நிறைந்திருக்கும் ஹே ஈசா!
ஏவம்பஹுஷு பாலேஷு - இவ்விதம் அனேகஞ்சிறுவர்கள்
வஹத்ஸு - தூக்குகிறவர்களாகவும்
வாஹ்யமானேஷு - தூக்கப்படுகிறவர்களாகவும் இருக்கும்பொழுது
ராம விஜித: ப்ரலம்ப: - பலராமனால் ஜயிக்கப்பட்ட ப்ரலம்பன்

# தஶகம் - 71

## கேசி வதம்

यत्नेषु सर्वेष्वपि नावकेशी केशी स भोजेशितुरिष्टबन्धुः ।
त्वं सिन्धुजावाप्य इतीव मत्वा संप्राप्तवान्सिन्धुजवाजिरूपः ॥१॥

யத்னேஷு ஸர்வேஷ்வபி நாவகேஶீ
கேஶீ ஸ போஜேஶிதுரிஷ்டபந்து: ।
த்வம் ஸிந்து ஜாவாப்ய இதீவ மத்வா
ஸம்ப்ராப்தவான் ஸிந்து ஜவாஜி ரூப: ॥1॥

| | | |
|---|---|---|
| ஸர்வேஷு யத்னேஷு அபி | } | எல்லா பிரயத்தினங்களிலும் |
| ந அவகேஶீ | - | வீணாகாதவனும் |
| போ ஜேஶிது: இஷ்ட பந்து: | } - | கம்ஸனுக்கு நெருங்கின பந்துவுமான |
| ஸ: கேஶீ | - | அந்த கேசிஎன்பவன் |
| த்வம் ஸிந்து ஜாவாப்ய: | - | தாங்கள் சிந்துஜை (மஹாலக்ஷ்மி)யால் சிந்துஜனால் (குதிரையால்) அடையக்கூடியவர் |
| இதி மத்வா இவ | - | என்று எண்ணியவன்போல |
| ஸிந்து ஜாவாஜிரூப: | - | சிந்துதேசத்தில் ஜனித்த குதிரையுருவம் பூண்டவனாக |
| ஸம்ப்ராப்தவான் | - | வந்தானல்லவா. |

गन्धर्वतामेष गतोऽपि रूक्षैर्नादैः समुद्वेजितसर्वलोकः ।
भवद्विलोकावधि गोपवाटीं प्रमर्द्य पापः पुनरापतत्त्वाम् ॥२॥

கந்தர்வதாமேஷ கதோऽபி ரூக்ஷைர்நாதை:
ஸமுத்வேஜித ஸர்வலோக: ।
பவத்விலோகாவதி கோபவாடீம்
ப்ரமர்த்ய பாப: புனராபதத் த்வாம் ॥2॥

| | | |
|---|---|---|
| ஏஷ: பாப: | - | இந்தப் பாபி |
| கந்தர்வதாம் | - | கந்தர்வனா (குதிரையா)க இருக்கும் தன்மையை |
| கத: அபி | - | அடைந்தும் கூட |
| ரூக்ஷை: நாதை: | - | கர்ணகடோரங்களான சத்தங்களால் |
| ஸமுத் வேஜித ஸர்வலோக: | } - | எல்லா ஜனங்களையும் துன்புறுத்தியவனாய் |

பவத் விலோகாவதி - தங்களைக் காண்பதுவரையில்
கோபவாடம் ப்ரமத்ய - கோகுலத்தை அழித்துவிட்டு
புன: த்வாம் ஆபதத் - பிறகு தங்களை எதிர்த்துவந்தான்.

तार्क्ष्यार्पिताङ्घ्रेस्तव तार्क्ष्य एष चिक्षेप वक्षोभुवि नामपादम् ।
भृगोः पदाघातकथां निशम्य स्वेनापि शक्यं तदितीव मोहात् ॥ ३॥

தார்க்ஷ்யார்பிதாங்க்ரே ஸ்தவ தார்க்ஷ்ய
ஏஷ சிக்ஷேப வக்ஷோபுவி நாமபாதம் ।
ப்ருகோ: பதாகாத கதாம் நிஶம்ய
ஸ்வேனாபி ஶக்யம் ததிதீவ மோஹாத் ॥3॥

ஏஷ: தார்க்ஷ்ய: - இந்த தார்க்ஷியன் (குதிரை)
ப்ருகோ: பதா காத கதாம் - பிருகுமஹரிஷி தங்களைக் காலால் மிதித்த கதையை
நிஶம்ய - கேட்டு,
தத் ஸ்வேன அபி ஶக்யம்- அது தன்னாலும் செய்யமுடியும்
இதி மோஹாத் இவ - என்று மதியீனத்தால்போல
தார்க்ஷ்யார் பிதாங்க்ரே: - கருடன்மேல் வைக்கப்பட்ட திருவடிகளையுடைய
தவ வக்ஷோ புவி - தங்களுடைய மார்பில்
பாதம் சிக்ஷேப நாம - காலால் உதைத்தானல்லவா.

प्रवञ्चयन्नस्य खुराञ्चलं द्रागमुं च विक्षेपिथ दूरदूरम् ।
संमूर्छितोऽपि ह्यतिमूर्छितेन क्रोधोष्मणा खादितुमाद्रुतस्त्वाम् ॥

ப்ரவஞ்சயன்னஸ்ய குராஞ்சலம்
த்ராகமுஞ்ச விக்ஷேபித தூரதூரம் ।
ஸம்மூர்ச்சிதோऽஹ்யதி மூர்ச்சிதேன
க்ரோ தோஷ்மணா காதிது மாத்ருதஸ்த்வாம் ॥4॥

அஸ்ய குராஞ்சலம் - அவனுடைய காலுதையை
ப்ரவஞ்சயன் த்ராக் அமும் ச - ஏமாற்றிக்கொண்டு விரைவாக அவனையும்
தூர தூரம் விக்ஷேபித - வெகுதூரத்தில் எறிந்தீர்கள்.
ஸம்மூர்ச்சித: அபி - அதனால் அவன் மயக்கமடைந்துங்கூட
அதி மூர்ச்சிதேன - மிகவும் வளர்ந்ததான
க்ரோதோஷ்மணா - கோபக்கனலுடன்
த்வாம் காதிதும் ஆத்ருத: ஹி - தங்களைத் தின்பதற்கு ஓடிவந்தானல்லவா.

त्वं वाहदण्डे कृतधीश्च बाहादण्डं न्यधास्तस्य मुखे तदानीम् ।
तद्वृद्धिरुद्धश्वसनो गतासुः सप्तीभवन्नप्ययमैक्यमागात् ॥ ५ ॥

த்வம் வாஹதண்டே க்ருததீஶ்ச பாஹாதண்டம்
ந்யதாஸ்தஸ்ய முகே ததானீம் ।
தத்வ்ருத்திருத்த ஶ்வஸனோ கதாஸு:
ஸப்தீ பவன்-னப்யயமைக்யமாகாத் ॥5॥

த்வம் வாஹதண்டே - தாங்கள் வாஹத்தை (குதிரையை) தண்டிப்பதில்
க்ருததீ: ச தஸ்ய முகே - மனஉறுதிகொண்டிருப்பதாலும் அவன் வாயில்
பாஹாதண்டம் ந்யதா: - தண்டம்போன்ற கையைச் செலுத்தினீர்களல்லவா.
ததானீம் - அப்பொழுது
தத்வ்ருத்தி ருத்தஶ்வஸன: - அந்த கை வளர்ந்ததால் தகையப்பட்ட மூச்சுக்காற்றையுடையவனும்
கதாஸு: அயம் - அதனால் உயிரிழந்தவனுமான அவன்
ஸஸீ பவன் அபி - ஏழாக (குதிரையாக) இருந்தபோதிலும்
ஐக்யம் ஆகாத் - ஒன்றாயிருக்கும் தன்மையை (கைவல்யத்தை) அடைந்தானல்லவா.

आलम्भमात्रेण पशोः सुराणां प्रसादके नूत्न इवाश्वमेधे ।
कृते त्वया हर्षवशात्सुरेन्द्रास्त्वां तुष्टुवुः केशवनामधेयम् ॥ ६ ॥

ஆலம்ப மாத்ரேண பஶோ: ஸுராணாம்
ப்ரஸாதகே நூத்ன இவாஶ்வமேதே ।
க்ருதே த்வயா ஹர்ஷவஶாத் ஸுரேந்த்ராஸ்
த்வாம் துஷ்டுவு: கேஶவ நாமதேயம் ॥6॥

பஶோஆலம்பமாத்ரேண - யாகபசுவைக் கொன்றதால் மட்டும்
ஸுராணாம் ப்ரஸாதகே - தேவர்களுக்குத் திருப்தியைச் செய்கின்ற
நூத்ந இவ அஶ்வமேதே - புதிதாக இருக்கும் அச்வமேதயாகம்
த்வயா க்ருதே - தங்களால் செய்யப்பட்டபொழுது
ஸுரேந்த்ரா: ஹர்ஷவஶாத் - தேவர்களால் சந்தோஷத்தால்
த்வாம் கேஶவ நாம தேயம் - தங்களை கேசவன் என்ற பெயருடையவராக
துஷ்டுவு: - ஸ்துதித்தார்களல்லவா.

कंसाय ते शौरिसुतत्वमुक्त्वा तं तद्वधोत्कं प्रतिरुध्य वाचा ।
प्राप्तेन केशिक्षपणावसाने श्रीनारदेन त्वमभिष्टुतोऽभूः ॥ ७ ॥

கம்ஸாய தே ஶௌரிஸுதத்வ முக்த்வா
தம் தத்வதோத்கம் ப்ரதிருத்த்ய வாசா!
ப்ராப்தேன கேஶிக்ஷபணாவஸானே
ஸ்ரீ நாரதேன த்வமபிஷ்டுதோऽபூ: ॥7॥

| | | |
|---|---|---|
| கம்ஶாய | - | கம்ஸனுக்கு |
| தேஶௌரி ஸுதத்வம் | - | தாங்கள் வசுதேவரின் புத்திரன் என்பதை |
| உக்த்வா | - | எடுத்துரைத்து |
| தத்வதோத்கம் | - | அந்த வசுதேவரைக் கொல்ல விரும்பிய |
| தம் வாசா ப்ரதிருத்ய | - | அந்தக் கம்ஸனை நல்ல வார்த்தையால் தடுத்து |
| கேஶி க்ஷபணாவஸானே | - | கேசிவதத்தின் முடிவில் |
| ப்ராப்தேன ஸ்ரீ நாரதேன | - | வந்துசேர்ந்த ஸ்ரீநாரதரால் |
| த்வம் அபிஷ்டுத: அபூ: | - | தாங்கள் நன்கு ஸ்துதிக்கப் பட்டீர்களல்லவா. |

कदाऽपि गोपैः सह काननान्ते निलायनक्रीडनलोलुपं त्वाम् ।
मयात्मजः प्राप दुरन्तमायो व्योमाभिधो व्योमचरोपरोधी ॥८॥

கதாऽபி கோபை:ஸஹ கானனாந்தே
நிலாயன க்ரீடன லோலுபம் த்வாம் ।
மயாத்மஜ: ப்ராப துரந்தமாயோ
வ்யோமாபிதோ வ்யோமசரோபரோதீ ॥8॥

| | | |
|---|---|---|
| கதா அபி | - | ஒருநாள் |
| வ்யோம சரோ பரோதீ | - | தேவர்களைத் துன்புறுத்துகின்றவனும் |
| துரந்தமாய: | - | அளவற்ற மாயைகளையுடையவனும் |
| மயாத்மஜ: | - | மயாசுரன் பிள்ளையும் |
| வ்யோமாபித: | - | வ்யோமன் என்ற பெயருடையவனுமான அசுரன் |
| கானனாந்தேகோபை:ஸஹ | - | காட்டில் கோபாலர்களுடன் |
| நிலாயனக்ரீடநலோலுபம் | - | ஒளிந்துவிளையாடுவதில் ஈடுபட்டிருக்கும் |
| த்வாம் ப்ராப | - | தங்களிடம் வந்தானல்லவா. |

स चोरपालायितवल्लवेषु चोरायितो गोपशिशून्पशूंश्च ।
गुहासु कृत्वा पिदधे शिलाभिस्त्वया च बुद्ध्वा परिमर्दितोऽभूत् ॥९॥

ஸ சோர பாலாயித வல்லவேஷு
சோராயிதோ கோபஶிஶூன் பஶூம்ஶ்ச ।
குஹாஸு க்ருத்வா பிதத்தே ஶிலாபிஸ்த்வயா
ச புத்த்வா பரிமர்த்திதோऽபூத் ॥9॥

ஸ: - அவன்,
சோர பாலாயித வல்லவேஷு - திருடர்களாகவும் காப்பாற்றுகிறவர்களாக -வும் விளையாடுகின்ற கோபர்களுக் -கிடையில்
சோராயித: - திருடனாக விளையாடுகின்றவனாய்
கோபஶிஶூன் பஶூன்- கோபகுமாரர்களையும் பசுக்களையும்
குஹாஸு க்ருத்வா - குகைகளில் கொண்டுபோய் விட்டு
ஶிலாபி: பிததே - கற்களால் மூடிவிட்டான்.
புத்த்வா த்வயா - அதையறிந்து தங்களால்
பரிமர்தித: அபூத ச - கொல்லப்படவுஞ் செய்தானல்லவா.

एवंविधैश्चाद्भुतकेलिभेदैरानन्दमूर्छामतुलां व्रजस्य ।
पदे पदे नूतनयन्नसीमां परात्मरूपिन् पवनेशपायाः ॥ १० ॥

ஏவம் விதைஶ்சாத்புத கேலிபேதை
ரானந்தமூர்ச்சா மதுலாம் வ்ரஜஸ்ய ।
பதேபதே நூதனயன்னஸீமம்
பராத்மரூபின் பவனேஶ பாயா: ॥ 10 ॥

பராத்மரூபின் பவனேஶ - பரமாத்மஸ்வரூபியான ஹே குருவாயூரப்பா!
ஏவம் விதை: - இப்படிப்பட்ட
அத்புதகேளி பேதை: ச - ஆச்சரியகரமான பல விளையாட்டுகளாலும்
வ்ரஜஸ்ய அதுலாம் - கோகுலத்திற்கு ஒப்பற்ற
ஆனந்த மூர்ச்சாம் பதேபதே - ஆனந்தப்பெருக்கை அடிக்கடி
அஸீமம் - எல்லையற்றதாக
நூதநயன் - புதிதுபுதிதாகச் செய்துகொண்டிருக்கும் தாங்கள்
பாயா: - என்னைக் காப்பாற்றவேண்டும்.

இதி ஶ்ரீமந் நாராயணீயே கேஶிவ்யோம வத வர்ணனம் நாம ஏக ஸப்த திதமம் தஶகம்.

[ஆதித: ஶ்லோகா: 728] [தஶமஸ்கந்த ஶ்லோக: 353]

# தஶகம் - 72

## அக்ரூராக மனம்

कंसोऽथ नारदगिरा व्रजवासिनं त्वामाकर्ण्य दीर्णहृदय: स हि गान्दिनेयम् ।
आहूय कार्मुकमखच्छलतो भवन्तमानेतुमेनमहिनोदहिनाथशायिन् ॥१॥

கம்ஸோऽத நாரதகிரா வ்ரஜவாஸினம் த்வா-
மாகர்ண்ய தீர்ண ஹ்ருதய: ஸ ஹி காந்தினேயம் ।
ஆஹூய கார்முக மகச்சலதோ பவந்த
மானேது மேன மஹினோ தஹிநாத ஶாயின் ॥1॥

| | | |
|---|---|---|
| அஹி நாத ஶாயின் | - | பாம்பின்மேல் பள்ளிகொண்டிருக்கும் ஹே ஈசா! |
| அத நாரத கிரா | - | பிறகு நாரதரின் வாக்கினால் |
| த்வாம் வ்ரஜவாஸினம் | - | தாங்கள் கோகுலத்தில் வசிப்பதாக |
| ஆகர்ண்ய ஸ: கம்ஸ: | - | கேள்விப்பட்டு, அந்த கம்ஸன் |
| தீர்ண ஹ்ருதய: | - | மனமுடைந்தவனாய் |
| காந்திநேயம் ஆஹூய | - | காந்தினியின் பிள்ளையான அக்ரூரனை அழைத்து |
| கார்முக மகச்சலத: | - | வில்யாகம் என்ற வியாஜத்தைக்கொண்டு |
| பவந்தம் ஆனேதும் | - | தங்களை அழைத்துவர |
| ஏனம் அஹி நோத் ஹி | - | அந்த அக்ரூரனை அனுப்பினானல்லவா. |

अक्रूर एष भवदङ्घ्रिपरश्चिराय
त्वद्दर्शनाक्षममना: क्षितिपालभीत्या ।
तस्याज्ञयैव पुनरीक्षितुमुद्यतस्त्वाम्
आनन्दभारमतिभूरितरं बभार ॥ २॥

அக்ரூர ஏஷ பவதங்க்ரி பரஶ்சிராய
த்வத்தர்ஶனாக்ஷம மனா: க்ஷிதிபாலபீத்யா ।
தஸ்யாஜ்ஞயைவ புனரீக்ஷிதுமுத்யதஸ்த்வா-
மானந்தபார மதிபூரிதரம் பபார ॥2॥

| | | |
|---|---|---|
| சிராய பவதங்க்ரி பர: | - | வெகுகாலமாகவே தங்கள் திருவடிகளை சேவிக்கின்றவனும் |
| க்ஷிதி பால பீத்யா | - | அரசனிடமிருந்து பயத்தால் |
| த்வத்தர்ஶனாக்ஷம மனா: | - | தங்களை தரிசிக்க சக்தியற்ற மனம் உடையவனுமான |
| ஏஷ: அக்ரூர: புன: | - | அந்த அக்ரூரர் இப்பொழுது |

| | | |
|---|---|---|
| தஸ்ய ஏவ ஆக்ஞயா | - | அதே அரசனுடைய கட்டளையால் |
| த்வாம் ஈக்ஷிதும் உத்யத: | - | தங்களை தரிசிக்க முயற்சித்தவராய் |
| அதி பூரிதரம் | - | மிக அதிகமான |
| ஆனந்த பாரம் பபார | - | ஆனந்தத்தையடைந்தார். |

सोऽयं रथेन सुकृती भवतो निवासं
गच्छन्मनोरथगणांस्त्वयि धार्यमाणान् ।
आस्वादयन्मुहुरपायभयेन दैवं
संप्रार्थयन्पथि न किञ्चिदपि व्यजानात् ॥ ३॥

ஸோயம் ரதேன ஸுக்ருதீ பவதோ நிவாஸம்
கச்சன் மனோரத கணாம் ஸ்த்வயி தார்யமாணான் ।
ஆஸ்வாதயன் முஹுரபாய பயேன தைவம்
ஸம்ப்ரார்த்தயன் பதி ந கிஞ்சிதபி வ்யஜானாத் ॥3॥

| | | |
|---|---|---|
| பவத: நிவாஸம் | - | தங்கள் இருப்பிடத்திற்கு |
| ரதேன கச்சன் | - | தேரில் ஏறிச்செல்லுகின்ற |
| ஸுக்ருதீஸ: அயம் | - | புண்யவானான அந்த அக்ரூரன் |
| த்வயி தார்ய மாணான் | - | தங்களிடத்தில் வைக்கப்பட்டிருக்கும் |
| மனோரத கணாம் | - | மனோரதக்கூட்டங்களை |
| முஹு: ஆஸ்வாதயன் | - | அடிக்கடி ஆலோசித்தனுபவித்துக்கொண்டு |
| அபாய பயேன | - | அவைகளுக்கு இடையூறு நேர்ந்துவிடுமோ என்ற பயத்தால் |
| தைவம் ஸம்ப்ரார்தயன் | - | இஷ்டதைவத்தை பிரார்த்திக்கின்றவராய் |
| பதி கிஞ்சித் அபி நவ்ய ஜானாத் | - | வழியில் ஒன்றுமேயறியவில்லை. |

द्रक्ष्यामि वेदशतगीतगतिं पुमांसं
स्प्रक्ष्यामि किंस्विदपिनाम परिष्वजेयम् ।
किं वक्ष्यते स खलु मां क्वनु वीक्षितः स्या
दित्थं निनाय स भवन्मयमेव मार्गम् ॥ ४॥

த்ரக்ஷ்யாமி வேதஶதகீத கதிம் புமாம்ஸம்
ஸ்ப்ரக்ஷ்யாமி கிம்ஸ்விதபி நாம பரிஷ்வஜேயம் ।
கிம் வக்ஷ்யதே ஸ கலு மாம் க்வனு வீக்ஷித: ஸ்யா
தித்தம் நினாய ஸ பவன்மயமேவ மார்க்கம் ॥4॥

| | | |
|---|---|---|
| வேதஶதிகீத கதிம் | - | அனேக உபநிமிஷத்துக்களால் கானம் (உபதேசம்) பண்ணப்பட்ட ஸ்வரூப (அடையவேண்டியமார்க்க)த்தையுடைய |
| புமாம்ஸம் த்ரக்ஷ்யாமி கிம்ஸ்வித் | | பரமபுருஷனை நான் காண்பேனா? |

அபி ஸ்ப்ரக்ஷ்யாமி - நான் தொடுவேனா?
பரிஷ்வ ஜேயம் நாம - ஆலிங்கனம் பண்ணிக்கொள்ளுவேனா?
ஸ: கலு மாம் வஷ்யதே கிம் } அவரும் என்னிடத்தில் பேசுவாரா?
க்வனு வீக்ஷித: ஸ்யாத் - எவ்விடத்தில் பார்க்கப்படுவார்?
இத்தம் ஸ: மார்கம் - என்றிவ்விதமாக அவர் வழியில்
பவன் மயம் ஏவ - பூராவும் தாங்கள் நிறைந்திருப்பதாகவே எண்ணி
நிநாய - கடந்து சென்றாரல்லவா.

भूयः क्रमादभिविशन्भवदङ्घ्रिपूतं
वृन्दावनं हरविरिञ्चसुराभिवन्द्यम् ।
आनन्दमग्न इव लग्न इव प्रमोहे
किं किं दशान्तरमवाप न पङ्कजाक्ष ॥ ५ ॥

பூய: க்ரமாதபிவிஶன் பவதங்க்ரி பூதம்
ப்ருந்தாவனம் ஹரவிரிஞ்ச-ஸுராபிவந்த்யம்
ஆனந்த மக்ன இவ லக்ன இவ ப்ரமோஹே
கிம் கிம் தஶாந்தரமவாப ந பங்கஜாக்ஷ ॥5॥

பங்கஜாக்ஷ பூய: க்ரமாத் - ஹே செந்தாமரைக்கண்ணா! மறுபடி கிரமமாக
பவதங்க்ரி பூதம் - தங்கள் திருவடிகள் பட்டு மிக சுத்தமானதும்
ஹரவிரிஞ்ச ஸுராபிவந்த்யம் } - பரமசிவன் பிரம்மதேவர் முதலிய தேவர்களால் வணங்கத் தகுந்ததுமான
வ்ருந்தாவனம் அபி விஶன் - பிருந்தாவனத்தில் செல்லுகின்ற அவர்
ஆனந்த மக்ன: இவ - ஆனந்தத்தில் மூழ்கியவர்போலவும்,
ப்ரமோஹே லக்ன இவ - மதிமயக்கத்தையடைந்தவர்போலவும்
கிம்கிம் தஶாந்தரம் ந அவாப } - என்னென்ன அவஸ்தைகளைத்தான் அடையவில்லை?

पश्यन्नवन्दत भवद्विहृतिस्थलानि
पांसुष्ववेष्टत भवच्चरणाङ्कितेषु ।
किं ब्रूमहे बहुजना हि तदापि जाता
एवं तु भक्तितरला विरलाः परात्मन् ॥ ६ ॥

பஶ்யந்நவந்தத பவத் விஹ்ருதிஸ்த்தலானி
பாம்ஸுஷ்வவேஷ்டத பவச்சரணாங்கிதேஷு ।
கிம் ப்ரூமஹே பஹுஜனா ஹி ததாபி ஜாதா
ஏவம் து பக்திதரலா விரலா: பராத்மன் ॥6॥

| | | |
|---|---|---|
| பவத்விஹ்ருதிஸ்தலானி | - | தங்களுடைய விளையாட்டுஸ்தலங்களை |
| பஶ்யந் அவந்தத | - | கண்டதும் வணங்கினார்; |
| பவத் சரணாங்கிதேஷு | - | தங்கள் திருவடிகளால் அடையாளம் பண்ணப்பட்ட |
| பாம்ஸுஷு அவேஷ்டத கிம் ப்ரூமஹே | - | புழுதிகளில் புரண்டார்; நான் என்ன சொல்லுவேன்? |
| பராத்மன் | - | பரமாத்மஸ்வரூபியே! |
| ததா அபி பஹுஜனா: | - | அந்தக்காலத்திலும் அனேக ஜனங்கள் |
| ஜாதா: ஹி | - | ஜனித்திருக்கிறார்களல்லவா; |
| து ஏவம் பக்திதரளா: | - | ஆனால் இவ்விதம் பக்திபரவசர்கள் |
| விரலா: | - | மிகக் குறைவே. |

सायं स गोपभवनानि भवच्चरित्र
गीतामृतप्रसृतकर्णरसायनानि ।
पश्यन्प्रमोदसरिदेव किलोह्यमानो
गच्छन्भवद्भवन सन्निधिमन्वयासीत् ॥ ७॥

ஸாயம் ஸ கோப பவனானி பவச்சரித்ர
கீதாம்ருத ப்ரஸ்ருத கர்ண ரஸாயனானி ।
பஶ்யன் ப்ரமோதஸரிதேவ கிலோஹ்யமானோ
கச்சன் பவத்பவன ஸந்நிதி மன்வயாஸீத் ॥7॥

| | | |
|---|---|---|
| ஸ: ஸாயம் | - | அந்த அக்ரூரர் சாயங்காலத்தில் |
| பவச் சரித்ர கீதாம்ருத ப்ரஸ்ருத கர்ண ரஸாயனானி | - | தங்கள் சரித்திரங்களை கானம் பண்ணுவதென்ற அமிருதப்பிரவாகமாகிற காதுகளுக்கு ரசாயனங்களையுடைய |
| கோபபவனானி பஶ்யன் | - | இடையர் வீடுகளைப் பார்த்துக்கொண்டே |
| ப்ரமோத ஸரிதா | - | ஆனந்தப்பெருக்கால் |
| உஹ்யமான: இவ | - | இழுத்துச்செல்லப்படுகிறவர்போல |
| கச்சன் | - | போய்க்கொண்டே |
| பவத் பவன ஸந்நிதிம் | - | தங்கள் வீட்டுப்பக்கத்தில் |
| அன்வயாஸீத் கில | - | வந்துசேர்ந்தாரல்லவா. |

तावद्ददर्श पशुदोहविलोकलोलं
भक्तोत्तमागतिमिव प्रतिपालयन्तम् ।
भूमन् भवन्तमयमग्रजवन्तमन्त
र्ब्रह्मानुभूतिरससिन्धुमिवोद्वमन्तम् ॥ ८॥

தாவத்ததர்ஶ பஶுதோஹ விலோகலோலம்
பக்தோத்தமாகதிமிவ ப்ரதிபாலயந்தம் ।
பூமன் பவந்த மயமக்ரஜவந்த மந்தர்
ப்ரஹ்மானுபூதி ரஸஸிந்து மிவோத்வமந்தம் ॥8॥

பூமன் - எங்கும் நிறைந்திருக்கும் ஹே ஈசா!
தாவத் அயம் - அதற்குள் அந்த அக்ரூரர்
பஶுதோஹ விலோக லோலம் - மாடுகறப்பதைப் பார்க்க ஆசை கொண்டவரும்,
பக்தோத்தமாகதிம் - சிறந்த பக்தனுடைய வரவை
ப்ரதி பாலயந்தம் இவ - எதிர்பார்க்கின்றவர்போலவும்,
அக்ரஜ வந்தம் - அண்ணனுடன் கூடினவரும்,
அந்த: - தனது சித்தவிருத்தியில்
ப்ரஹ்மானு பூதி ரஸ ஸிந்தும் - பிரம்மஞானத்தாலுண்டான ஆனந்தக் கடலை
உத்வமந்தம் இவ - பெருகவிடுகிறவர்போலுமிருக்கிற
பவந்தம் ததர்ஶ - தங்களைக் கண்டாரல்லவா.

सायन्तनाप्लवविशेषविविक्तगात्रौ
द्वौ पीतनीलरुचिराम्बरलोभनीयौ ।
नातिप्रपञ्चधृतभूषणचारुवेषौ
मन्दस्मितार्द्रवदनौ स युवां ददर्श ॥ ९ ॥

ஸாயந்தனாப்லவ விஶேஷ விவிக்தகாத்ரௌ
த்வௌ பீதநீல ருசிராம்பர லோபநீயௌ ।
நாதிப்ரபஞ்ச த்ருதபூஷண சாருவேஷௌ
மந்தஸ்மிதார்த்ரவதநௌ ஸ யுவாம் ததர்ஶ ॥9॥

ஸ: - அந்த அக்ரூரர்
ஸாயந்தநாப்லவ விஶேஷ விவிக்த காத்ரௌ - மாலைப்பொழுதில் குளித்ததால் விசேஷமாக தூய்மைபெற்ற திருமேனியை யுடையவர்களும்,
பீதநீல ருசிராம்பர: லோப நீயௌ - மனோகரமான மஞ்சப்பட்டாடையாலும் நீலப்பட்டாடையாலும் மிக அழகு வாய்ந்தவர்களும்,
நாதி ப்ரபஞ்சத்ருத பூஷண சாருவேஷௌ - அதிகமில்லாமல் சிற்சில ஆபரணங்களை அணிந்திருந்ததால் அழகான வேஷமுடையவர்களும்,
மந்தஸ்மிதார்த்ர வதனௌ - மந்தஹாஸத்தால் கனிந்த முகமுடையவர் -களுமான
யுவாம் த்வௌ ததர்ஶ - உங்களிருவர்களையும் கண்டாரல்லவா.

दूराद्रथात्समवरुह्य नमन्तमेन
मुत्थाप्य भक्तकुलमौलिमथोपगूहन् ।
हर्षान्मिताक्षरगिरा कुशलानुयोगी
पाणिं प्रगृह्य सबलोऽथ गृहं निनेथ ॥ १० ॥

தூராத் ரதாத்ஸமவருஹ்ய நமந்தமேன
முத்தாப்ய பக்தகுலமௌலி மதோபகூஹன் ।
ஹர்ஷான்மிதாக்ஷரகிரா குஶலானு யோகீ
பாணிம் ப்ரக்ருஹ்ய ஸபலோ஽த க்ருஹம் நிநேத ॥ 10 ॥

| | |
|---|---|
| அத தூராத் | - உடனே வெகுதூரத்திலிருந்து |
| ரதாத் ஸமவருஹ்ய நமந்தம் | - தேரிலிருந்து இறங்கி வணங்குகிறவரும், |
| பக்த குல மௌலிம் ஏனம் | - பக்தர்களில் சிறந்தவருமான அந்த அக்ரூரரை |
| உத்தாப்ய அத உபகூஹன் | - எழுப்பிய பிறகு கட்டித் தழுவிக்கொண்டு |
| ஹர்ஷாத் மிதாக்ஷர கிரா | - சந்தோஷத்தினால் சில வார்த்தைகளைக் கொண்டு |
| குஶலானு யோகீ | - க்ஷேமத்தை விசாரித்து |
| ஸபல: பாணிம் ப்ரக்ருஹ்ய | - பலராமனுடன் கையைப்பிடித்துக்கொண்டு |
| க்ருஹம் நிநேத | - வீட்டிற்கு அழைத்துச்சென்றீர்களல்லவா. |

नन्देन साकममितादरमर्चयित्वा
तं यादवं तदुदितां निशमय्य वार्ताम् ।
गोपेषु भूपतिनिदेशकथां निवेद्य
नानाकथाभिरिह तेन निशामनैषीः ॥ ११ ॥

நந்தேன ஸாக மமிதாதர மர்ச்சயித்வா
தம் யாதவம் ததுதிதாம் நிஶமய்ய வார்த்தாம் ।
கோபேஷு பூபதி நிதேஶ கதாம் நிவேத்ய
நானாகதாபிரிஹ தேந நிஶா-மனைஷீ: ॥ 11 ॥

| | |
|---|---|
| நந்தேன ஸாகம் | - நந்தகோபருடன் |
| யாதவம் தம் | - யதுவம்சத்தில் பிறந்த அந்த அக்ரூரரை |
| அமிதாதரம் அர்சயித்வா | - மிக ஆதரவுடன் வெகுமானித்து |
| ததுதிதாம் வார்தாம் நிஶமய்ய | - அவர் சொன்ன விருத்தாந்தத்தைக் கேட்டு |

| | | |
|---|---|---|
| பூபதி நிதேஶ கதாம் | - | அரசன் கட்டளையையும் |
| கோபேஷு நிவேத்ய | - | கோபர்களிடத்தில் தெரிவித்து, |
| தேன இஹ | - | அந்த அக்ரூரருடன் அந்த நந்தகோபர் வீட்டில் |
| நாநா கதாபி: | - | பல சங்கதிகளைப் பேசிக்கொண்டு |
| நிஶாம் அனைஷீ: | - | இரவைக் கழித்தீர்களல்லவா. |

चन्द्रागृहे किमुत चन्द्रभगागृहे नु
राधागृहे नु भवने किमु मैत्रविन्दे ।
धूर्त्तो विलम्बत इति प्रमदाभिरुच्चै
राशङ्कितो निशि मरुत्पुरनाथ पायाः ॥ १२॥

சந்த்ராக்ருஹே கிமுத சந்த்ரபகா க்ருஹே நு
ராதா க்ருஹே நு பவனே கிமு மைத்ரவிந்தே ।
தூர்த்தோ விலம்பத இதி ப்ரமதாபிருச்சை-
ராஶங்கிதோ நிஶி மருத்புரநாத பாயா: ॥ 12 ॥

| | | |
|---|---|---|
| தூர்த: | - | வஞ்சகனான கிருஷ்ணன் |
| சந்த்ராக்ருஹே கிமுத | - | சந்திரையின் வீட்டிலா அல்லது |
| சந்த்ர பகா க்ருஹே நு | - | சந்திரபகையின் வீட்டிலா அல்லது |
| ராதா க்ருஹே நு | - | ராதையின் வீட்டிலா அல்லது |
| மைத்ரவிந்தே பவனே கிமு | } | மித்திரவிந்தையின் வீட்டில்தானா |
| விளம்பத: இதி | - | தாமதிக்கிறான் என்று |
| ப்ரமதாபி: நிஶி | - | கோபிகைகளால் இரவில் |
| உச்சை: ஆஶங்கித: | - | மிகவும் சந்தேகப்படப்பட்டீர்களல்லவா |
| மருத்புரநாத | - | ஹே குருவாயூரப்பா! |
| பாயா: | - | தாங்கள் என்னைக் காப்பாற்றவேண்டும். |

இதி ஸ்ரீமந் நாராயணீயே அக்ரூரஸ்ய கோகுல யாத்ரா வர்ணனம் நாம த்விஸப்ததிதமம் தஶகம் ஸத்விதம்.

[ஆதித: ஶ்லோகா: 740] [தஶமஸ்கந்த ஶ்லோக: 365]

# தஶகம் - 73

## மதுரைக்குப் புறப்படுதல்

निशमय्य तवाथ यानवार्तां भृशमार्ताः पशुपालबालिकास्ताः ।
किमिदं किमिदं कथन्न्विती मा: समवेताः परिदेवितान्यकुर्वन् ॥१॥

நிஶமய்ய தவாத யான வார்த்தாம்
ப்ருஶமார்த்தா: பஶுபாலபாலிகாஸ்தா: ।
கிமிதம் கிமிதம் கதம் ந்விதீமா:
ஸமவேதா: பரிதேவிதான்யகுர்வன் ॥1॥

அத தவ - பிறகு தங்களுடைய
யானவார்தாம் நிஶமய்ய - பிரயாண சமாசாரத்தைக் கேட்டு,
ப்ருஶம் ஆர்தா: - மிக வருத்தமடைந்த
இமா: தா: பஶுபால பாலிகா - அந்த கோப கன்னிகைகள்,
ஸமவேதா: இதம் கிம் இதம் கிம் - ஒன்றுசேர்ந்து, "இதென்ன? இதென்ன?
கதம் நு இதி - இதெவ்விதம் முடியும்" என்று
பரிதேவிதானி அகுர்வன் - பிரலபித்தார்களல்லவா.

करुणानिधिरेष नन्दसूनुः कथमस्मान्विसृजेदनन्यनाथाः ।
वत नः किमु दैवमेवमासीदिति तास्त्वद्गतमानसा विलेपुः ॥२॥

கருணாநிதிரேஷ நந்தஸூனு:
கதமஸ்மான் விஸ்ருஜேதனன்யநாதா: ।
பத ந: கிமு தைவமேவ மாஸீ
திதி தாஸ்த்வத்கத மானஸா விலேபு: ॥2॥

கருணாநிதி: ஏஷ நந்தஸூனு: - "கருணாநிதியான இந்தக் கிருஷ்ணன்
அனன்ய நாதா: அஸ்மான் - வேறு நாதனில்லாத நம்மை
கதம் விஸ்ருஜேத் பத - எவ்விதம் கைவிடுவான்? கஷ்டமே!
ந: தைவம் ஏவம் ஆஸீத் கிமு - நம்ம தலைவிதி இவ்விதம் விபரீதம் ஆய்விட்டதா?"
இதி தா: - என்றிவ்விதம் அவர்கள்
த்வத் கதமானஸா: - தங்களிடம் மனதைச் செலுத்தியவர்களாக
விலேபு: - பிரலாபித்தார்களல்லவா.

चरमप्रहरे प्रतिष्ठमानः सह पित्रा निजमित्रमण्डलैश्च ।
परितापभरं नितम्बिनीनां शमयिष्यन् व्यमुचस्सखायमेकम् ॥ ३॥

சரம ப்ரஹரே ப்ரதிஷ்டமான:
ஸஹபித்ரா நிஜமித்ர மண்டலைஶ்ச ।
பரிதாபபரம் நிதம் பினீனாம்
ஶமயிஷ்யன் வ்யமுச: ஸகாயமேகம் ॥3॥

சரமப்ரஹரே பித்ரா ஸஹ - இரவின் கடைசி யாமத்தில் பிதாவுடனும்,
நிஜமித்ர மண்டலை: ச - தனது தோழர்களுடனும்
ப்ரதிஷ்டமான: நிதம்பினீனாம் - புறப்படுகின்ற தாங்கள் கோபிகைகளுடைய
பரிதாபபரம் ஶமயிஷ்யன் - வருத்தத்தைத் தணிக்கின்றவராய்
ஏகம் ஸகாயம் வ்யமுச: - ஒரு தோழனை சொல்லியனுப்பினீர்-களல்லவா.

अचिरादुपयामि सन्निधिं वो भविता साधु मयैव सङ्गमश्रीः ।
अमृताम्बुनिधौ निमज्जयिष्ये द्रुतमित्याश्वसिता वधूरकार्षीः ॥ ४॥

அசிராதுபயாமி ஸந்நிதிம் வோ
பவிதா ஸாது மயைவ ஸங்கமஶ்ரீ: ।
அம்ருதாம்புநிதௌ நிமஜ்ஜயிஷ்யே
த்ருதமித்யாஶ்வஸிதா வதூரகார்ஷீ: ॥4॥

அசிராத்வ: ஸந்நிதிம் உபயாமி - "தாமதியாமல் தங்கள் பக்கத்திற்கு வருவேன்;
மயா ஏவ ஸங்கம ஶ்ரீ: - என்னோடுகூடவே சம்போகசுகம்
ஸாது பவிதா - வேண்டியபடி சம்பவிக்கும்
அம்ருதாம்புநிதௌ - ஆனந்தக்கடலில் (மோக்ஷத்தில்)
த்ருதம் நிமஜ்ஜயிஷ்யே இதி - தாமதியாமல் முழுகச்செய்கிறேன்" என்று
வதூ: ஆஶ்வஸிதா அகார்ஷி: - கோபிகைகளை சமாதானப் படுத்தினீர்களல்லவா.

सविषादभरं सयाच्ञमुच्चैरतिदूरं वनिताभिरीक्ष्यमाणः ।
मृदु तद्दिशि पातयन्नपाङ्गान् सबलोऽक्रूररथेन निर्गतोऽभूः ॥ ५॥

ஸவிஷாதபரம் ஸ்யாஞ்சமுச்சை
ரதிதூரம் வநிதாபி ரீக்ஷ்யமாண: ।
ம்ருது தத்திஶி பாதயந்நபாங்கான்
ஸபலோऽக்ரூர-ரதேன நிர்கதோऽபூ ॥5॥

| | | |
|---|---|---|
| ஸவிஷாதபரம் | - | மிக வருத்தத்துடனும், |
| ஸயாச்க்ஞம் | - | தாங்கள் திரும்பிவரவேண்டும் என்ற பிரார்த்தனையுடனும் |
| உச்சை: அதிதூரம் | - | தலையையுயர்த்திக்கொண்டு வெகுதூரம் |
| வனிதாபி: ரீக்ஷ்யமாண: | - | கோபிகைகளால் பார்க்கப்படுகின்ற தாங்கள் |
| ம்ருது தத்த்ருஶி | - | மெதுவாக அவர்களிருக்கும் திக்கில் |
| அபாங்கான் பாதயன் ஸபல: | - | கடைக்கண்ணைச் செலுத்திக்கொண்டு, பலராமனுடன் |
| அக்ரூர ரதேன | - | அக்ரூரனுடைய தேரிலேறிக்கொண்டு |
| நிர்கத: அபூ: | - | சென்றீர்களல்லவா. |

अनसा बहुलेन वल्लवानां मनसा चानुगतोऽथ वल्लभानाम् ।
वनमार्तमृगं विषण्णवृक्षं समतीतो यमुनातटीमयासीः ॥ ६ ॥

அனஸா பஹுலேன வல்லவானாம்
மனஸா சானுகதோ௨த வல்லபானாம்
வன மார்த்தம்ருகம் விஷண்ணவ்ருக்ஷம்
ஸமதீதோ யமுனாதடீ மயாஸீ: ॥ 6 ॥

| | | |
|---|---|---|
| அத வல்லவானாம் | - | பிறகு கோபாலர்களுடைய |
| பஹுலேன அனஸா | - | அனேக வண்டிகளாலும் |
| வல்லபானாம் மனஸா ச | - | கோபிகைகளுடைய மனதாலும் |
| அநுகத: | - | பின்தொடரப்பட்ட தாங்கள் |
| ஆர்த ம்ருகம் | - | வருத்தமுற்ற மிருகங்களையுடையதும் |
| விஷண்ண வ்ருக்ஷம் வனம் ஸமதீத: | - | வாடின மரங்களையுடையதுமான காட்டைக்கடந்து |
| யமுனாதடீம் அயாஸீ: | - | யமுனைக்கரையை யடைந்தீர்களல்லவா. |

नियमाय निमज्य वारिणि त्वमभिवीक्ष्याथ रथेऽपि गान्दिनेयः ।
विवशोऽजनि किन्न्विदं विभोस्ते ननु चित्रं त्ववलोकनं समन्तात् ॥ ७ ॥

நியமாய நிமஜ்ய வாரிணி த்வா
மபிவீக்ஷ்யாத ரதே௨பி காந்திநேய: ।
விவஶோ௨ஜனி கிந்நிவிதம் விபோஸ்தே
நநுசித்ரம் த்வவலோகனம் ஸமந்தாத் ॥ 7 ॥

| | | |
|---|---|---|
| காந்தி நேய: நியமாய | - | அக்ரூரன் 'சந்தியை' முதலிய கடமையைச் செய்வதற்காக |
| நிமஜ்ய | - | யமுனாஜலத்தில் முழுகி |
| வாரிணி அத ரதே அபி | - | அந்த ஜலத்திலும், பிறகு தேரிலும் |

த்வாம் அபிவீக்ஷ்ய - தங்களைக்கண்டு
விலஶ: அஜனி - ஆச்சரியபரவசனாக ஆனானல்லவா;
து நநு - ஆனால், ஹே ஸர்வேசுவரா!
விபோ தே - எங்கும் நிறைந்திருக்கும் தங்களுடைய
ஸமந்தாத் இதம் அவலோகனம் } - நாற்புறங்களிலுமுள்ள இந்தத் தோற்றமானது
சித்ரம் கிம் நு - ஆச்சரியமா என்ன?

पुनरेष निमज्य पुण्यशाली पुरुषं त्वां परमं भुजङ्गभोगे ।
अरिकम्बुगदाम्बुजैः स्फुरन्तं सुरसिद्धौघपरीतमालुलोके ॥ ८ ॥

புனரேஷ நிமஜ்ஜ்ய புண்யஶாலீ
புருஷம் த்வாம் பரமம் புஜங்கபோகே ।
அபி கம்பு கதாம்புஜை ஸ்ப்புரந்தம்
ஸுரஸித்தௌக பரீத-மாலுலோகே ॥8॥

புண்யஶாலி ஏஷ: - புண்யசாலியான அந்த அக்ரூரன்
புன: நிமஜ்ஜ்ய - மறுபடியும் ஜலத்தில் முழுகி
த்வாம் புஜங்க போகே - தங்களை, ஆதிசேஷன்மேல்
அபி கம்புகதாம்புஜை: - சக்கிரம், சங்கு, கதை, தாமரைப்பூ இவைகளால்
ஸ்புரந்தம் - பிரகாசிக்கின்றவரும், தேவர்களாலும்,
ஸுரஸித்தௌக பரீதம் சித்தர் கூட்டங்களாலும் சூழப்பட்டவருமான
பரமம் புருஷம் ஆலுலோகே } - புருஷோத்தமனாக தரிசித்தாரல்லவா.

स तदा परमात्मसौख्यसिन्धौ विनिमग्नः प्रणुवन्प्रकारभेदैः ।
अविलोक्य पुनश्च हर्षसिन्धोरनुवृत्त्या पुलकावृतो ययौ त्वाम् ॥ ९ ॥

ஸததா பரமாத்ம ஸௌக்க்ய ஸிந்த்தௌ
விநிமக்ன: ப்ரணுவன் ப்ரகாரபேதை: ।
அவிலோக்ய புனஸ்ச ஹர்ஷஸிந்தோ
ரனுவ்ரத்த்யா புலகாவ்ருதோ யயௌ த்வாம் ॥9॥

ததா ஸ: - அப்பொழுது அவர்
பரமாத்ம ஸௌக்ய ஸிந்தௌ } - பிரம்மானந்தசாகரத்தில்
விநிமக்ன: - முழுகியவராய்
ப்ரகாரபேதை: ப்ரணுவன் } - பலபிரகாரத்தில் தங்களை ஸ்துதித்துக் கொண்டு,

| | | |
|---|---|---|
| புன: ச அவிலோக்ய | - | மறுபடியும் தங்களைக்காணாமல் |
| ஹர்ஷஸிந்தோ: அனுவ்ருத்யா | - | ஆனந்தப்பெருக்கின் தொடர்பினால் |
| புலகா வ்ருத: த்வாம் யயௌ | - | மயிர் சிலித்தவராய் தங்களிடம் வந்தாரல்லவா. |

किमु शीतलिमा महान्जले यत्पुलकोऽसाविति चोदितेन तेन ।
अतिहर्षनिरुत्तरेण सार्धं रथवासी पवनेश पाहि मां त्वम् ॥१०॥

கிமு ஶீதலிமா மஹான் ஜலே
யத்புலகோऽஸாவிதி சோதிதேன தேன ।
அதிஹர்ஷ நிருத்தரேண ஸார்த்தம்
ரதவாஸீ பவனேஶ பாஹிமாம் த்வம் ॥ 10 ॥

| | | |
|---|---|---|
| ஜலே மஹான் ஶீதலிமா கிமு | - | ஜலத்தில் வேறு தணுப்பிருந்ததா என்ன? |
| யத் அஸௌ புலக: | - | ஏனென்றால், இதோ ரோமாஞ்சம் காணப்படுகிறதே? |
| இதி சோதிதேன | - | என்று கேட்கப்பட்டவனும், |
| அதி ஹர்ஷ நிருத்தரேண | - | சந்தோஷமிகுதியால் பதில் சொல்லாதவருமான |
| தேன ஸார்த்தம் | - | அந்த அக்ரூரருடன் |
| த்வம் ரதவாஸீ | - | தாங்கள் தேரில் வீற்றிருந்தீர்களல்லவா; |
| பவனேஶ | - | ஹே குருவாயூரப்பா! |
| மாம்பாஹி | - | என்னைக் காப்பாற்றவேண்டும். |

இதி ஶ்ரீமந் நாராயணீயே பகவதோ மதுராப்ரஸ்தான
வர்ணனம் நாம த்ரிஸப்ததி தமம் தஶகம் ஸமாப்தம்,

[ஆதித: ஶ்லோகா: 750] [தஶமஸ்கந்த ஶ்லோக: 375]

# தசகம் - 74

## மதுராபுரீ பிரவேசம்

सम्प्राप्तो मथुरां दिनार्धविगमे तत्रान्तरस्मिन्वसन्
न्नारामे विहिताशनः सखिजनैर्यातः पुरीमीक्षितुम् ।
प्रापो राजपथं चिरश्रुतिधृतव्यालोककौतूहल
स्त्रीपुंसोद्यदगण्यपुण्यनिगळैराकृष्यमाणो नु किम् ॥१॥

ஸம்ப்ராப்தோ மதுராம் தினார்த்த
விகமே தத்ராந்தரஸ்மின் வஸன்
னாராமே விஹிதாமன:
ஸகிஜனைர்யாத: புரீமீக்ஷிதும் ।
ப்ராபோ ராஜபதம் சிரஶ்ருதித்ருத
வ்யாலோக கௌதூஹல
ஸ்த்ரீ பும்ஸோத்ய தகண்ய புண்ய நிகலை
ராக்ருஷ்யமாணோ நு கிம் ॥1॥

| | |
|---|---|
| திநார்த்த விகமே மதுராம் ஸம்ப்ராப்த: | - மத்தியான வேளையில் மதுரையை யடைந்து |
| தத்ர அந்தரஸ்மின் ஆராமே | - அவ்விடத்தில் வெளியிலிருக்கும் பூந்தோட்டத்தில் |
| வஸன் விஹிதாமன: | - தாமதித்து ஆஹாரம் பண்ணிக்கொண்டு |
| ஸகிஜனை புரீம் ஈக்ஷிதும் யாத: | - தோழர்களுடன் பட்டணம் பார்க்கப் புறப்பட்டு, |
| சிரஶ்ருதி த்ருத வ்யாலோக கௌதூஹல ஸத்ரீபும்ஸோத்யத-கண்ய புண்ய நிகளை: | - வெகு நாளாகக் கேட்டதிலிருந்து பார்க்க வேண்டுமென்ற ஆசையையுடைய ஸ்திரீபுருஷர்களுடைய பலத்தைக் கொடுக்கவிருக்கும் அளவற்ற புண்யங்களாகிற சங்கிலிகளால் |
| ஆக்ருஷ்ய மாண: கிம் நு- | இழுக்கப்படுகிறீர்கள் என்று தோன்றுவதுபோல |
| ராஜ பதம் ப்ராப: | -- ராஜவீதியை யடைந்தீர்களல்லவா. |

त्वत्पादद्युतिवत्सरागसुभगास्त्वन्मूर्तिवद्योषितः
सम्प्राप्ता विलसत्पयोधररुचो लोला भवद्दृष्टिवत् ।
हारिण्यस्त्वदुरस्स्थलीवदयि ते मन्दस्मितप्रौढिव
न्नैर्मल्योल्लसिताः कचौघरुचिवद्राजत्कलापाश्रिताः ॥ २॥

த்வத் பாத த்யுதிவத் ஸராக ஸுபகாஸ்
த்வன் மூர்த்திவத் யோஷித :
ஸம்ப்ராப்தா விலஸத் பயோதரருசோ
லோலா பவத்த்ருஷ்டிவத் ।
ஹாரிண்யஸ் த்வதுர ஸ்த்தலீவதயி தே
மந்தஸ்மித ப்ரௌடிவந்
நைர்மல்யோல்லஸிதா: கசௌக ருசிவத்
ப்ராஜத் கலாபாஶ்ரிதா: ॥2॥

| | | |
|---|---|---|
| அயி | - | ஹே கிருஷ்ணா! |
| த்வத் பாத த்யுதிவத் | - | (சிவந்து அழகான) தங்கள் திருவடிகளின் நிறம்போல |
| ஸராக ஸுபகா: | - | ஆசையுடையவர்களும், அழகானவர்களும் |
| த்வந் மூர்திவத் | - | (நீருண்ட மேகம்போன்ற) தங்கள் திருமேனிபோல |
| விலஸத் பயோதர ருச: | - | அசைகின்ற ஸ்த்னங்களுடைய சோபையுடையவர்களும், |
| பவத் த்ருஷ்டிவத் லோலா: | - | (சலிக்கின்ற) தங்கள் கண்கள் போல மிக லோலைகளும், (இங்குமங்கும் ஓடுகின்ற) |
| த்வதுர: ஸ்தலீவத் | - | (முத்துமாலையணிந்த) தங்கள் மார்புபோல |
| ஹாரிண்ய: | - | அழகுற்றவர்களும் (முத்துமாலை அணிந்தவர்களும்), |
| தே மந்தஸ்மித ப்ரௌடிவத் | - | (மாசற்றதும் பிரகாசிக்கின்றதுமான) தங்கள் மந்தஹாஸத்தின் மேன்மைபோல |
| நைர் மல்யோல்லஸிதா: | - | நைர்மல்லியத்தால் (தெளிவினால்) விளங்குகிறவர்களும், |
| கசௌக ருசிவத் | - | (மயில்பீலிகளணிந்த) தங்கள் தலைமுடியின் அழகுபோல |
| ப்ராஜத் கலாபாச்ரிதா: | - | விளங்குகிற தலைநகைகள் அணிந்தவர்களுமான |
| யோஷித: ஸம்ப்ராப்த | - | பெண்கள் வந்தனரல்லவா. |

तासामाकलयन्नपाङ्गवलनैर्मोदं प्रहर्षाद्भुतद्व
व्यालोलेषु जनेषु तत्र रजकं कञ्चित्पटीं प्रार्थयन् ।
कस्ते दास्यति राजकीयवसनं याहीति तेनोदितः
सद्यस्तस्य करेण शीर्षमहृथाः सोऽप्याप पुण्यां गतिम् ॥ ३ ॥

தாஸா மாகலயன்னபாங்க வலனைர்
மோதம் ப்ரஹர்ஷாத்புத
வ்யாலோலேஷு ஜனேஷு தத்ர
ரஜகம் கஞ்சித் படீம் ப்ரார்த்தயன் ।

கஸ்தே தாஸ்யதி ராஜகீயவஸனம்
யாஹீதி தே னோதித:
ஸத்யஸ்தஸ்ய கரேண ஶீர்ஷமஹ்ருதா:
ஸோऽபி ப்யாப புண்யாம் கதிம் ॥3॥

| | | |
|---|---|---|
| தாஸாம் அபாங்க வலனை: | - | அந்தப் பெண்களுக்கு கடைக்கண் பார்வைகளால் |
| மோதம் ஆகலயன் | - | சந்தோஷத்தையுண்டு பண்ணிக்கொண்டு |
| ஜனேஷு | - | பட்டணத்துஜனங்கள் |
| ப்ரஹர்ஷாத்புத வ்யாலோலேஷு | - | சந்தோஷத்தாலும் ஆச்சரியத்தாலும் பரவசர்களாயிருக்கும்பொழுது |
| தத்ரகஞ்சித் ரஜகம் | - | அவ்விடத்தில் ஒரு வண்ணானிடம் |
| படீம் ப்ரார்தயன் | - | ஒரு துணி யாசிக்க |
| ராஜகீய வஸனம் | - | அரசனுடைய வஸ்திரத்தை |
| க: தே தாஸ்யதி யாஹி | - | யார் உனக்குக் கொடுப்பார்கள்? ஓடிப்போ |
| இதி தேன உதித: | - | என்று அவனால் சொல்லப்பட்டவராய் |
| ஸத்ய: தஸ்ய ஶீர்ஷம் | - | அப்பொழுதே அவனுடைய தலையை |
| கரேண அஹ்ருதா: | - | கையால் வேறுபடுத்தினீர்கள்; |
| ஸ: அபி புண்யாம் கதிம் ஆப | - | அவனும்கூட மோக்ஷத்தை யடைந்தானல்லவா. |

भूयो वायकमेकमायतमतिं तोषेण वेषोचितं
दाश्वांसं स्वपदं निनेथ सुकृतं को वेद जीवात्मनाम् ।
मालाभिः स्तबकैः स्तवैरपि पुनर्मालाकृता मानितो
भक्तिं तेन वृतां दिदेशिथ परां लक्ष्मीं च लक्ष्मीपते ॥ ४ ॥

பூயோ வாயக மேக மாயதமதிம்
தோஷேண வேஷோசிதம்
தாஶ்வாம்ஸம் ஸ்வபதம் நிநேத
ஸுக்ருதம் கோ வேத ஜீவாத்மனாம் ।
மாலாபி: ஸ்தபகை: ஸ்தவைரபி புனர்
மாலாக்ருதா மானிதோ
பக்திம் தேன வ்ருதாம் திதேஶித பராம்
லக்ஷ்மீஞ்ச லக்ஷ்மீபதே ॥4॥

| | | |
|---|---|---|
| லக்ஷ்மீபதே | - | ஹே லக்ஷ்மீகாந்தா! |
| பூய: வேஷோசிதம் | - | பிறகு தாங்கள் அணிந்துக்கொள்ளுவதற்குத் தகுந்ததான வஸ்திரத்தை |
| தோஷேண தாஶ்வாம்ஸம் | - | மிக சந்தோஷத்துடன் தருகிறவனும், |
| ஆயதமதிம் ஏகம் வாயகம் | - | விசாலபுத்தியுடையவனுமான ஒரு தையற்காரனை |

ஸ்வபதம் நிநேத - தங்கள் ஸ்தானத்தை யடைவித்தீர்களல்லவா;
ஜீவாத்மனாம் ஸுக்ருதம் க:வேத - ஜீவாத்மாக்களுடைய புண்யத்தை யார் அறிவார்?
புன: மாலாக்ருதா - அதன்பிறகு ஒரு மாலைக்காரனால்
மாலாபி: ஸ்தபகை: - மாலைகளைக்கொண்டும், பூச்செண்டுகளைக்கொண்டும்
ஸ்தவை: அபி மானித: - ஸ்தோத்திரங்களாலும் வெகுமானிக்கப் பட்டவராய்
தேன: வ்ருதாம் பராம் பக்திம் - அவனால் வேண்டப்பட்ட மேலான பக்தியையும்
லக்ஷ்மீம் ச திதேஶித - ஐசுவரியத்தையும் அளித்தீர்களல்லவா.

कुब्जामब्जविलोचनां पथि पुनर्दृष्ट्वाङ्गरागे तया
दत्ते साधु किलाङ्गरागमददास्तस्या महान्तं हृदि ।
चित्तस्थामृजुतामथ प्रथयितुं गात्रेऽपि तस्याः स्फुटं
गृह्णन्मञ्जु करेण तामुदनयस्तावज्जगत्सुन्दरीम् ॥ ५ ॥

குப்ஜா மப்ஜ விலோசனாம் பதி புனர்
த்ருஷ்ட்வாங்கராகே தயா
தத்தே ஸாது கிலாங்கராக மததாஸ்
தஸ்யா மஹாந்தம் ஹ்ருதி ।
சித்தஸ்த்தாம்ருஜுதாமத ப்ரதயிதும்
காத்ரே பி தஸ்யா: ஸ்ப்புடம்
க்ருஹ்ணன் மஞ்ஜு கரேண தாமுதநயஸ்-
தாவஜ்ஜகத் ஸுந்தரீம் ॥5॥

புன: பதி - மறுபடி இராஜவீதியில்
அப்ஜ விலோசனாம் குப்ஜாம் த்ருஷ்ட்வா - தாமரைக்கண்ணியான கூனியைக்கண்டு,
தயா அங்கராகே தத்தே - அவளால் சந்தனப்பூச்சு கொடுக்கப்பட்ட பொழுது
தஸ்யா: ஹ்ருதி - அவளுடைய மனதில்
மஹாந்தம் அங்கராகம் - (அதிகமான அங்கராகத்தை) தங்கள்மேல் பெரும் ஆசையை
ஸாது அததா கில - உசிதமாக திருப்பிக்கொடுத்தீர்களல்லவா;
அத தஸ்யாம் சித்தஸ்தாம்- பிறகு அவளுடைய மனதிலிருக்கும்
ருஜுதாம் காத்ரே அபி - நேர்மையை சரீரத்திலும்
ப்ரதயிதும் ஸ்புடம் தாவத் கரேண - தெரிவிப்பதற்கென்றே அப்பொழுதே கையால்
மஞ்ஜு க்ருஹ்ணன் - மெதுவாகப் பிடித்துக்கொண்டு,

| | | |
|---|---|---|
| தாம் ஜகத்ஸுந்தரீம் | - | அவளை லோகசுந்தரியாக |
| உதநய: | - | உயர்த்தினீர்களல்லவா. |

तावन्निश्चितवैभवास्तव विभो नात्यन्तपापा जना
यत्किञ्चिद्ददते स्म शक्त्यनुगुणं ताम्बूलमाल्यादिकम् ।
गृह्णानः कुसुमादि किञ्चन तदा मार्गे निबद्धाञ्जलिर्
नातिष्ठं बत यतोऽद्य विपुलामार्तिं व्रजामि प्रभो ॥ ६ ॥

தாவந்நிஶ்சித வைபவாஸ்தவ விபோ
நாத்யந்த பாபா ஜனா:
யத்கிஞ்சித் தததே ஸ்ம ஶக்த்யனு குணம்
தாம்பூல மால்யாதிகம் ।
க்ருஹ்ணான குஸுமாதி கிஞ்சன
ததா மார்க்கே நிபத்தாஞ்ஜலிர்
நாதிஷ்ட்டம் பத ஹா யதோऽத்ய
விபுலமார்த்திம் வ்ரஜாமி ப்ரபோ ॥6॥

| | | |
|---|---|---|
| விபோ தாவத் | - | ஹே பிரபுவே! அப்பொழுது |
| நாத்யந்த பாபா: ஜனா: | - | மிகப் பாவிகளல்லாத ஜனங்கள் |
| தவ நிஶ்சிதவைபவா: | - | தங்களுடைய மஹிமையை தீர்மானித்து அறிந்தவர்களாய் |
| ஶக்த்யனுகுணம் | - | அவரவர் சக்திக்கேற்றவாறு |
| தாம்பூல மால்யாதிகம் | - | தாம்பூலம் மாலை முதலிய |
| யத் கிஞ்சித் தததே ஸ்ம | - | ஏதேனும் சிலவற்றை தங்களுக்கு அளித்தார்களல்லவா; |
| ப்ரபோ | - | ஹே பிரபுவே! |
| ததாகுஸுமாதிகிஞ்சன | - | அப்பொழுது புஷ்பம் முதலிய ஏதேனுமொன்றை |
| க்ருஹ்ணான: நிபத்தாஞ்ஜலி: | - | எடுத்துகொண்டு அஞ்சலி பண்ணிக்கொண்டு |
| மார்கே ந அதிஷ்டம் | - | வழியில் நான் நிற்கவில்லையல்லவா; |
| யத: அத்ய விபுலாம் ஆர்திம் | - | அதனால்தான் இன்று மிக வருத்தத்தை |
| வ்ரஜாமி ஹா பத | - | அனுபவிக்கின்றேன்; ஐயோ! கஷ்டம்! |

एष्यामीति विमुक्तयापि भगवन्नालेपदात्र्या तया
सत्कातरया निरीक्षितगतिस्त्वं प्राविशो गोपुरम् ।
आघोषानुमितत्वदागममहाहर्षोल्लसद्देवकी
वक्षोजप्रगलत्पयोरसमिषात्त्वत्कीर्तिरन्तर्गता ॥ ७ ॥

ஏஷ்யாமீதி விமுக்தயா஽பி பகவன்
ஙாலே பதாத்ர்யா தயா
தூராத் காதரயா நிரீக்ஷித கதிஸ்
த்வம் ப்ராவிஶோ கோபுரம் ।
ஆகோஷானுமித த்வதாகம
மஹாஹர்ஷோல்லலத் தேவகீ
வக்ஷோஜ ப்ரகலத் பயோரஸமிஷாத்
த்வத் கீர்த்தி ரந்தர்க்தா ॥7॥

| | | |
|---|---|---|
| பகவன் ஏஷ்யாமி | - | ஹே பகவானே! பிறகு வருகின்றேன் |
| இதி விமுக்த்யா அபி | - | என்று சொல்லி அனுப்பப்பட்டவளாக இருந்தும் |
| காதரயா | - | தங்களை விட்டுப்பிரிய தைரியமற்றவளான |
| ஆலேபதாத்ரயா தயா | - | சந்தனப்பூச்சு தந்த அந்தக் கூனியால் |
| தூராத் | - | வெகுதூரத்திலிருந்து |
| நிரீக்ஷித கதி: த்வம் | - | பார்க்கப்பட்ட கமனத்தையுடைய தாங்கள் |
| கோபுரம் ப்ராவிஶ: | - | கோபுரத்திற்குள் சென்றீர்களல்லவா; |
| ஆகோஷானு மித த்வதாகம மஹா ஹர்ஷோல்லலத் தேவகீ வக்ஷோஜ ப்ரகலத் பயோரஸ மிஷாத் | } | ஆரவாரத்தால்அனுமாணம்(ஊஹித்து)பண்ணப் -பட்ட தங்கள் வரவாலுண்டான பெரும் ஆனந்தத்தால் குலுங்கமுற்ற தேவகியின் ஸ்தனங்களிலிருந்து பெருகின பால் என்கிற வியாஜத்தால் |
| த்வத் கீர்தி: அந்த: கதா | - | தங்களுடைய கீர்த்தி நகரத்திற்குள் சென்றது |

आविष्टो नगरीं महोत्सववतीं कोदण्डशालां व्रजन्
माधुर्येण नु तेजसा नु पुरुषैर्दूरेण दत्तान्तरः ।
स्रग्भिर्भूषितमर्चितं वरधनुर्मामेति वादात्पुरः
प्रागृह्णाः समरोपयः किल समाकाङ्क्षीरभाङ्क्षीरपि ॥ ८ ॥

ஆவிஷ்டோ நகரீம் மஹோத்ஸவவதீம்
கோதண்டஶாலாம் வ்ரஜன்
மாதுர்யேண நு தேஜஸா நு புருஷைர்
தூரேண தத்தாந்தர: ।
ஸ்ரக்பிர் பூஷித மர்ச்சிதம் வரதனுர்
மாமேதி வாதாத்புர:
ப்ராக்ருஹ்ணா: ஸமரோபய: கில
ஸமாக்ராக்ஷீரபாங்க்ஷீரபி ॥8॥

| | | |
|---|---|---|
| மஹோத்ஸவ வதீம் | - | பெரும் உத்ஸவத்துடன் கூடின |
| நகரீம் ஆவிஷ்ட: | - | பட்டணத்திற்குள் சென்று |

| | |
|---|---|
| கோதண்ட ஶாலாம் வ்ரஜன் | - வில் வைத்திருக்கும் சாலைக்குள் செல்லுகின்றவராய் |
| மாதுர்யேண நு | - தங்களுடைய ரூபஸௌந்தரியத்தால் தானோ, |
| தேஜஸா நு | - அல்லது தேஜோவிசேஷத்தால்தானோ, |
| புருஷை: | - (அங்கிருக்கும்) காவற்காரர்களால் |
| தூரேண தத்தாந்தர: | - வெகுதூரத்திலிருந்தே வழிகொடுக்கப் பட்டவராய் |
| மாமா இதி வாதாத் புர: | - 'கூடாது கூடாது' என்று சொல்லுவதற் -குள்ளேயே |
| ஸ்ரக்பி: பூஷிதம் | - மாலைகளால் அலங்கரிக்கப்பட்டதும் |
| அர்சிதம் வரதனு: | - பூஜிக்கப்பட்டதுமான சிறந்த வில்லை |
| ப்ராக்ருஹ்ணா: ஸமரோபய: | - எடுத்தீர்கள்; நாணேற்றினீர்கள்; |
| ஸமாக்ராக்ஷீ: | - பாணத்தை தொடுத்து பலமாக இழுத்தீர்கள்; |
| அபாங்க்ஷீ: அபி கில | - முறிக்கவும் செய்தீர்களல்லவா. |

श्वः कंसक्षपणोत्सवस्य पुरतः प्रारम्भतूर्योपम
श्चापध्वंसमहाध्वनिस्तव विभो देवानरोमाञ्चयत् ।
कंसस्यापि च वेपथुस्तदुदितः कोदण्डखण्डद्वयी
चण्डाभ्याहतरक्षिपूरुषरवैरुत्कूलितोऽभूत्त्वया ॥ ९ ॥

ஶ்வ : கம்ஸ க்ஷபணோத்ஸவஸ்ய புரத:
ப்ராரம்ப தூர்யோபம
ஶ்சாப த்வம்ஸ மஹாத்வனிஸ்தவ
விபோ தேவானரோமாஞ்சயத் ।
கம்ஸஸ்யாபி ச வேபதுஸ் ததுதித:
கோதண்ட கண்டத்வயீ
சண்டாப்யாஹத ரக்ஷிபூருஷரவை
ருத்கூலிதோऽபூத் த்வயா ॥9॥

| | |
|---|---|
| விபோ ஶ்வ: | - ஹே பிரபுவே! மறுநாள் நடக்கப்போகிற |
| கம்ஸ க்ஷபணோத் ஸவஸ்ய | - கம்ஸவதமாகிற உத்ஸவத்திற்கு |
| புரத: ப்ராரம்ப தூர்யோபம: | - முந்தி ஆரம்ப பேரிகைக்கொப்பான |
| தவ சாபத்வம்ஸ மஹாத்வனி: | - தங்களுடைய வில் முறித்த பேரிரைச்சல் |
| தேவான் அரோமாஞ்சயன் | - தேவர்களையும் மயிர் சிலிர்க்கச் செய்தது; |

| | |
|---|---|
| அபி ச தது₃தி₂த: | - என்று மட்டுமல்ல, அதிலிருந்துண்டான |
| கம்ஸஸ்ய வேபது: | - கம்ஸனுடைய நடுக்கம், |
| கோதண்ட கண்டத்₃வயீ சண்டாப்யாஹத ரக்ஷி பூருஷரவை: | வில்லின் இரண்டு துண்டுகளால் பலமாக அடிக்கப்பட்ட காவற்காரர்களுடைய கூக்குரலால் |
| த்வயா உத்கூலித: அபூத் | - தங்களால் பெருக்கப்பட்டதல்லவா. |

शिष्टैर्दुष्टजनैश्च दृष्टमहिमा प्रीत्या च भीत्या ततः
संपश्यन्पुरसम्पदं प्रविचरन्सायं गतो वाटिकाम् ।
श्रीदाम्ना सह राधिकाविरहजं खेदं वदन्प्रस्वपन्
नानन्दन्नवतारकार्यघटनाद्वातेश संरक्ष माम् ॥ १० ॥

ஶிஷ்டைர் துஷ்டஜனைஶ்ச த்ருஷ்ட
மஹிமா ப்ரீத்யா ச பீத்யா தத:
ஸம்பஶ்யன் புரஸம்பதம் ப்ரவிசரன்
ஸாயங் கதோ வாடிகாம் ।
ஶ்ரீதாம்னா ஸஹ ராதிகாவிரஹஜம்
கேதம் வதன் ப்ரஸ்வபன்
நானந்தந்நவதார கார்ய கடனாத்
வாதேஶ ஸம்ரக்ஷ மாம் ॥ 10 ॥

| | |
|---|---|
| வாதேஶ | - ஹே குருவாயூரப்பா! |
| ஶிஷ்டை: ப்ரீத்யா | - சாதுஜனங்களால் பிரீதியுடனும், |
| துஷ்டை: பீத்யா | - துஷ்டர்களால் பயத்துடனும், |
| த்ருஷ்ட மஹிமா | - பார்க்கப்பட்ட மஹிமையையுடையவராய் |
| புரஸம்பதம் ஸம்பஶ்யன் | - பட்டணத்தழகைப் பார்த்துக்கொண்டு |
| ப்ரவிசரன் | - சுற்றிக்கொண்டு, |
| ஸாயம் வாடிகாம் கத: | - மாலைப்பொழுதில் பூந்தோட்டத்திற்குச் சென்று |
| ஶ்ரீதாம்நா ஸஹ | - ஶ்ரீதாமாவுடன் |
| ராதிகா விரஹஜம் கேதம் | - ராதையின் பிரிவினால் உண்டான வருத்தத்தை |
| வதன் ப்ரஸ்வபன் | - சொல்லிக்கொண்டும், தூங்கிக்கொண்டும் |
| அவதார கார்ய கடநாத் | - அவதாரப்பிரயோஜனமும் வந்துசேருவதால் |
| ஆனந்தன் | - ஆனந்தமடைந்தவருமான தாங்கள் |
| மாம் ஸம்ரக்ஷ | - என்னைக் காப்பாற்றவேண்டும். |

இதி ஶ்ரீமந் நாராயணீயே பகவதோ மதுராபுரீ ப்ரவேஶ வர்ணனம் நாம சதுஸ் ஸப்த திதமம் தஶகம் ஸமாப்தம்.

[ஆதித: ஶ்லோகா: 760] [தஶமஸ்கந்த ஶ்லோக: 385]

# தஶகம் - 75

## கம்ஸ வதம்

प्रातः सन्त्रस्तभोजक्षितिपतिवचसा प्रस्तुते मल्लतूर्ये
सङ्घे राज्ञां च मञ्चानभिययुषि गते नन्दगोपेऽपि हर्म्यम् ।
कंसे सौधाधिरूढे त्वमपि सहबलः सानुगश्चारुवेषो
रङ्गद्वारं गतोऽभूः कुपितकुवलयापीडनागावलीढम् ॥ १ ॥

ப்ராத: ஸந்த்ரஸ்த போஜக்ஷிதிபதி
வசஸா ப்ரஸ்துதே மல்ல தூர்யே
ஸங்கே ராஜ்ஞாஞ்ச மஞ்சானபி யயுஷி-
கதே நந்தகோபே஽பி ஹர்ம்யம்
கம்ஸே ஸௌதாதிரூடே த்வமபி ஸஹபல:
ஸானுகஶ்சாருவேஷோ
ரங்கத்வாரம் கதோ஽பூ: குபித
குவலயாபீட நாகாவலீடம் ॥1॥

| | |
|---|---|
| ப்ராத: | - மறுநாட்காலையில் |
| ஸந்த்ரஸ்த போஜ க்ஷிதிபதி வசஸா | - மிகவும் பயந்த கம்ஸராஜாவின் கட்டளையால் |
| மல்லதூர்யே | - மல்லயுத்தத்தை தெரியப்படுத்தும் பேரிகை |
| ப்ரஸ்துதே ராக்ஞாம் ஸங்கே ச | - முழக்கப்பட்டபொழுது அரசர்கள் கூட்டமும் |
| மஞ்சான் அபியயுஷி | - அவரவர்கள் ஆசனங்களில் அமர்ந்தபொழுது |
| நந்தகோபே அபி ஹர்ம்யே கதே | - நந்தகோபரும் மாடியில் சென்றதும் |
| கம்ஸே ஸௌதாதி ரூடே | - கம்ஸனும் அரண்மனை மாளிகைக்குச் சென்றபொழுது |
| ஸபல: த்வம் அபி | - பலராமனுடன் தாங்களும் |
| ஸானுக: சாருவேஷ | - பரிவாரங்களுடன் அழகான வேஷங்கள் அணிந்துகொண்டு |
| குபித குவலயாபீட நாகா வலீடம் | - கோபமடைந்த குவலயாபீடம் என்ற யானையால் தகையப்பட்ட |
| ரங்கத்வாரம் | - (மல்லர் போர்புரியும்) போர்க்களவாயிலை |
| கத: அபூ: | - அடைந்தீர்களல்லவா. |

पापिष्ठापेहि मार्गाद्द्रुतमिति वचसा निष्ठुरक्रुद्धबुद्धे
रम्बष्ठस्य प्रणोदादधिकजवजुषा हस्तिना गृह्यमाणः ।
केलीमुक्तोऽथ गोपीकुचकलशचिरस्पर्धिनं कुम्भमस्य
व्याहत्यालीयथास्त्वं चरणभुवि पुनर्निर्गतो वल्गुहासी ॥ २॥

பாபிஷ்ட்டாபேஹி மார்க்காத் த்ருதமிதி
வசஸா நிஷ்ட்டுர க்ருத்தபுத்தே
ரம்பஷ்ட்டஸ்ய ப்ரணோதா ததிக
ஜவஜுஷா ஹஸ்தினா க்ருஹ்யமாண: ।
கேலீ முக்தோS த கோபீகுச கலஶசிரஸ்-
பர்த்தினம் கும்பமஸ்ய
வ்யாஹத்யா லீய்தாஸ் த்வம் சரணபுவி
புனர் நிர்க்கதோ வல்குஹாஸி ॥2॥

| | | |
|---|---|---|
| பாபிஷ்ட்ட மார்க்காத் | - | அடே மஹாபாவி! வழியைவிட்டு |
| த்ருதம் அபேஹி இதி வசஸா | - | சீக்கிரம் தூர நில் என்ற தங்கள் வாக்கைக் கேட்டு |
| நிஷ்டுர க்ருத்த புத்தே | - | நிஷ்டூரமும் கோபமடைந்ததுமான புத்தியையுடைய |
| ரம்பஷ்ட்டஸ்ய ப்ரணோதாத் | - | மாவுத்தனுடைய ஏவலினால் |
| அதிக ஜவஜுஷா ஹஸ்தினா | - | அதிக வேகத்தையடைந்த யானையால் |
| க்ருஹ்யமாண: | - | பிடிக்கப்பட்டு, |
| அத கேளீமுக்த: | - | பிறகு விளையாட்டாகவே விடுவித்துக் கொண்டு |
| அஸ்ய | - | அந்த யானையின் |
| கோபீ குசகலஶ சிரஸ்பர்தினம் | - | கோபிகைகளுடைய கலசம்போன்ற குசங்களுடன் வெகுநாளாகவே சண்டையிடுகின்ற |
| கும்பம் வ்யாஹத்ய | - | மத்தகத்தில் நன்றாக அடித்துவிட்டு |
| சரண புவி த்வம் | - | அதன் கால்களுக்கடியில் தாங்கள் |
| அலீயதா: | - | ஒளிந்து கொண்டீர்கள் |
| புன: வல்குஹாஸீ | - | பிறகு மந்தஹாஸஞ் செய்துகொண்டு |
| நிர்கத: | - | வெளிவந்தீர்களல்லவா. |

हस्तप्राप्योऽप्यगम्यो झटिति मुनिजनस्येव धावन्गजेन्द्रं
क्रीडन्नापत्य भूमौ पुनरभिपततस्तस्य दन्तं सजीवम् ।
मूलादुन्मूल्य तन्मूलगमहितमहामौक्तिकान्यात्ममित्रे
प्रादास्त्वं हारमेभिर्ललितविरचितं राधिकायै दिशेति ॥ ३॥

ஹஸ்த ப்ராப்யோஸி ப்யகம்யோ ஜடிதி
முனிஜனஸ்யேவ தாவன் கஜேந்த்ரம்
க்ரீடன்னாபத்ய பூமௌ புனரபி பதஸ்
தஸ்ய தந்தம் ஸஜீவம் ।
மூலாதுன்மூல்ய தன் மூலக மஹித
மஹா மௌக்திகான்யாத்ம மித்ரே
ப்ராதாஸ்த்வம் ஹாரமேபிர் லலித
விரசிதம் ராதிகாயை திஶேதி ॥3॥

| | | |
|---|---|---|
| முனிஜனஸ்ய இவ | - | முனிஜனங்களுக்கென்றபோல |
| ஹஸ்த ப்ராப்ய: அபி | - | கையில் கிட்டக்கூடியவராக இருந்த போதிலும் (துதிக்கையால் பிடிக்கக் கூடியவராக இருந்தபோதிலும்), |
| அகம்ய: ஜடிதி | - | அடைய முடியாதவராக விரைவாக |
| கஜேந்த்ரம் தாவன் | - | யானைக்கெதிரில் ஓடிச்சென்று |
| க்ரீடன் த்வம் | - | விளையாடிக்கொண்டு தாங்கள் |
| புன: பூமௌ ஆபத்ய | - | மறுபடி நிலத்தில் வீழ்ந்து |
| அபிபதத: தஸ்ய | - | தன்னையெதிர்த்துவந்த அந்த யானையின் |
| ஸஜீவம் தந்தம்-மூலாத் உன்மூல்ய | - | உயிருடன் கூடின தந்தத்தை வேருடன் பிடுங்கி |
| தன்மூலக மஹித மஹா மௌக்திகானி | - | அக்கொம்புகளின் அடியிலிருக்கும் சிறந்த பெரிய முத்துக்களை |
| ஏபி: லலித விரசிதம் | - | ''இவைகளைக்கொண்டு அழகாக உண்டுபண்ணப்பட்ட |
| ஹாரம் ராதிகாயை திஶ இதி | - | முத்துமாலையை ராதிகைக்குக் கொடு'' என்று |
| ஆத்ம மித்ரே ப்ராதா: | - | தன் சினேகிதனிடம் கொடுத்தீர்களல்லவா. |

गृह्णानं दन्तमंसे युतमथ हलिना रङ्गमङ्गाविशन्तं
त्वां मङ्गल्याङ्गभङ्गीरभसहृतमनोलोचना वीक्ष्य लोकाः ।
हंहो धन्यो नु नन्दो नहि नहि पशुपालाङ्गना नो यशोदा
नो नो धन्येक्षणाः स्मस्त्रिजगति वयमेवेति सर्वे शशंसुः ॥ ४ ॥

க்ருஹ்ணானம் தந்தமம்ஸே யுதமத
ஹலினா ரங்கமங்கா விஶந்தம்
த்வாம் மங்கல் யாங்க பங்கீரபஸ
ஹ்ருத மனோலோசனா வீக்ஷ்ய லோகா: ।
ஹம் ஹோ தன்யோ நு நந்தோ நஹி நஹி
பஶு பாலாங்கனா நோ யஶோதா
நோ நோ தன்யேக்ஷணா: ஸ்மஸத்ரிஜகதி
வயமேவேதி ஸர்வே ஶஶம்ஸு: ॥4॥

அங்க அத - ஹே ஸ்ரீகிருஷ்ணா! பிறகு
அம்ஸே தந்தம் க்ருஹ்ணானம் - தோளில் யானைக்கொம்பை வைத்துக்கொண்டு
ஹலினா யுதம் - பலராமனுடன்
ரங்கம் ஆவிமந்தம் த்வாம்- யுத்தரங்கத்திற்குச் செல்லுகின்ற தங்களை
ஸர்வே லோகா: வீக்ஷ்ய - எல்லா ஜனங்களும் கண்டு
மங்கல்யாங்க பங்கீர பஸஹ்ருத மனோ லோசனா: - மங்களத்தைக் கொடுக்கின்ற அவயவங்களின் அழகால் பலாத்காரமாக கவரப்பட்ட மனதையும் கண்களையுமுடையவர்களாய்
ஹம்ஹோ த்ரிஜகதி - ஆச்சரியமாச்சரியம்! மூவுலகிலும் வைத்து
நந்த: நு தன்ய: - நந்தகோபந்தான் பாக்கியசாலி;
நஹி நஹி பமு பாலாங்கனா: - இல்லையில்லை, கோபிகைகள் தான் பாக்கியசாலிகள்
நோ யமோதா - இல்லை, யசோதைதான் பாக்கியசாலி,
நோ நோ தன்யேக்ஷணா: - இல்லையில்லை, பாக்கியம்பெற்ற கண்களையுடைய
வயம் ஏவ ஸ்ம: - நாங்கள் தான் பாக்கியசாலிகள் ஆகிறோம்
இதி மமம்ஸு: - என்று புகழ்ந்தனர்.

पूर्णं ब्रह्मैव साक्षान्निरवधिपरमानन्दसान्द्रप्रकाशं
गोपेषु त्वं व्यलासीर्न खलु बहुजनैस्तावदावेदितोऽभूः ।
दृष्ट्वाथ त्वां तदेदंप्रथममुपगते पुण्यकाले जनौघाः
पूर्णानन्दा विपापाः सरसमभिजगुस्त्वत्कृतानि स्मृतानि ॥५॥

பூர்ணம் ப்ரஹ்மைவ ஸாக்ஷாந்நிரவதி
பரமானந்த ஸாந்த்ர ப்ரகாமம்
கோபேஷு த்வம் வ்யலாஸீர் ந கலு
பஹுஜனைஸ்தாவதாவே திதோஸ் பூ: ।
த்ருஷ்ட்வாஸ் த த்வாம் ததேதம் ப்ரதம
முபகதே புண்யகாலே ஜநௌகா:
பூர்ணானந்தா விபாபா: ஸரஸமபி
ஜகுஸ்த்வத்க்ருதானி ஸ்ம்ருதானி ॥5॥

பூர்ணம் நிரவதி - எங்கும் நிறைந்திருப்பதும், நித்தியமும்,
பரமாநந்த ஸாந்த்ரப்ரகாமம் - பரமானந்தரூபியும், விக்ஞான கனரூபியுமான
ப்ரம்ஹ ஏவ - பரப்பிரம்மஸ்வரூபியாகவே இருக்கின்ற
த்வம் ஸாக்ஷாத் - தாங்கள் பிரத்யக்ஷமாக
கோபேஷும் வ்யலாஸீ: - இடையர்களுக்கிடையில் பிரகாசித்தீர்கள்
பஹுஜனை: தாவத் - அனேகம் ஜனங்களால் அவ்விதமென்று

| | | |
|---|---|---|
| ந கலு ஆவேதித: அபூ: | - | தாங்கள் அறியப்படவேயில்லை. |
| புண்யகாலே உபகதே | - | புண்யம் பலத்தைக் கொடுக்குந்தருணம் வந்தபொழுது |
| இதம் ப்ரதமம் த்வாம் த்ருஷ்ட்வா அத | - | முதல்முதலாக தங்களை தரிசித்தவுடனே |
| விபாபா: | - | பாபங்கள் நசித்தவர்களாய் |
| பூர்ணா நந்தா: | - | (அதனால்) ஆனந்தம் நிறைந்தவர்களாய் |
| ததா ஸ்ம்ருதானி த்வத் க்ருதானி | - | அப்பொழுது ஞாபகத்தில் வந்த தங்கள் சரிதங்களை |
| ஸரஸம் அபிஜகு: | - | ரசமாகப் பாடினார்கள். |

चाणूरो मल्लवीरस्तदनु नृपगिरा मुष्टिको मुष्टिशाली
त्वां रामं चाभिपेदे झटझटिति मिथो मुष्टिपातातिरूक्षम् ।
उत्पातापातनाकर्षणविविधरणान्यासतां तत्र चित्रं
मृत्योः प्रागेव मल्लप्रभुरगमदयं भूरिशो बन्धमोक्षान् ॥ ६ ॥

சாணூரோ மல்லவீரஸ்ததனு ந்ருபகிரா
முஷ்டிகோ முஷ்டிமாலீ
த்வாம் ராமஞ்சாபிபேதே ஜடஜடிதி
மிதோ முஷ்டிபாதா திரூக்ஷம் ।
உத்பாதாபாதனாகர்ஷண விவிதரணான்
யாஸதாம் தத்ர சித்ரம்
ம்ருத்யோ: ப்ராகேவ மல்லப்ரபுரகமதயம்
பூரிமோ பந்தமோக்ஷான் ॥6॥

| | | |
|---|---|---|
| ததநு ந்ருபகிரா | - | அதன்பிறகு அரசன் கட்டளையால் |
| மல்லவீர: சாணூர: த்வாம் | - | மல்லவீரனான சாணூரன் தங்களையும் |
| முஷ்டிமாலீ முஷ்டிக: | - | முஷ்டியுத்தத்தில் திறனடைந்த முஷ்டிகன் |
| ராமம் ச | - | பலராமனையும் |
| ஜட ஜடிதி மித: | - | 'சடசடா' என்ற சத்தத்துடன் ஒன்றுக்கொன்று |
| முஷ்டி பாதாதி ரூக்ஷம் | - | முஷ்டியைக்கொண்டு இடிப்பதால் பயங்கரமாக இருக்கும்படி |
| அபி பேதே | - | எதிர்த்தானல்லவா. |
| உத்பாதா பாத நாகர்ஷண விவிதரணானி ஆஸதாம் | - | உந்தியெறிவது, கீழே தள்ளுவது, பிடித்திழுப்பது முதலிய பலவிதப் போர்கள் இருக்கட்டும். |
| தத்ர மல்ல ப்ரபு: | - | அந்தப் போரில் மல்லர்களுக்கரசனான |
| அயம் ம்ருத்யோ: ப்ராக் ஏவ | - | அந்த சாணூரன் மரணத்திற்கு முந்தியே |
| பூரிம: பந்தமோக்ஷான் அகமத் சித்ரம் | | பலதடவை பந்தமோக்ஷங்களை (கட்டுதலையும் விடுதலையையும்) அடைந்தான் என்பது ஆச்சரியம். |

हा धिक्कष्टं कुमारौ सुललितवपुषौ मल्लवीरौ कठोरौ
न द्रक्ष्यामो व्रजामस्त्वरितमिति जने भाषमाणे तदानीम् ।
चाणूरं तं करोद्भ्रामणविगलदसुं पोथयामासिथोर्व्यां
पिष्टोऽभून्मुष्टिकोऽपि द्रुतमथ हलिना नष्टशिष्टैर्दधावे ॥ ७ ॥

ஹா திக்கஷ்டம் குமாரௌ ஸுலலித வபுஷௌ
மல்லவீரௌ கடோரௌ
ந த்ரக்ஷ்யாமோ வ்ரஜாமஸ்த்வரிதமிதி
ஜனே பாஷமாணே ததானீம் ।
சாணூரம் தம் கரோத்ப்ராமண விகலதஸும்
போதயாமாஸிதோர்வ்யாம்
பிஷ்டோऽபூன் முஷ்டிகோऽபி த்ருதமத
ஹலினா நஷ்டசிஷ்டைர்ததாவே ॥ 7 ॥

| | |
|---|---|
| ஹா திக் கஷ்டம் குமாரௌ | - கஷ்டம்! கஷ்டம்!! குழந்தைகளான ராமகிருஷ்ணர்கள் |
| ஸுலலித வபுஷௌ | - கோமளசரீரமுடையவர்கள், |
| மல்லவீரோ கடோரௌ | - மல்லவீரர்களிருவரும் மிக முரடர்கள், |
| ந த்ரக்ஷ்யாம: | - இந்தப் போரை நாம் பார்க்கவேண்டாம் |
| த்வரிதம் வ்ரஜாம: | - விரைவாக வெளியிற் சென்றுவிடுவோம் |
| இதி ஜனே பாஷமாணே | - என்று ஜனங்கள் பேசிக்கொண்டிருக்கும் பொழுது |
| ததா நீம் | - அத்தருணத்தில் |
| கரோத் ப்ராமண விகலதஸும் | - கையிற்பிடித்துச் சுழற்றுவதால் முற்றிலும் உயிரிழந்தவனான |
| தம் சாணூரம் | - அந்தச் சாணூரனை |
| உர்வ்யாம் போதயாமாஸித | - தரையில் ஓங்கியறைந்தீர்களல்லவா. |
| அத த்ருதம் ஹலினா முஷ்டிக: அபி பிஷ்ட: அபூத் | - அதன்பிறகு விரைவாக பலராமனால் முஷ்டிகனும் நசுக்கப்பட்டான். |
| நிஷ்ட ஶிஷ்டை: | - போரில் இறந்தவர்களைத்தவிர எஞ்சியவர்களால் |
| ததாவே | - விரைந்தோடப்பட்டதல்லவா. |

कंसस्संवार्य तूर्यं खलमतिरविदन्कार्यमार्यान् पितॄंस्तान्
आहन्तुं व्याप्तमूर्तेस्तव च समशिषद्दूरमुत्सारणाय ।
रुष्टो दुष्टोक्तिभिस्त्वं गरुड इव गिरिं मञ्चमञ्चन्नुदञ्चत्
खड्गव्यावल्गदुस्संग्रहमपि च हठात्प्राग्रहीरौग्रसेनिम् ॥ ८ ॥

கம்ஸ: ஸம்வார்ய தூர்யம் கலமதிரவிதன்
கார்யமார்யான் பித்ரூம்ஸ்தா
நாஹந்தும் வ்யாப்த மூர்த்தேஸ்தவ ச
ஸமமிஷத் தூரமுத்ஸாரணாய ।
ருஷ்டோ துஷ்டோக்திபிஸ்த்வம் கருட
இவ கிரிம் மஞ்ச மஞ்சன்னுதஞ்சத்
கட்க வ்யாவல்க து:ஸங்க்ரஹமபி
ச ஹடாத் ப்ராக்ரஹீ ரௌக்ர ஸேனிம் ॥8॥

| | | |
|---|---|---|
| கலமதி: கம்ஸ | - | துர்புத்தியுடைய அந்தக் கம்ஸன் |
| தூர்யம் ஸம்வார்ய | - | பேரிகையை நிறுத்தச்செய்து |
| கார்யம் அவிதன் | - | செய்யவேண்டியதை அறியாதவனாய் |
| ஆர்யான் தான் | - | சாதுக்களான அந்த |
| பித்ரூன் ஆஹந்தும் | - | நந்தன், வசுதேவர், உக்ரசேனன் முதலிய பெரியோர்களைக் கொல்லவும். |
| வ்யாஸ மூர்தே: தவ | - | எங்கும் நிறைந்திருக்கும் தங்களை |
| தூரம் உத்ஸாரணாய | - | வெகுதூரத்தில் விரட்டவும் |
| ஸமமிஷத் | - | கட்டளையிட்டான். |
| துஷ்டோக்திபி: ருஷ்ட: த்வம் | - | தீச்சொற்களால் கோபமடைந்த தாங்கள் |
| கருட: கிரிம் இவ | - | கருடன் மலைமேல் பாய்வதுபோல |
| மஞ்சம் அஞ்சன் | - | சிம்மாசனத்தில் பாய்ந்து |
| உதஞ்சத் கட்கவ்யா வல்க து: ஸங்க்ரஹம் அபி ச | | வாளையுயரவெடுத்து வீசுவதால் பிடிக்க முடியாதவனாக இருந்துங்கூட |
| தம் ஔக்ர ஸேநிம் | - | அந்தக் கம்ஸனை |
| ஹடாத் ப்ராக்ர ஹீ: | - | பலாத்காரமாகப் பிடித்தீர்களல்லவா. |

सद्यो निष्पिष्टसन्धिं भुवि नरपतिमापात्य तस्योपरिष्टात्
त्वय्यापात्ये तदैव त्वदुपरि पतिता नाकिनां पुष्पवृष्टिः ।
किं किं ब्रूमस्तदानीं सततमपि भिया त्वद्गतात्मा स भेजे
सायुज्यं त्वद्वधोत्था परम परमियं वासना कालनेमेः ॥ ९ ॥

ஸத்யோ நிஷ்பிஷ்ட ஸந்திம் புவி
நரபதிமாபாத்ய தஸ்யோபரிஷ்டாத்
த்வய்யாபாத்யே ததைவ த்வதுபரி
பதிதா நாகினாம் புஷ்பவ்ருஷ்டி: ।
கிம் கிம் ப்ரூமஸ்ததானீம் ஸததமபி
பியா த்வத்கதாத்மா ஸ பேஜே
ஸாயுஜ்யம் த்வத்வதோத்தா பரம
பரமியம் வாஸனா காலநேமே: ॥9॥

| | | |
|---|---|---|
| ஸத்ய: நிஷ்பிஷ்ட ஸந்திம் | - | அப்பொழுதே சந்திபந்தங்கள் நொறுங்கின |
| நரபதிம் புவி ஆபாத்ய | - | கம்ஸனை தரையில் தள்ளி |
| தஸ்ய உபரிஷ்டாத் | - | அவன்மேல் |
| த்வயி ஆபாத்யே | - | தாங்களும் விழ |
| ததா ஏவ த்வது பரி | - | அப்பொழுதே தங்கள்மேல் |
| நாகினாம் புஷ்ப வ்ருஷ்டி: பதிதா | - | தேவர்களுடைய பூமாரி விழுந்ததல்லவா. |
| பரம கிம் கிம் ப்ரூம: | - | பரமாத்மாவே! நாங்கள் என்ன சொல்லுவோமாக. |
| பியா ஸததம் | - | பயத்தால் இடைவிடாது |
| த்வத் கதாத்மா ஸ: அபி | - | தங்களிடம் மனதைச்செலுத்திய அந்தக் கம்ஸனும் |
| ததானிம் ஸாயுஜ்யம் பேஜே | - | அப்பொழுதே தங்கள் சாயுஜ்யத்தை அடைந்தான். |
| இயம் | - | இவ்விதம் சாயுஜ்யத்தையடைய காரணம் |
| காலநேமே: த்வத் வதோத்தா | - | காலநேமியை தாங்கள் கொன்றதாலுண்டான |
| வாஸனா பரம் | - | முன்ஜன்ம வாசனைதான். |

तद्भ्रातॄनष्ट पिष्ट्वा द्रुतमथ पितरौ सन्नमन्नुग्रसेनं
कृत्वा राजानमुच्चैर्यदुकुलमखिलं मोदयन्कामदानैः ।
भक्तानामुत्तमञ्चोद्धवममरगुरोराप्तनीतिं सखायं
लब्ध्वा तुष्टो नगर्यां पवनपुरपते रुन्धि मे सर्वरोगान् ॥१०॥

தத் ப்ராத்ருனஷ்ட ஷ்ட்வா த்ருதமத
பித்ரௌ ஸந்நமன்னுக்ர ஸேநம்
க்ருத்வா ராஜான முச்சைர் யதுகுல
மகிலம் மோதயன் காமதானை: ।
பக்தானாமுத்தமஞ் சோத்தவ மமரகுரோ
ராப்தநீதிம் ஸகாயம்
லப்த்வா துஷ்டோ நகர்யாம் பவன
புரபதே ருந்தி மே ஸர்வரோகான் ॥ 10 ॥

| | | |
|---|---|---|
| பவனபுரபதே அத த்ருதம் | - | குருவாயூரப்பா! அதன்பிறகு விரைவாக |
| தத் ப்ராத்ருன் அஷ்ட பிஷ்ட்வா | - | கம்ஸனின் தம்பிகளான எட்டு பேர்களையும் கொன்று |
| - பிதரௌ ஸந்நமன் | - | தாய்தந்தைகளான தேவகீவசுதேவர்களை வணங்கி |
| உக்ரஸேனம் ராஜானம் க்ருத்வா | | உக்ரசேனனையரசனாகச்செய்து |
| அகிலம் யதுகுலம் | - | யதுகுலத்தாரெல்லோரையும் |
| காமதானை: உச்சை: மோதயன் | - | விரும்பியவற்றைக் கொடுத்து நன்றாக மகிழச்செய்து |
| பக்தானாம் உத்தமம் | - | பக்தர்களில் சிறந்தவரும், |
| அமர குரோ: | - | தேவகுருவான பிருஹஸ்பதியிடமிருந்து |
| ஆப்தநீதிம் உத்தவம் ச | - | நீதிசாஸ்திரம் கற்றவருமான உத்தவரையும் |
| ஸகாயம் லப்த்வா: துஷ்ட: | - | தோழராக அடைந்து சந்தோஷமடைந்தவராக |
| நகர்யாம் (வஸன்) | - | மதுராபுரியில் வசித்துவந்த தாங்கள் |
| மே ஸர்வரோகான் ருந்தி | - | எனது வியாதிகளெல்லாவற்றையும் அகற்றவேண்டும். |

இதி ஸ்ரீமந் நாராயணீயே கம்ஸ வத வர்ணனம்
நாம பஞ்ச ஸப்ததிதம் தஶகம் ஸமாப்தம்.

[ஆதித: ஶ்லோகா: 770] [தஶமஸ்கந்த ஶ்லோக: 395]

# தசகம் - 76

## உத்தவர் தூது

गत्वा सान्दीपनिमथ चतुष्षष्टिमात्रैरहोभिः
सर्वज्ञस्त्वं सह मुसलिना सर्वविद्यां गृहीत्वा ।
पुत्रं नष्टं यमनिलयनादाहृतं दक्षिणार्थं
दत्त्वा तस्मै निजपुरमगा नादयन्पाञ्चजन्यम् ॥ १॥

கத்வா ஸாந்தீபனிமத சதுஷ்ஷஷ்டி
மாத்ரை ரஹோப்:
ஸர்வஜ்ஞஸ்த்வம் ஸஹமுஸலினா
ஸர்வவித்யா க்ருஹீத்வா ।
புத்ரம் நஷ்டம் யமநிலயனா-
தாஹ்ருதம் தக்ஷிணார்த்தம்
தத்வா தஸ்மை நிஜபுரமகா
நாதயன் பாஞ்சஜன்யம் ॥1॥

| | | |
|---|---|---|
| அத ஸர்வக்ஞ: த்வம் | - | அதன்பிறகு ஸர்வக்ஞனான (எல்லாமறிந்த) தாங்கள் |
| முஸலினா ஸஹ | - | பலராமனுடன் |
| ஸாந்தீபனிம் கத்வா | - | ஸாந்தீபனியிடம் சென்று |
| சது: ஷஷ்டிமாத்ரை: அஹோபி: | - | அறுபத்துநான்கு நாட்களைக்கொண்டு |
| ஸர்வவித்யா: க்ருஹீத்வா | - | எல்லா வித்தைகளையும் கற்றுக்கொண்டு, |
| தக்ஷிணார்தம் நஷ்டம் புத்ரம் | - | குருதக்ஷிணைக்காக இறந்த பிள்ளையை |
| யமநிலயாத் ஆஹ்ருதம் | - | யமலோகத்திலிருந்து கொண்டுவந்து, |
| தஸ்மை தத்வா | - | அவருக்குக் கொடுத்து |
| பாஞ்ஜன்யம் நாதயன் | - | ''பாஞ்சஜன்யம்'' என்ற சங்கை ஊதிக்கொண்டு |
| நிஜபுரம் அகா: | - | மதுராபுரிக்குத் திரும்பிச் சென்றீர்கள். |

स्मृत्वा स्मृत्वा पशुपसुदृशः प्रेमभारप्रणुन्नाः
कारुण्येन त्वमपि विवशः प्रहिणोरुद्धवं तम् ।
किञ्चामुष्मै परमसुहृदे भक्तवर्याय तासां
भक्त्युद्रेकं सकलभुवने दुर्लभं दर्शयिष्यन् ॥ २॥

ஸ்ம்ருத்வா ஸ்ம்ருத்வா பஶுபஸுத்ருஶ:
ப்ரேம பார ப்ரணுன்னா:
காருண்யேன த்வமபி விவஶ:
ப்ராஹிணோ ருத்தவம் தம் ।
கிஞ்சாமுஷ்மை பரமஸுஹ்ருதே
பக்தவர்யாய தாஸாம்
பக்த்யுத்ரேகம் ஸகலபுவனே
துர்லபம் தர்ஶயிஷ்யன் ॥2॥

ப்ரேமபார ப்ரணுன்னா: - பிரேமையின் மேன்மையால் பரவசைகளான
பஶுப ஸுத்ருஶ: ஸ்ம்ருத்வா ஸ்ம்ருத்வா - கோபஸ்திரீகளை நினைத்து நினைத்து
த்வம் அபி காருண்யேன விவஶ: - தாங்களும் கருணையால் பரவசரானீர்கள்;
கிஞ்ச பக்தவர்யாய - அதுமட்டுமல்லாமல் பக்தர்களில் சிறந்தவரும்
பரமஸுஹ்ருதே அமுஷ்மை - பிரிய சினேகிதனுமான அந்த உத்தவருக்கு
ஸகல புவனே துர்லபம் - உலகம் பூராவிலும் ஒருவராலும் அடைய முடியாத
தாஸாம் பக்யுத்ரேகம் - அவர்களுடைய பக்தியின் மேன்மையை
தர்ஶயிஷ்யன் - காண்பிக்கப் போகின்றவராகவும்
தம் உத்தவம் ப்ராஹிணோ: - அந்த உத்தவரை அவர்களிடம் அனுப்பினீர்கள்.

त्वन्माहात्म्यप्रथिमपिशुनं गोकुलं प्राप्य सायं
त्वद्वार्ताभिर्बहु स रमयामास नन्दं यशोदाम् ।
प्रातर्दृष्ट्वा मणिमयरथं शङ्किताः पङ्कजाक्ष्यः
श्रुत्वा प्राप्तं भवदनुचरं त्यक्तकार्याः समीयुः ॥ ३ ॥

த்வன் மாஹாத்ம்ய ப்ரதிமபிஶுனம்
கோகுலம் ப்ராப்ய ஸாயம்
த்வத்வார்த்தாபிர் பஹு ஸ
ரமயாமாஸ நந்தம் யஶோதாம் ।
ப்ராதர்த்ருஷ்ட்வா மணிமயரதம்
ஶங்கிதா: பங்கஜாக்ஷ்ய:
ஶ்ருத்வா ப்ராப்தம் பவதனுசரம்
த்யக்தகார்யா: ஸமீயு: ॥3॥

ஸ: ஸாயம் - அந்த உத்தவர், சாயங்காலத்தில்
த்வன் மாஹாத்ம்ய ப்ரதி மபிஶுனம் - தங்கள் மஹிமையின் மேன்மையை சூசிப்பிக்கின்ற

यत्किञ्चिदप्यविदुषाऽपि विभो मयोक्तं
तन्मन्त्रशास्त्रवचनाद्यभिदृष्टमेव ।
व्यासोक्तिसारमयभागवतोपगीत
क्लेशान्विधूय कुरु भक्तिभरं परात्मन् ॥ ११ ॥

யத்கிஞ்சிதப்யவிதுஷா'பி விபோ மயோக்தம்
தன்மந்த்ர ஶாஸ்த்ர வசனாத்யபித்ருஷ்டமேவ ।
வ்யாஸோக்திஸாரமய பாகவதோபகீத
க்லேஶான் விதூய குரு பக்திபரம் பராத்மன் ॥ 11 ॥

| | |
|---|---|
| விபோ அவிதுஷா அபி - | பிரபுவே! அறிவில்லாதவனாக இருந்தாலும் |
| மயா யத்கிஞ்சித் உக்தம் - | என்னால் சிலதெது கூறப்பட்டதோ |
| தந் மந்த்ர ஶாஸ்த்ர வசநாதயபி த்ருஷ்டம் ஏவ | அது மந்திரசாஸ்திரம் முதலிய வசனங்களில் காணப்பட்டதே. |
| வ்யாஸோக்தி ஸாரமய பாகவதோபகீதே | வியாஸமுனியின் வசனஸாரங்கள் நிறைந்த பாகவத புராணத்தால் ஸ்துதிக்கப்பட்ட |
| பராத்மன் க்லேஶான் விதூய - | பரமாத்மாவே! எனது கஷ்டங்களையகற்றி |
| பக்தி பரம் குரு - | திடமான பக்தியையுண்டுபண்ணுவீராக. |

இதி ஸ்ரீமந் நாராயணீயே ஆகமாதீநாம் பகவத்யேவ பரமதாத்பர்ய நிரூபணம் நாம நவதிதமம் தஶகம் ஸைகம் ஸமாப்தம்.

[ஆதித: ஶ்லோகா: 934] [தஶமஸ்கந்த ஶ்லோகா: 559]

# தசகம் - 91

## பக்தியின் மேன்மை

श्रीकृष्ण त्वत्पदोपासनमभयतमं बद्धमिथ्यार्थदृष्टे
र्मर्त्यस्यार्तस्य मन्ये व्यपसरति भयं येन सर्वात्मनैव ।
यत्तावत्त्वत्प्रणीतानिह भजनविधीनास्थितो मोहमार्गे
धावन्नप्यावृताक्षः स्खलति न कुहचिद्देवदेवाखिलात्मन् ॥१॥

ஸ்ரீக்ருஷ்ண த்வத்பதோபாஸனமபயதமம்
பத்தமித்த்யார்த்த த்ருஷ்டேர்-
மர்த்யஸ்யார்த்தஸ்ய மன்யே வ்யபஸரதி
பயம் யேந ஸர்வாத்மனைவ ।
யத்தாவத் த்வத் ப்ரணீதானிஹ பஜன
விதீனாஸ்த்திதோ மோஹமார்க்கே
தாவன்னப்யாவ்ருதாக்ஷ: ஸ்கலதி ந
குஹசித்தேவ தேவாகிலாத்மன் ॥1॥

தேவ தேவ அகிலாத்மன் ஸ்ரீக்ருஷ்ண - தேவர்களுக்கெல்லாம் தேவனும், எல்லோருக்கும் ஆத்மாவுமான ஹே ஸ்ரீக்ருஷ்ணா!

பத்தமித்யார்த த்ருஷ்டே: - பொய்யான சரீராதிகளில் நான் என்றும், என்னுடையதென்றும் வேரூன்றின அபிமானத்தையுடையவனும்,

மர்த்யஸ்ய - அதனால் மரணதர்மமுடையவனும்,

ஆர்தஸ்ய - அதனால் வருத்தமுற்றவனுமான ஒருவனுக்கு

த்வத் பதோபாஸனம் - தங்கள் திருவடிகளைச் சேவிப்பது

அபயதமம் மன்யே - பயத்தைப் போக்கடிக்கும் சாதனங்களில் மேலானதென்று நான் எண்ணுகிறேன்.

யேன அயம் - தங்கள் பாதசேவனத்தால் பயம் என்பது

ஸர்வாத்மநாஏவவ்யபஸரதி- முற்றிலுமே விலகுகின்றது.

யத் இஹ - ஏனென்றால் இந்த பஜனமார்க்கங்களுள்

த்வத்ப்ரணீதாம் பஜனவிதீன் - தங்களால் உபதேசிக்கப்பட்ட பஜனை முறைகளை

தாவத் ஆஸ்தித: - நன்றாக மேற்கொண்டவன்

மோகமார்கே ஆவ்ருதாக்ஷ: - மயக்கந்தரும் வழியில் கண்களை மூடிக்கொண்டு

தாவன் அபி - ஓடியும்கூட

குஹசித் ந ஸ்கலதி - ஓரிடத்திலும் இடறுவதில்லை.

भूमन् कायेन वाचा मुहुरपि मनसा त्वद्बलप्रेरितात्मा
यद्यत्कुर्वे समस्तं तदिह परतरे त्वय्यसावर्पयामि ।
जात्यापीह श्वपाकस्त्वयि निहितमनः कर्मवागिन्द्रियार्थ
प्राणो विश्वं पुनीते न तु विमुखमनास्त्वत्पदाद्विप्रवर्यः ॥ २ ॥

பூமன் காயேன வாசா முஹுரபி
மனஸா த்வத்பல ப்ரேரிதாத்மா
யத்யத்குர்வே ஸமஸ்தம் ததிஹ
பரதரே த்வய்யஸாவர்ப்பயாமி ।
ஜாத்யாபீஹ ஶ்வபாகஸ்த்வயி நிஹித
மன: கர்மவாகிந்த்ரியார்த்த-
ப்ராணோ விஶ்வம் புநீதே ந து விமுக
மனாஸ்த்வத்பதாத் விப்ரவர்ய: ॥ 2 ॥

பூமன் - எங்கும் நிறைந்திருக்கும் ஹே ஈசா!
த்வத்பல ப்ரேரிதாத்மா அஸௌ - தங்களுடைய சக்தியால் பிரேரணை செய்யப்பட்ட மனத்தையுடைய இந்த நான்,
காயேன வாசா மனஸா அபி - சரீரத்தினாலும் வாக்கினாலும் மனதினாலும்
இஹ முஹு: யத் யத் குர்வே - இவ்வுலகில் அடிக்கடி எதெதைச் செய்கின்றேனோ
தத் ஸமஸ்தம் - அதெல்லாவற்றையும்
பரதரே த்வயி அர்பயாமி - பரமாத்மாவாகிய தங்களிடத்தில் அர்ப்பணம் செய்கின்றேன்
இஹ த்வயி - இவ்வுலகில் தங்களிடத்தில்
நிஹித மன: கர்ம வாகிந்த்ரியார்த ப்ராண: - மனது, கர்மங்கள், வாக்கு, இந்திரியங்கள், அதன் விஷயங்கள், பிராணன் இவைகளை அர்ப்பணஞ் செய்தவன்,
ஜாத்ய ஸ்வபாக: அபி - ஜாதியில் சண்டாளனாக இருந்தாலும்
விஶ்வம் புநீதே - உலகத்தையே பரிசுத்தமாக்குகின்றான்.
த்வத் பாதாத் - தங்கள் திருவடிகளினின்றும்
விமுகமனா: - வில்கின (பராமுகமான) மனதையுடையவன்
விப்ர வர்ய: து - பிராமணோத்தமனாக இருந்தாலுங்கூட
ந - பரிசுத்தமாக்குவதில்லை.

भीतिर्नाम द्वितीयाद्भवति ननु मनःकल्पितं च द्वितीयं
तेनैक्याभ्यासशीलो हृदयमिह यथाशक्ति बुद्ध्या निरुन्ध्याम् ।
मायाविद्धे तु तस्मिन्पुनरपि न तथा याति मायाधिनाथं
तं त्वां भक्त्या महत्या सततमनुभजन्नीश भीतिं विजह्याम् ॥ ३ ॥

பீதிர்நாம த்விதீயாத்பவதி நநு
மன: கல்பிதஞ்ச த்விதீயம்
தேனைக்யாப்ப்யாஸ-ஶீலோ ஹ்ருதயமிஹ
யதாஶக்தி புத்த்யா நிருந்த்யாம் ।
மாயா வித்தேது தஸ்மின் புனரபி ந
ததா பாதி மாயாதிநாதம்
தத்த்வாம் பக்த்யா மஹத்யா ஸததமனு-
பஜந்நீஶ பீதிம் விஜஹ்யாம் ॥3॥

| | | |
|---|---|---|
| பீதி: | - | பயமானது |
| த்விதீயாத் நநு | - | தன்னைவிட இரண்டாவது வஸ்துவிடமிருந்துதான் |
| பவதி நாம | - | உண்டாகிறது என்பது பிரசித்தம்! |
| த்வி தீயம் ச | - | இரண்டாவது வஸ்துவும் |
| மன: கல்பிதம் | - | ஸங்கல்பவிகல்பரூபமான அந்தக்கரண விருத்தியால் கற்பிக்கப்பட்டது. |
| தேன ஐக்யாப்ப்யாஸ ஶீலோ | - | ஆனதால் காரிய காரணங்களொன்றென்பதை அடிக்கடி அப்யாசம் செய்கின்றவனாய் |
| ஹ்ருதயம் யதா ஶக்தி | - | மனதை வலிவுள்ளவரை |
| இஹ | - | மனதால் சித்திதமான வஸ்துவில் |
| புத்த்யா | - | நிச்சயாத்மகமான அந்தக்கரண விருத்தியால் |
| நிருந்த்யாம் | - | நிலைநிறுத்துவேன். |
| தஸ்மின் | - | அந்த ஹிருதயமானது |
| மாயா வித்தே து | - | மாயாகாரியங்களான காமக் குரோதாதிகளால் வியாபிக்கப் படுமேயாகில் |
| புன: அபி | - | மறுபடியும் நிலைநிறுத்தப்பட்டாலும் |
| ததா நா பாதி | - | முன்போல் (ஐக்ய ஞானமானது) பிரகாசிப்பதில்லை. |
| தத் ஈஶ | - | ஆகையால் ஹே ஈசா! |
| மாயாதி நாதம் த்வாம் | - | மாயைக்கதிபதியான தங்களை |
| மஹத்யா பக்த்யா | - | திடமான பக்தியுடன் |
| ஸததம் அனுபஜன் | - | இடைவிடாது சேவித்துக்கொண்டு |
| பீதிம் விஜஹ்யாம் | - | பயத்தை முற்றிலும் விட்டுவிடுவேன். |

भक्तेरुत्पत्तिवृद्धी तव चरणजुषं सङ्गमेनैव पुंसा
मासाद्ये पुण्यभाजां श्रिय इव जगति श्रीमतां सङ्गमेन ।
तत्सङ्गो देव भूयान्मम खलु सततं तन्मुखादुन्मिषद्भि
स्त्वन्माहात्म्यप्रकारैर्भवति च सुदृढा भक्तिरुद्धूतपापा ॥ ४ ॥

பக்தேருத்பத்திவ்ருத்தீ தவ சரண-
ஜுஷாம் ஸங்கமேனைவ பும்ஸா-
மாஸாத்யே புண்யபாஜாம் ஶ்ரிய
இவ ஜகதி ஶ்ரீமதாம் ஸங்கமேன ।
தத்ஸங்கோ தேவ பூயான் மம கலு
ஸததம் தன்முகா துன்மிஷத்பிஸ்
த்வன் மாஹாத்ம்ய ப்ரகாரைர்பவதி ச
ஸுத்ருடா பக்தி ருத்தூத பாபா ॥4॥

| | | |
|---|---|---|
| ஜகதி ஶ்ரீமதாம் ஸங்கமேன | - | உலகில் ஶ்ரீமான்களுடைய சேர்க்கையால் |
| ஶ்ரிய: இவ | - | ஐசுவரியத்தின் உற்பத்திப் பெருக்குகள் போல |
| தவ சரண ஜுஷாம் | - | தங்கள் திருவடிகளைச் சேவிக்கின்ற பக்தர்களுடைய |
| ஸங்கமேன ஏவ | - | சேர்க்கையால்தான் |
| புண்ய பாஜாம் பும்ஸாம் | - | புண்யவான்களான புமான்களுக்கு |
| பக்தே: உத்பத்தி வ்ருத்தி | - | பக்தியின் உற்பத்தியும் பெருக்கும் |
| ஆஸாத்யே | - | அடையவேண்டியவைகளாகின்றன. |
| தேவ | - | ஹே ஸ்வயம்பிரகாசரூபியே! |
| மம கலு ஸததம் | - | எனக்கும் எப்பொழுதும் |
| தத் ஸங்க: பூயாத் | - | அவர்களுடன் சேர்க்கையுண்டாகக்கடவது. |
| தன் முகாத் உன்மிஷத்பி: | - | அவர்களுடைய திருவாயிலிருந்து வெளிக்கிளம்புகின்ற |
| த்வன் மாஹாத்ம்ய ப்ரகாரை: | - | தங்கள் மஹிமானவிசேஷங்களால் |
| பவதி ஸுத்ருடா | - | தங்களிடத்தில் மிகத் திடமானதும் |
| உத்தூத பாபா | - | பாபங்களைப் போக்கடிக்க வல்லதுமான |
| பக்தி: ச | - | பக்தியுமுண்டாகக்கடவது. |

श्रेयोमार्गेषु भक्तावधिकबहुमतिर्जन्मकर्माणि भूयो
गायन्क्षेमाणि नामान्यपि तदभयतः प्रद्रुतं प्रद्रुतात्मा ।
उद्यद्धासः कदाचित्कुहचिदपि रुदन्क्वापि गर्जन्प्रगाय
न्नुन्मादीव प्रनृत्यन्नयि कुरु करुणां लोकबाह्यश्चरेयम् ॥ ५ ॥

ஶ்ரேயோ மார்க்கேஷு பக்தாவதிக
பஹுமதிர் ஜன்ம கர்மாணி பூயோ
காயன் க்ஷேமாணி நாமான்யபி
ததுபயத: ப்ரத்ருதம் ப்ரத்ருதாத்மா ।
உத்யத்தாஸ: கதாசித் குஹசிதபி ருதன்
க்வாபி கர்ஜன் ப்ரகாயன்-
னுன்மாதீவ ப்ரந்ருத்யன்னபி குரு
கருணாம் லோகபாஹ்யஶ்சரேயம் ॥5॥

| | | |
|---|---|---|
| ஶ்ரேயோ மார்கேஷு | - | முக்கிய புருஷார்த்தமான மோக்ஷத்தை யடைவிக்கின்ற மார்க்கங்களுள் |
| பக்தௌ அதிக பஹுமதி: | - | ஒன்றான பக்தியில் அதிக ஆதரவுடையவனாய் |
| க்ஷேமாணி | - | க்ஷேமத்தைக் கொடுக்கின்ற |
| ஜன்ம கர்மாணி | - | திருவவதாரங்களையும் லீலைகளையும், |
| நாமானி அபி | - | அதனாலுண்டான திருநாமங்களையும் |
| பூய: காயன் | - | அடிக்கடி கானம் பண்ணிக்கொண்டும், |
| ததுபயத: | - | அவையிரண்டினாலும் (ஜன்ம கர்ம கீர்த்தனத்தாலும், நாம கீர்த்தனத்தாலும்) |
| ப்ரத்ருதம் ப்ரத்ருதாத்மா | - | வெகு விரைவாக மனமுருகினவனாய் |
| கதாசித் உத்யத்தாஸ: | - | சில சமயம் சிரித்துக்கொண்டும், |
| குஹசித் ருதன் அபி | - | சிலபொழுது அழுதுகொண்டும், |
| க்வாபி கர்ஜன் | - | சிலவேளை கர்ஜித்துக்கொண்டும், |
| ப்ரகாயன் உன்மாதி இவ | - | உரக்கப்பாடிக்கொண்டும், பித்துப் பிடித்தவன்போல |
| ப்ரந்ருத்யன் | - | நன்கு ஆடிக்கொண்டும் |
| லோக பாஹ்ய: சரேயம் | - | உலகில் பற்றற்றவனாக சஞ்சரிப்பேனாக. |
| அயி கருணாம் குரு | - | ஹே ஈசா! அவ்விதம் கருணைபுரிவீராக. |

भूतान्येतानि भूतात्मकमपि सकलं पक्षिमत्स्यान्मृगादीन्
मर्त्यान्मित्राणि शत्रूनपि यमितमतिस्त्वन्मयान्यानमानि ।
त्वत्सेवायां हि सिध्येन्मम तव कृपया भक्तिदार्ढ्यं विराग
स्त्वत्तत्त्वस्यावबोधोऽपि च भुवनपते यत्नभेदं विनैव ॥ ६ ॥

பூதான்யேதானி பூதாத்மகமபி ஸகலம்
பக்ஷிமத்ஸ்யான் ம்ருகாதீன்
மர்த்யான் மித்ராணி ஶத்ரூனபி
யமிதமதிஸ்த்வன் மயான்யாநமானி ।
த்வத் ஸேவாயாம் ஹி ஸித்த்யேன்மம தவ
க்ருபயா பக்திதார்ட்யம் விராகஸ்-
த்வத் தத்வஸ்யாவ போதோ(அ)பி ச புவன-
பதே யத்ன பேதம் வினைவ ॥ 6 ॥

| | | |
|---|---|---|
| ஏதானி பூதானி | - | இந்த பஞ்சபூதங்களையும் |
| பூதாத்மகம் | - | இப்பஞ்சபூதங்களாலுண்டான |
| ஸகலம் அபி | - | சகல சராசரப்பிரபஞ்சத்தையும் |
| பக்ஷிமத்ஸ்யான் ம்ருகாதீன் | - | பறவைகளையும், மீன்களையும், மான் முதலியவற்றையும் |
| மர்த்யான் மித்ராணி | - | மனிதர்களையும், சினேகிதர்களையும், |
| ஶத்ரூன் அபி த்வன் மயானி | - | பகைவர்களையும், தங்கள் ஸ்வரூபங்களென்று |

யமிதமதி: ஆநமானி - மனதில் நிச்சயித்துக்கொண்டு நான் வணங்குவேனாக.
புவன பதே - ஹே லோகநாதா!
தவக்ருபயா: பக்திதார்ட்யம்- தங்கள் கருணையால் திடமான பக்தியும்
த்வத் ஸேவாயாம் ஹி - தங்கள் சேவையிருக்கும்பொழுதல்லவா
விராக: த்வத் தத்வஸ்ய - வைராக்கியமும், பகவத் தத்வத்தின்
அவபோத: அபி ச யத்ன பேதம் விநா ஏவ } உண்மையறிவும் வேறு முயற்சியன்றியே
மம ஸித்தயேத் - எனக்கு சித்திக்கின்றது.

नो मुह्यन्क्षुत्तृडाद्यैर्भवसरणिभवैस्त्वन्निलीनाशयत्वा
च्चिन्तासातत्यशाली निमिषलवमपि त्वत्पदादप्रकम्पः ।
इष्टानिष्टेषु तुष्टिव्यसनविरहितो मायिकत्वावबोधा
ज्ज्योत्स्नाभिस्त्वन्नखेन्दोरधिकशिशिरितेनात्मना सञ्चरेयम् ॥७॥

நோ முஹ்யன் க்ஷுத்த்ருடாத்யைர்ப்பவ
ஸரணிபவைஸ்த்வந்நிலீனாஶயத்வாச்-
சிந்தாஸாதத்யஶாலீ நிமிஷலவ-
மபித்வத்பதாதப்ரகம்ப: ।
இஷ்டாநிஷ்டேஷு துஷ்டிவ்யஸன
விரஹிதோ மாயிகத்வாவபோதாஜ்-
ஜ்யோத்ஸ்நாபிஸ் த்வந்நகேந்தோ-
ரதிகஶிஶிரிதேனாத்மனா ஸஞ்சரேயம் ॥7॥

த்வந்நிலீனாஶயத்வாத் - தங்களிடம் லயித்த மனதை யுடையவனாயிருப்பதால்
பவஸரணி பவை: - ஸம்ஸாரமார்க்கங்களிலிருந்துண்டாகும்
க்ஷுத்த்ருடாத்யை நோ முஹ்யன் } - பசி, தாகம் முதலியவற்றால் மயக்கமடையாதவனாகவும்,
சிந்தா ஸாதத்யஶாலீ - இடைவிடாது தியானஞ் செய்கின்றவனாகவும்
நிமிஷலவம் அபி - அதனால் ஒரு நிமிஷங்கூட
த்வத் பதாத் அப்ரகம்ப:- தங்கள் திருவ்டியிலிருந்து சலியாதவனாகவும்,
இஷ்டானிஷ்டேஷு - பிரியமான வஸ்துக்களிலும், பிரியமில்லாத வஸ்துக்களிலும்
மாயிகத்வா வபோதாத் - மாயாகாரியங்கள் என்ற அறிவினால்
துஷ்டி வ்யஸன விரஹித: } - முறையே சந்தோஷமும் வருத்தமும் அற்றவனாகவும்,
த்வந் நகேந்தோ: - தங்கள் திருவடிகளிலிருக்கும் நகங்களாகிற சந்திரனுடைய

ஜோத்ஸ்நாபி: - சந்திரிகைகளால்
அதிக ஶிஶிரிதேன - மிகக் குளிர்ச்சியடைவிக்கப்பட்ட
ஆத்மனா ஸஞ்சரேயம் - மனத்துடன் சஞ்சரிப்பேனாக.

भूतेष्वेषु त्वदैक्यस्मृतिसमधिगतौ नाधिकारोऽधुना चेत्
त्वत्प्रेम त्वत्कमैत्री जडमतिषु कृपा द्विट्सु भूयादुपेक्षा ।
अर्चायां वा समर्चाकुतुकमुरुतरश्रद्धया वर्धतां मे
त्वत्संसेवी तथापि द्रुतमुपलभते भक्तलोकोत्तमत्वम् ॥८॥

பூதேஷ்வேஷு த்வதைக்ய ஸ்ம்ருதி
ஸமதிகதௌ நாதிகாரோऽதுனா சேத்
த்வத்ப்ரேம த்வத் க மைத்ரீ ஜடமதிஷு
க்ருபா த்விட்ஸு பூயாதுபேக்ஷா ।
அர்சாயாம் வா ஸமர்சா குதுகமுருதர
ஶ்ரத்தயா வர்ததாம் மே
த்வத்ஸம்ஸேவீ ததாऽபி த்ருதமுபலபதே
பக்தலோகோத்தம த்வம் ॥8॥

ஏஷு பூதேஷு - இந்த ஸமஸ்தப்பிராணிகளிடத்திலும்
த்வதைக்யஸ்ம்ருதி ஸமதிகதௌ - தங்களுடைய ஐக்கியானுசந்தானத்தை அடைவதில்
அதுநா அதிகார: நசேத் - இப்பொழுது எனக்கதிகாரமில்லை என்றால்
த்வத் ப்ரேம - தங்களிடத்தில் பிரேமையும்,
த்வத்கமைத்ரீ - தங்களடியார்களின் சினேகமும்,
ஜடமதிஷு க்ருபா - மூடர்களிடத்தில் கருணையும்,
த்விட்ஸு உபேக்ஷா பூயாத் - பகைவர்களிடத்தில் உபேக்ஷையும் உண்டாகக்கடவது.
வா அர்சாயாம் - அதிலுமதிகாரமில்லையென்றால் தங்கள் பிரதிமையில்
ஸமர்சாகுதுகம் - பூஜை செய்வதில் விருப்பம்,
உருதரஶ்ரத்தயா - மிக அதிகமான சிரத்தையுடன்
மே வர்ததாம் - எனக்கு விருத்தியடையட்டும்.
ததா அபி த்வத்ஸம்ஸேவீ - அவ்விதமாகிலும் தங்களை சேவிக்கின்றவன்
பக்தலோகோத்தமத்வம் - பக்தஜனங்களில் சிறந்தவனாக இருக்குந்தன்மையை
த்ருதம் உபலபதே - விரைவாக அடைகிறான்.

आवृत्य त्वत्स्वरूपं क्षितिजलमरुदाद्यात्मना विक्षिपन्ती
जीवान्भूयिष्ठकर्मावलिविवशगतीन् दुःखजाले क्षिपन्ती ।
त्वन्माया माभिभून्मामयि भुवनपते कल्पते तत्प्रशान्त्यै
त्वत्पादे भक्तिरेवेत्यवददयि विभो सिद्धयोगी प्रबुद्धः ॥ ९ ॥

ஆவ்ருத்ய த்வத்ஸ்வரூபம் க்ஷிதி ஜல
மருதாத்யாத்மனா விக்ஷிபந்தீ
ஜீவான் பூயிஷ்ட்ட கர்மாவலி விவஶ கதீன்
து:க்கஜாலே க்ஷிபந்தீ ।
த்வன்மாயா மாபி பூூன் மாமயி புவன்பதே
கல்பதே தத்ப்ரஶாந்த்யை
த்வத்பாதே பக்திரேவேத்யவததயி விபோ
ஸித்தயோகீ ப்ரபுத்த: ॥9॥

| | | |
|---|---|---|
| அயி புவனபதே | - | ஹே ஜகந்நாதா! |
| த்வத் ஸ்வரூபம் ஆவ்ருத்ய | - | தங்களுடைய பரமார்த்தரூபத்தை மறைத்துக்கொண்டு |
| க்ஷிதிஜல மருதாத்யாத்மநா | - | பூமி, ஜலம், வாயு முதலிய ரூபமாக |
| விக்ஷி பந்தீ | - | விக்ஷேபசக்தியினால்தோன்றும்படிசெய்கிறதும், |
| பூயிஷ்டகர்மாவலி விவஶகதீன் | - | பலவகைப்பட்ட கர்மபடலங்களால் தன்வசமற்ற சரீரங்களையுடைய |
| ஜீவான் துக்க ஜாலே | - | ஜீவாத்மாக்களை துக்கமாகிற வலையில் |
| க்ஷிபந்தீ த்வன்மாயா | - | தள்ளுகின்றதுமான தங்கள் மாயை |
| மாம் மா அபிபூத் | - | என்னைக் கீழ்படுத்தக்கூடாது. |
| அயி விபோ | - | ஹே பிரபுவே! |
| த்வத் பாதே பக்தி: ஏவ | - | தங்கள் திருவடிகளில் பக்தியொன்றே |
| தத் ப்ரஶாந்த்யை கல்பதே | - | அதையழிப்பதற்கு சக்தியுற்றதாக ஆகிறது |
| இதி ப்ரபுத்த: ஸித்தயோகீ | - | என்று பிரபுத்தர் என்ற சித்தயோகி |
| அவதத் | - | (விதேஹராஜனிடம்) உரைத்தார். |

दुःखान्यालोक्य जन्तुष्वलमुदितविवेकोऽहमाचार्यवर्या
ल्लब्ध्वा त्वद्रूपतत्त्वं गुणचरितकथाद्युद्भवत्भक्तिभूमा ।
मायामेनां तरित्वा परमसुखमये त्वत्पदे मोदिताहे
तस्यायं पूर्वरङ्गः पवनपुरपते नाशयाशेषरोगान् ॥ १० ॥

துःக்கான்யாலோக்ய ஜந்துஷ்வலமுதித
விவேகோऽஹமாசார்ய வர்யால்
லப்த்வா த்வத்ரூப தத்வம் குணசரித
கதாத்யுத்பவத் பக்தி பூமா ।
மாயாமேனாம் தரித்வா பரமஸுகமயே
த்வத்பதே மோதிதாஹே
தஸ்யாயம் பூர்வரங்க: பவனபுரபதே
நாஶயாஶேஷ ரோகான் ॥ 10 ॥

| | | |
|---|---|---|
| அஹம் ஜந்துஷு துக்கானி ஆலோக்ய | - | நான் ஜீவர்களிடத்தில் பற்பல துக்கங்களைக்கண்டு |
| அலம் உதித விவேக: | - | நன்கு உதித்த விவேகத்தையுடையவனாக |
| ஆசார்ய வர்யாத் | - | சிறந்த ஆசாரியனிடமிருந்து |
| த்வத்ரூப தத்வம் லப்த்வா | - | தங்கள் ஸ்வரூபத்தின் உண்மையை அறிந்து |
| குண சரிதகதா-த்யத் பவத் பக்திபூமா | | குணங்களையும் சரிதங்களையும் கீர்த்தனம் பண்ணுவது முதலியவற்றால் உண்டான பக்திப்பெருக்கை யுடையவனாய் |
| ஏனாம் மாயாம் தரித்வா | - | இந்த மாயயைத் தாண்டி |
| பரம ஸுகமயே | - | பரமானந்தரூபமான |
| த்வத்பதே மோதிதாஹே | - | தங்கள் திருவடிகளில் சந்தோஷமடைவேனாக. |
| தஸ்ய அயம் பூர்வரங்க: | - | அதற்கு இந்த மாயாஜாலம் நாந்தியூரக ஆகிறது. |
| பவன புரபதே | - | ஹே குருவாயூரப்பா! |
| அஶேஷ ரோகாந் நாஶய | - | ரோகமனைத்தையும் நாசஞ்செய்வீராக. |

இதி ஶ்ரீமந் நாராயணீயே பக்திரேவ நிஃரேய ஸஹேதுத்வ
வர்ணனம் நாம ஏகநவதிதமம் தஶகம்.

[ஏகாதசஸ்கந்தே ஶ்லோகா: 10]

[ஆதித ஶ்லோக: 942]

# தஶகம் - 92

## கர்மமும் பக்தியும்

वेदैस्सर्वाणि कर्माण्यफलपरतया वर्णितानीति बुध्वा
तानि त्वय्यर्पितान्येव हि समनुचरन् यानि नैष्कर्म्यमीश ।
मा भूद्वेदैर्निषिद्धे कुहचिदपि मनःकर्मवाचां प्रवृत्ति
र्दुर्वर्ज्जञ्चेदवाप्तं तदपि खलु भवत्यर्पये चित्प्रकाशे ॥ १ ॥

வேதை: ஸர்வாணி கர்மாண்யபல
பரதயா வர்ணிதானீதி புத்த்வா
தானி த்வய்யர்ப்பிதான்யேவ ஹி
ஸமனுசரன் யானி நைஷ்கர்ம்யமீஶ ।
மாபூத்வேதைர்நிஷித்தே குஹசிதபி
மன: கர்மவாசாம் ப்ரவ்ருத்திர்-
துர்வர்ஜம் சேதவாப்தம் ததபி கலு
பவத்யர்ப்பயே சித்ப்ரகாஶே ॥ 1 ॥

| | | |
|---|---|---|
| ஈஶ | - | ஹே ஈசா! |
| வேதை: ஸர்வாணி கர்மாணி | - | வேதங்களால் எல்லா கர்மங்களும் |
| அபல பரதயா | - | பலத்தில் விருப்பமில்லாமல் செய்யத் தகுந்தவைகளாக |
| வர்ணிதானி இதி புத்த்வா | - | வர்ணிக்கப்பட்டிருக்கின்றனவென்றறிந்து |
| தானி | - | அவைகளை |
| த்வயி அர்ப்பிதானி ஏவ ஹி | - | தங்களிடத்திலர்ப்பணம் செய்யப்பட்டவைகளாகவே |
| ஸமனுசரன் | - | அனுஷ்டித்துக்கொண்டு |
| நைஷ்கர்ம்யம் யாநி | - | நிஷ்காம கர்மத்தை அனுஷ்டித்ததால் உண்டாகும் பலமான ஞானத்தை அடைவேனாக. |
| வேதை நிஷித்தே | - | வேதங்களால் நிஷேதிக்கப்பட்ட |
| குஹ சித் அபி | - | ஒரு கர்மத்திலும் |
| மன: கர்ம வாசாம் | - | மனது, கர்மம், வாக்கு இவைகளுக்கு |
| ப்ரவ்ருத்தி: மாபூத் | - | பிரவிருத்தி உண்டாகக்கூடாது. |
| துர்வர்ஜம் அவாப்தம் சேத் | - | எவ்விதத்திலும் விலக்கமுடியாததான ஒரு நிஷித்தகர்மம் நேருமேயாகில் |
| தத் அபி கலு சித்ப்ரகாஶே | - | அதையும் முற்றிலும் ஞானஸ்வரூபியான |
| பவதி அர்ப்பயே | - | தங்களிடத்தில் அர்ப்பணம் செய்வேன். |

यस्त्वन्यः कर्मयोगस्तव भजनमयस्तत्र चाभीष्टमूर्तिं
हृद्यां सत्त्वैकरूपां दृषदि हृदि मृदि क्वापि वा भावयित्वा ।
पुष्पैर्गन्धैर्निवेद्यैरपि च विरचितैः शक्तितो भक्तिपूतैः
र्नित्यं वर्यां सपर्यां विदधदयि विभो त्वत्प्रसादं भजेयम् ॥ २॥

யஸ்த்வன்ய: கர்மயோர்கஸ் தவ
பஜனமயஸ் தத்ர சாபீஷ்டமூர்த்திம்
ஹ்ருத்யாம் ஸத்வைக ரூபாம் த்ருஷதி
ம்ருதி க்வாபி வா பாவயித்வா ।
புஷ்பைர் கந்தைர்நிவேத்யைரபி ச
விரசிதை: ஶக்திதோ பக்திபூதைர்
நித்யம் வர்யாம் ஸபர்யாம் விததயி
விபோ த்வத் ப்ரஸாதம் பஜேயம் ॥2॥

| | | |
|---|---|---|
| அயி விபோ | - | ஹே பிரபுவே! |
| தவ பஜன மய: | - | தங்களுடைய பஜனரூபமானதும் |
| அன்ய: | - | வைதிககர்மயோகத்தைக் காட்டிலும் வேறுபட்டதுமான |
| ய: து கர்மயோக: தத்ர ச | - | யாதொரு கர்மயோகமுண்டோ அதிலும் |
| ஹ்ருத்யாம் ஸத்த்வைக ரூபாம் | } | மிக அழகுற்றதும், சுத்தஸத்வ ஸ்வரூபமானதுமான |
| அபீஷ்ட மூர்திம் | - | தனக்கிஷ்டமான ஒரு மூர்த்தியை |
| த்ருஷதி ம்ருதி வா | - | கல்லிலாவது, மனதிலாவது, மண்ணிலாவது அல்லது |
| க்வாபி பாவயித்வா | - | வேறுபிரதிமைகளிலாவது தியானம் பண்ணிக்கொண்டு |
| ஶக்தித: விரசிதை: | - | சக்திக்கேற்றவாறு சம்பாதிக்கப் பட்டவைகளும் |
| பக்திபூதை: | - | பக்தியால் மிக சுத்தங்களுமான |
| புஷ்பை: கந்தை: | - | புஷ்பங்களாலும் சந்தனத்தாலும் |
| நிவேத்யை அபி ச வர்யாம் ஸபர்யாம் | } - | நிவேத்தியங்களாலும் சிறந்த பூஜையை |
| நித்ய விததன் | - | ஒவ்வொரு நாளும் செய்துகொண்டு |
| த்வத் ப்ரஸாதம் பஜேயம் | - | தங்கள் பிரசாதத்தை அடைவேனாக. |

स्त्रीशूद्रास्त्वत्कथादिश्रवणविरहिता आसतां ते दयार्हा
स्त्वत्पादासन्नयातान्द्विजकुलजनुषो हन्त शोचाम्यशान्तान् ।
वृत्त्यर्थं ते यजन्तो बहुकथितमपि त्वामनाकर्णयन्तो
दृप्ता विद्याभिजात्यैः किमु न विदधते तादृशः मा कृथा माम् ॥ ३॥

ஸ்த்ரீசூத்ராஸ் த்வத்கதாதி ஶ்ரவண
விரஹிதா ஆஸதாம் தே தயார்ஹாஸ்-
த்வத்பாதாஸன்ன யாதான் த்விஜ
குல ஜனுஷோ ஹந்த ஶோசாம்யஶாந்தான் ।
வ்ருத்த்யர்த்தம் தே யஜந்தோ பஹூ
கதிதமபி த்வாமனாகர்ணயந்தோ
த்ருப்தா வித்யாபிஜாத்யை: கிமு ந
விதததே தாத்ருஶம் மா க்ருதா மாம் ॥3॥

| | | |
|---|---|---|
| ஸ்த்ரீ ஶூத்ரா: | - | ஸ்திரீகளும் சூத்திரர்களும் (அறியாமையால்) |
| த்வத் கதாதி ஶ்ரவண விரஹிதா: | - | தங்கள்கதை, நாமம் இவைகளைக் கேட்பது, கீர்த்தனம் செய்வது முதலியவை இல்லாதவர்கள். |
| தயார்ஹா: | - | ஆனதுபற்றி அவர்கள் கருணைக்கு உரியவர்கள். |
| தே ஆஸதாம் ஹந்த | - | அப்படிப்பட்ட அவர்கள் இருக்கட்டும் கஷ்டம்! |
| த்வத் பாதாஸந் நயாதான் | - | தங்கள் திருவடிகளின் சமீபத்தை அடைந்தவர்களும் |
| அஶாந்தான் | - | சாந்தியை அடையாதவர்களுமான |
| த்விஜ குலஜனுஷ: | - | பிராமணக்ஷத்திரிவைசியகுலங்களில் ஜனித்தவர்களைபற்றி |
| ஶோசாமி | - | நான் வருந்துகிறேன். |
| தே வ்ருத்யர்த்தம் | - | அவர்கள் உபஜீவனத்திற்காக |
| யஜந்த: | - | யாகம் செய்துகொண்டும் |
| பஹூகதிதம் அபி | - | பலரால் பலவாறாக உபதேசிக்கப்பட்டுங்கூட |
| த்வாம் அனாகர்ண யந்த | - | தங்களைப்பற்றிக் கேட்காதவர்களாகவும் |
| வித்யாபிஜாத்யை: | - | வித்தையாலும் உயர்குலப் பிறப்பாலும் |
| த்ருப்தா: கிமு ந விததே | - | கர்வமடைந்தவர்களாகவும் என்னதான் செய்வதில்லை. |
| மாம் தாத்ருஶம் மாக்ருதா | - | என்னை அப்படிப்பட்டவனாக தாங்கள் செய்யக்கூடாது. |

पपोऽयं कृष्ण रामेत्यभिलपति निजं गूहितुं दुश्चरित्रं
निर्लज्जस्यास्य वाचा बहुतरकथनीयानि मे विघ्नितानि ।
भ्राता मे वन्ध्यशीलो भजति किल सदा विष्णुमित्थं बुधांस्ते
निन्दन्त्युच्चैर्हसन्ति त्वयि निहितमतींस्तादृशं मा कृथा माम् ॥ ४॥

பாபோஸ் யம் க்ருஷ்ண ராமேத்யபிலபதி
நிஜம் கூஹிதும் துஶ்சரித்ரம்
நிர்லஜ்ஜஸ்யாஸ்ய வாசா பஹூ-
தர கதனீயானி மே விக்னிதானி।
ப்ராதா மே வந்த்யஶீலோ பஜதி கில ஸதா
விஷ்ணுமித்தம் புதாம்ஸ்தே
நிந்தந்த்யுச்சைர்ஹஸந்தி த்வயி
நிஹித மதீம் ஸ்தாத்ருஶம் மா க்ருதா மாம் ॥4॥

பாப: அயம் நிஜம் துஶ்சரித்ரம் - பாபியான இவன் தனது அபசரிதத்தை
கூஹிதும் க்ருஷ்ண ராம இதி - மறைத்துவைக்க கிருஷ்ணா! ராமா! என்று
அபிலபதி - பிதற்றுகிறான்.
நிர்லஜ்ஜஸ்ய அஸ்ய வாசா மே - வெட்கமற்ற இவனுடைய பேச்சினால் என்னுடைய
பஹூதரகத நீயானி - வெகுவாகச் சொல்லவேண்டியவை
விக்நிதானி - கெடுக்கப்பட்டன.
பந்த்யஶீல: மே ப்ராதா - வீண்வேலைகளைச்செய்கின்ற என்சகோதரன்
ஸதா விஷ்ணும் பஜதி கில - எப்பொழுதும் விஷ்ணுவை பஜிக்கின்றானாம்;
இத்தம் தே - என்றிவ்வாறு அவர்கள்
த்வயி நிஹிதமதீன் - தங்களிடம் மனதைச் செலுத்தியவர்களான
புதான் நிந்தந்தி - அறிவாளர்களை (பக்தர்களை) நிந்திக்கின்றனர்;
உச்சை: ஹஸந்தி - உறக்கச் சிரித்துப் பரிஹசிக்கின்றனர்.
மாம் தாத்ருஶம் மா க்ருதா: - என்னையப்படிப்பட்டவனாக தாங்கள் செய்யக்கூடாது.

श्वेतच्छायं कृते त्वां मुनिवरवपुषं प्रीणयन्ते तपोभि
स्त्रेतायां स्रुक्स्रुवाद्यङ्कितमरुणतनुं यज्ञरूपं यजन्ते ।
सेवन्ते तन्त्रमार्गैर्विलसदरिगदं द्वापरे श्यामलाङ्गं
नीलं सङ्कीर्तनाद्यैरिह कलिसमये मानुषास्त्वां भजन्ते ॥ ५ ॥

ஶ்வேதச்சாயம் க்ருதே த்வாம் முனிவர
வபுஷம் ப்ரீணயந்தே தபோபிஸ்-
த்ரேதாயாம் ஸ்ருக்-ஸ்ருவாத்யங்கித-
மருணதனும் யஜ்ஞரூபம் யஜந்தே।
ஸேவந்தே தந்த்ரமார்க்கைர் விலஸ-
தரிகதம் த்வாபரே ஶ்யாமலாங்கம்
நீலம் ஸங்கீர்த்தனாத்யைரிஹ கலிஸமயே
மானுஷாஸ்த்வாம் பஜந்தே ॥5॥

| | | |
|---|---|---|
| மானுஷா: க்ருதே ஶ்வேதச்சாயம் | - | மனிதர்கள் கிருதயுகத்தில் வெண்ணிறமுடைய |
| முனிவரவபுஷம் த்வாம் | - | பிரம்மசாரியின் உருவமுடைய தங்களை |
| தபோபி: ப்ரீணயந்தே | - | தபஸ்ஸினால் திருப்தி செய்விக்கின்றனர். |
| த்ரேதாயாம் ஸ்ருக் ஸ்ரு வாத்யங்கிதம் | - | திரேதாயுகத்தில் ஸ்ருக், ஸ்ருவம் முதலியவற்றால் அடையாளம் பண்ணப்பட்ட |
| அருண தனும் | - | சிவந்த உருவமுடைய |
| யக்ஞ ரூபம் யஜந்தே | - | யக்ஞரூபியான தங்களை பூஜிக்கின்றனர். |
| த்வாபரே விலஸதரிகதம் | - | துவாபரயுகத்தில் பிரகாசிக்கின்ற சக்கிரத்தையும், கதையையுமுடையவரும் |
| ஶ்யாமலாங்கம் | - | சியாமளவர்ணனுமான தங்களை |
| தந்த்ர மார்கை: | - | தந்திரசாஸ்திரங்கள் கூறிய மார்க்கங்களால் |
| ஸேவந்தே | - | சேவிக்கின்றனர். |
| இஹ கலிஸமயே நீலம் த்வாம் | - | இந்தக் கலியுகத்தில் நீலவர்ணனான தங்களை |
| ஸங்கீர்த நாத்யை: பஜந்தே | - | நாமஸங்கீர்த்தனம் முதலியவற்றால் பஜிக்கின்றனர். |

सोऽयं कालेयकालो जयति मुररिपो यत्र सङ्कीर्तनाद्यै
र्निर्यत्नैरेव मार्गैरखिलद नचिरात्त्वत्प्रसादं भजन्ते ।
जातास्त्रेताकृतादावपि हि किल कलौ सम्भवं कामयन्ते
दैवात्तत्रैव जातान्विषयविषरसैर्मा विभो वञ्चयास्मान् ॥ ६ ॥

ஸோ(அ)யம் காலேய காலோ ஜயதி
முரரிபோ யத்ர ஸங்கீர்த்தனாத்யைர்
நிர்யத்னைரேவ மார்கைரகிலத
ந சிராத் த்வத்ப்ரஸாதம் பஜந்தே।
ஜாதாஸ்த்ரேதா க்ருதாதாவபி ஹி கில
கலௌ ஸம்பவம் காமயந்தே
தைவாத் தத்ரைவ ஜாதான் விஷய
விஷரஸைர்மா விபோ வஞ்சயாஸ்மான் ॥6॥

| | | |
|---|---|---|
| முரரிபோ ஸ: | - | ஹே முராரியே! அவ்விதம் பிரசித்திபெற்ற |
| அயம்காலேயகால: ஜயதி | - | இந்தக் கலிகாலம் மேன்மைபெற்று விளங்குகிறது |
| யத்ர ஸங்கீர்தனாத்யைர் | - | அந்தக்கலிகாலத்தில் நாமஸங்கீர்த்தனம் முதலிய |
| நிர்யத்னை: ஏவ | - | பிரயத்தினம் குறைந்தவைகளேயான |
| மார்கை: நசிராத் | - | உபாயங்களால் வெகு சீக்கிரத்தில் |
| த்வத் ப்ரஸாதம் பஜந்தே | - | தங்கள் பிரசாதத்தையடைகின்றனர். |
| ஹி த்ரேதா க்ருதா தெள | - | ஆகையால் திரேதா, கிருதம் முதலிய யுகத்தில் |
| ஜாதா: அபி கலெள | - | பிறந்தவர்கள்கூட கலியுகத்தில் |

| | | |
|---|---|---|
| ஸம்பவம் காமயந்தே கில- | | பிறப்பை விரும்புகின்றனரல்லவா. |
| அகிலத விபோ | - | எல்லாவற்றையும் கொடுக்கின்ற ஹே பிரபுவே! |
| தைவாத்தத்ரைவ (தத்ரஏவ) | - | பாக்கியவசத்தால் அக்கலியிலேயே |
| ஜாதான் அஸ்மான் | - | பிறந்த எங்களை |
| விஷய விஷ ரஸை: | - | விஷயசுகங்களாகிற விஷரசங்களைக்கொண்டு |
| மா வஞ்சய | - | வஞ்சிக்காதீர். |

भक्तास्तावत्कलौ स्युर्द्रमिळभुवि ततो भूरिशस्तत्र चोच्चैः
कावेरीं ताम्रपर्णीमनु किल कृतमालाञ्च पुण्यां प्रतीचीम् ।
हा मामप्येतदन्तर्भवमपि च विभो किञ्चिदञ्चिद्रसं त्व
य्याशापाशैर्निबध्य भ्रमय न भगवन् पूरय त्वन्निषेवाम् ॥७॥

பக்தாஸ்தாவத்கலௌ ஸ்யுர் த்ரமிலபுவி
ததோ பூரிஶஸ்தத்ர சோச்சை:
காவேரீம் தாம்ரபர்ணீமனு கில க்ருத
மாலாஞ்ச புண்யாம் ப்ரதீசீம் ।
ஹா மாமப்யேததந்தர்பவமபி ச
விபோ கிஞ்சிதஞ்சத் ரஸம் த்வய்-
யாஶாபாஶைர் நிபத்ய ப்ரமய ந
பகவன் பூரய த்வந் நிஷேவாம் ॥ 7 ॥

| | | |
|---|---|---|
| கலௌ பக்தா: தாவத் ஸ்யு: | - | கலியுகத்தில் பக்தர்கள் அதிகமாக இருப்பார்கள். |
| தத: பூரிஶ: த்ரமிள புவி | - | அதிலும் அதிகமாக திராவிடதேசத்தில் இருப்பார்கள். |
| தத்ர ச | - | அந்த திராவிடதேசத்திலும், |
| புண்யாம் காவேரீம் | - | மிகப் புண்ணியமான காவேரிக்கரையிலும், |
| தாம்ர பர்ணீம் க்ருதமாலாம் | - | தாம்ரபர்ணி, வைகையாற்றிலும் |
| ப்ரதீசீம் அநு | - | மேற்கு திக்கை நோக்கி ஓடுகின்ற நதிக்கரையிலும் |
| உச்சை: கில | - | மிக அதிகமாக இருக்கின்றனரல்லவா. |
| விபோ ஏத தந்தர்பவம் | - | ஹே பிரபுவே! இவற்றுள் பிறந்தவனும், |
| அபி ச | - | என்றுமட்டுமல்ல |
| த்வயி கிஞ்சிதஞ்சத் ரஸம் | - | தங்களிடத்தில் சிறிதளவுண்டான பக்தியுடையவனுமான |
| மாம் அபி ஆஶாபாஶை: | - | என்னையும் ஆசையாகிற கயிறுகளால் |
| நிபத்ய ஹா ந ப்ரமய | - | இறுகக் கட்டி ஐயோ! சுழற்றக்கூடாது. |
| பகவன் | - | ஹே கிருஷ்ணா! |
| த்வந்நிஷேவாம் பூரய | - | தங்களிடமுண்டான பக்தியை பூர்த்தி செய்வீராக. |

दृष्ट्वा धर्मद्रुहं तं कलिमपकरुणं प्राङ्महीक्षित्परीक्षि
द्धन्तुं व्याकृष्टखड्गोऽपि न विनिहतवान् सारवेदी गुणांशात् ।
त्वत्सेवाद्याशु सिध्येदसदिह न तथा त्वत्परे चैष भीरु
र्यत्तु प्रागेव रोगादिभिरपहरते तत्र हा शिक्षयैनम् ॥ ८ ॥

த்ருஷ்ட்வா தர்மத்ருஹம் தம் கலிமப-
கருணம் ப்ராங்மஹீக்ஷித் பரீக்ஷித்
ஹந்தும் வ்யாக்ருஷ்ட கட்கோ'பி ந
விநிஹதவான் ஸாரவேதீ குணாம்ஶாத் ।
த்வத் ஸேவாத்யாஶு ஸித்த்யேதஸதிஹ
ந ததா த்வத்பரே சைஷ பீருர்-
யத்துப்ராகேவ ரோகாதிபிரபஹரதே
தத்ர ஹா ஶிக்ஷயைனம் ॥ 8 ॥

ப்ராக் பரீக்ஷித் மஹீக்ஷித் - முன்னொரு காலத்தில் பரீக்ஷித் என்ற அரசன்
அபகருணம் தர்ம த்ருஹம் - கருணையற்று விருஷப ரூபியாக தர்மத்தை துரோகிக்கின்ற
தம் கலிம் த்ருஷ்ட்வா ஹந்தும் - அந்தக் கலியைக் கண்டு கொல்ல
வ்யாக்ருஷ்ட கட்கோ'பி - உருவிய வாளையுடையவனாக இருந்துங்கூட
ஸாரவேதீ - சாரத்தையறிந்தவனாக
குணாம்ஶாத் ந விநிஹதவான் - அவனிடத்தில் குணாம்சமிருப்பதால் கொல்லவில்லை
இஹ த்வத்ஸேவாதி - இக்கலியுகத்தில் தங்களுடைய சேவை முதலானது
ஆஶு ஸித்தயேத் - விரைவாகப் பலனைக் கொடுக்கும்
அஸத் ததா ந - பாபம் அவ்விதம் பலனை விரைவாகக் கொடுப்பதில்லை.
ஏஷ: த்வத்பரே - இக்கலிபுருஷன் தங்கள் பக்தனிடம்
பீரு: ச - பயந்தவனாகவும் ஆகிறான்.
ப்ராக் ஏவ ரோகாதிபி: - தங்களை பஜிப்பதற்கு முந்தியே ரோகம் முதலியவற்றால்
அபஹரதே யத் - தங்கள் பக்தர்களைத் தடுக்கிறான் என்று யாதொன்றுண்டோ
ஹா தத்ர து - ஹா கஷ்டம்! அது விஷயத்தில் மட்டும்
ஏனம் ஶிக்ஷய - இந்தக் கலியை தண்டிப்பீராக.

गङ्गा गीता च गायत्र्यपि च तुळसिका गोपिकाचन्दनं तत्
साळग्रामाभिपूजा परपुरुष तथैकादशी नामवर्णाः ।
एतान्यष्टाप्ययत्नान्ययि कलिसमये त्वत्प्रसादप्रवृद्धया
क्षिप्रं मुक्तिप्रदानीत्यभिदधुर्ऋषयस्तेषु मां सज्जयेथाः ॥ ९ ॥

கங்கா கீதா ச காயத்ர்யபி ச
துலஸிகா கோபிகா சந்தனம் தத்
ஸாலக்ராமாபி பூஜா பரபுருஷ
ததைகாதஶீ நாமவர்ணா: ।
ஏதான்யஷ்டாப்யயத்னான்யயி
கலி ஸமயே த்வத் ப்ரஸாத ப்ரவ்ருத்த்யா
க்ஷிப்ரம் முக்திப்ரதானீத்ய பிதுர்-
ருஷயஸ் தேஷுமாம் ஸஜ்ஜயேதா: ॥ 9 ॥

| | |
|---|---|
| பரபுருஷா கங்கா கீதா ச - | ஹே பரமாத்மாவே! கங்கையும், கீதையும், |
| காயத்ரி அபி துளஸிகா ச - | காயத்திரியும், துளஸியும், |
| தத கோபிகா சந்தனம் - | பிரசித்திபெற்ற கோபீசந்தனமும், |
| ஸாளக்ராமாபி பூஜா - | சாளக்கிராம பூஜையும், |
| ததா ஏகாதஶீ - | அவ்விதமே ஏகாதசியும், |
| நாம வர்ணா: - | பகவந்நாமாக்ஷரங்களும் ஆகிய |
| ஏதானி அஷ்ட அபி - | இந்த எட்டுகளும் |
| கலிஸமயே அயத்நாநி - | கலிகாலத்தில் பிரயத்தினமின்றியே |
| த்வத் ப்ரஸாத ப்ரவ்ருத்த்யா - | தங்களுடைய பிரசாதத்தை விருத்தி செய்துகொடுப்பதாக |
| க்ஷிப்ரம் முக்தி ப்ரதானி இதி - | விரைவாக முக்தியைக் கொடுக்கின்றவைகள் என்று |
| ரிஷிய: அபி தது: - | மஹரிஷிகள் உபதேசித்திருக்கின்றனர். |
| அயி தேஷு - | ஹே ஈசா! அந்த எட்டுகளிலும் |
| மாம் ஸஜ்ஜயேதா: - | என்னை பற்றுள்ளவனாகச் செய்யவேண்டும். |

देवर्षीणां पितृणामपि न पुनर्ऋणी किङ्करो वा स भूमन्
योऽसौ सर्वात्मना त्वां शरणमुपगतः सर्वकृत्यानि हित्वा ।
तस्योत्पन्नं विकर्माप्यखिलमपनुदस्येव चित्तस्थितस्त्वं
तन्मे पापोत्थतापान्पवनपुरपते रुन्धि भक्तिं प्रणीयाः ॥ १० ॥

தேவர்ஷீணாம் பித்ருணாமபி ந புனர்-
ருணீ கிங்கரோ வா ஸ பூமன்
யோऽஸௌ ஸர்வாத்மனா த்வாம்
ஶரணமுபகத: ஸர்வக்ருத்யானி ஹித்வா ।
தஸ்யோத்பன்னம் விகர்மாண்யகில-
மபனுதஸ்யேவ சித்தஸ்த்திதஸ்த்வம்
தன்மே பாபோத்த தாபான் பவனபுரபதே ॥ 10 ॥
ருந்தி பக்திம் ப்ரணீயா:

| | | |
|---|---|---|
| பூமன் ய: அஸௌ | - | எங்கும் நிறைந்திருக்கும் ஹே ஈசா! எந்த் பக்தன் |
| ஸர்வ க்ருத்யானி ஹித்வா | - | எல்லா பிரவிருத்திகளையும் விட்டுவிட்டு |
| ஸர்வாத்மநா த்வாம் ஶரணம் உபகத: | - | முற்றிலும் தங்களையே சரணமடைந்தானோ |
| ஸ: புன: தேவர்ஷீணாம் | - | அவன் பிறகு தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும், |
| பித்ரூணாம் அபி ருணீ | - | பிதுருக்களுக்கும் கடங்காரனாகவோ |
| வா கிங்கர: ந | - | அல்லது கிங்கரனாகவோ ஆவதில்லை. |
| த்வம் சித்தஸ்தித: | - | தாங்கள் அவன் மனதிலிருந்துகொண்டு |
| தஸ்ய உத்பன்னம் | - | அவனுக்குண்டான |
| அகிலம் விகர்ம அபி | - | நிஷித்த கர்மத்தாலுண்டாகும் பாபமனைத்தையும் |
| அபநுதஸி ஏவ | - | நிச்சயமாக அகற்றுகின்றீர். |
| பவனபுரபதே தத் மே | - | ஹே குருவாயூரப்பா! ஆகையால் என்னுடைய |
| பாபோத்த தாபான் ருந்தி | - | பாபத்தாலுண்டாகும் தாபங்களை தடுக்கவேண்டும். |
| பக்திம் ப்ரணீயா: | - | பக்தியை உண்டுபண்ணவேண்டும். |

இதி ஸ்ரீமந் நாராயணீயே கர்மமிஶ்ர பக்தி ஸ்வரூப வர்ணனம் நாம த்விநவதிதமம் தஶகம்.

[ஆதித ஶ்லோக: 952] [ஏகாதசஸ்கந்தே ஶ்லோகா: 20]

# தஶகம் - 93

## இருபத்தைந்து குருக்களிடமிருந்து கற்க வேண்டியதை வர்ணிப்பது (பார்ப்பதெல்லாம் குரு)

बन्धुस्नेहं विजह्यां तव हि करुणया त्वय्युपावेशितात्मा
सर्वं त्यक्त्वा चरेयं सकलमपि जगद्वीक्ष्य मायाविलासम् ।
नानात्वाद्भ्रान्तिजन्यात्सति खलु गुणदोषावबोधे विधिर्वा
व्यासेधो वा कथं तौ त्वयि निहितमतेर्वीतवैषम्यबुद्धेः ॥१॥

பந்துஸ்நேஹம் விஜஹ்யாம் தவ ஹி
கருணயா த்வய்யுபாவேஶிதாத்மா
ஸர்வம் த்யக்த்வா சரேயம் ஸகலமபி
ஜகத்வீக்ஷ்ய மாயா விலாஸம் ।
நானாத்வாத் ப்ராந்தி ஜன்யாத் ஸதி கலு
குணதோஷாவ போதே விதிர்வா
வ்யாஸேதோ வா கதம் தௌத்வயி
நிஹித மதேர்வீத வைஷம்ய புத்தே: ॥1॥

| | |
|---|---|
| தவ கருணயா ஹி | - தங்களுடைய கருணையாலேயே |
| பந்து ஸ்னேஹம் விஜஹ்யாம் | - பந்துக்களிடத்திலிருக்கும் சினேகத்தை விடுவேனாக. |
| த்வயி உபாவேஶிதாத்மா | - தங்களிடத்தில் மனதைச் செலுத்தியவனாய் |
| ஸகலம் அபி ஜகத் | - உலகமனைத்தும் |
| மாயா விலாஸம் வீக்ஷ்ய | - மாயாகல்பிதமென்றறிந்து |
| ஸர்வம் த்யக்த்வா சரேயம் | - எல்லாத்தையுமுபேக்ஷித்து சஞ்சரிப்பேனாக |
| ப்ராந்தி ஜன்யாத் நாநாத்வாத் | - பிரமத்தினால் ஏற்பட்ட பேதத்தினால் |
| குணதோஷா வபோதே | - குணதோஷங்களுடைய ஞானம் |
| ஸதி கலு | - இருக்கும்பொழுதல்லவா |
| விதி: வா வ்யாஸேத: | - விதியாவது நிஷேதமாவது ஏற்படுகிறது, |
| த்வயி நிஹிதமதே: | - தங்களிடத்தில் மனதைச் செலுத்தியவனும் |
| வீத வைஷம்ய புத்தே: | - அதனால் வைஷம்யபுத்தியற்றவனுமான ஒருவனுக்கு |
| தௌ கதம் | - அவ்விதிநிஷேதங்கள் எங்ஙனம் உண்டாகும்? |

क्षुत्तृष्णालोपमात्रे सततकृतधियो जन्तवस्सन्त्यनन्ता
स्तेभ्यो विज्ञानवत्त्वात्पुरुष इह वरस्तज्जनिर्दुर्लभैव ।
तत्राप्यात्मात्मनः स्यात्सुहृदपि च रिपुर्यस्त्वयि न्यस्तचेता
स्तापोच्छित्तेरुपायं स्मरति स हि सुहृत्स्वात्मवैरी ततोऽन्यः ॥२॥

க்ஷுத் த்ருஷ்ணா-லோபமாத்ரே ஸததக்ருத-
தியோ ஜந்தவ: ஸந்த்யனந்தாஸ்-
தேப்யோ விஜ்ஞானவத்த்வாத் புருஷ
இஹ வரஸ்தஜ்ஜநிர் துர்லபைவ ।
தத்ராப்யாத்மாऽऽத்மன: ஸ்யாத்ஸுஹ்ருதபி
ச ரிபுர்யஸ்த்வயி ந்யஸ்தசேதாஸ்-
தாபோச்சித்தேருபாயம் ஸ்மரதி ஸ ஹி
ஸுஹ்ருத் ஸ்வாத்மவைரீ ததோன்ய: ॥2॥

| | | |
|---|---|---|
| க்ஷுத்த்ருஷ்ணா லோபமாத்ரே | - | பசிதாகங்களைத் தீர்த்துக்கொள்ளுவதில் மட்டும் |
| ஸதத க்ருத திய: ஜந்தவ | - | எப்பொழுதும் மனதைச்செலுத்(தும்)தின பிராணிகள் |
| அனந்த: ஸந்தி | - | கணக்கில்லாமல் இருக்கின்றன. |
| இஹ விக்ஞானவத்வாத் | - | இவ்வுலகில் பகுத்தறிவுள்ளவனாக இருப்பதால் |
| புருஷ: தேப்ய: வர: | - | மனிதன் அவைகளைவிட சிரேஷ்டன். |
| தஜ்ஜனி: துர்லபா ஏவ | - | அந்த மனிதஜன்மம் கிடைப்பதரிதே. |
| தத்ர அபி ஆத்மா | - | அம்மனிதப் பிறப்பிலும் ஆத்மாவே (தானே) |
| ஆத்மன: ஸுஹ்ருத் அபி | - | ஆத்மாவுக்கு (தனக்கு) பந்துவாகவும் |
| ரிபு: ச ஸ்யாத் | - | சத்துருவாகவும் பவிப்பன். |
| ய: த்வயி ந்யஸ்த சேதா: | - | எந்த ஆத்மா. தங்களிடம் மனதைச் செலுத்தியவனாய் |
| தாபோச்சித்தே உபாயம் | - | தாப நிவிருத்திக்கான உபாயத்தை |
| ஸ்மரதி ஸ: ஹி ஸுஹ்ருத் | - | ஆலோசிக்கின்றானோ அவன்தான் பந்து. |
| தத: அன்ய: | - | அவனைத்தவிர மற்றவன் |
| ஸ்வாத்மவைரீ | - | தனது ஆத்மாவிற்கு சத்துருவே. |

त्वत्कारुण्ये प्रवृत्ते क इव न हि गुरुर्लोकवृत्तेऽपि भूमन्
सर्वाक्रान्ताऽपि भूमिर्न हि चलति ततः सत्क्षमां शिक्षयेयम् ।
गृह्णीयामीश तत्तद्विषयपरिचतेऽप्यप्रसक्तिं समीरा
द्व्याप्तत्वञ्चात्मनो मे गगनगुरुवशाद्भातु निर्लेपता च ॥३॥

த்வத் காருண்யே ப்ருவ்ருத்தே க இவ ந
ஹி குருர்லோகவ்ருத்தேऽபி பூமன்
ஸர்வாக்ராந்தாऽபி பூமிர்ந ஹி சலதி தத:
ஸத்க்ஷமாம் ஶிக்ஷயேயம் ।
க்ருஹ்ணீயாமீஶ தத் தத்விஷய பரிசதே-
ऽப்யப்ரஸக்திம் ஸமீராத்
வ்யாப்தத்வஞ்சாத்மனோ மே ககனகுரு-
வஶாத்பாது நிர்லேபதா ச ॥3॥

| | | |
|---|---|---|
| விபூமன் த்வத் காருண்யே | - | ஹே பரமாத்மாவே! தங்கள் கருணை |
| ப்ரவ்ருத்தே லோக வ்ருத்தே | - | ஏற்பட்டதேயானால் உலகநடத்தையில் |
| க: இவ குரு: ந ஹி | - | யார்தான் குருவாக ஆகமாட்டார்கள். |
| பூமி: ஸர்வாக்ராந்த: அபி | - | பூமியானது எல்லோராலும் எல்லா -வற்றாலும் ஆக்கிரமிக்கப்பட்டிருந்தும் |
| ந சலதி ஹி | - | சலிக்கின்றதில்லையல்லவா. |
| தத: ஸத்க்ஷமாம் | - | அந்த பூமியிடமிருந்து நல்ல பொறுமையை |
| ஶிக்ஷயேயம் | - | நான் கற்றுக்கொள்ளுவேனாக. |
| ஈஶ | - | ஹே ஈசா! |
| தத்தத் விஷய பரிசயே அபி | - | அந்தந்த விஷயங்களுடன் சம்பந்த மேற்பட்டபோதிலும் |
| அப்ரஶக்திம் | - | அவையில் பற்றுதலில்லாமையை |
| ஸமீராத் க்ரஹணீயாம் | - | வாயுவிடமிருந்து கிரஹிப்பேனாக. |
| ஆத்மன: வ்யாப்தத்வம் ச | | ஆத்மாவின் எங்கும் நிறைந்திருக்கும் தன்மையும் |
| நிர்லேபதா ச | - | ஒன்றிலும் பற்றுதலில்லாமையும், |
| ககனகுருவஶாத் | - | ஆகாயமாகிற குருவிடமிருந்து |
| மே பாது | - | எனக்கு விளங்கட்டும். |

स्वच्छः स्यां पावनोऽहं मधुर उदकवद्वह्निवन्मा स्म गृह्णां
सर्वान्नीनोऽपि दोषं तरुषु तमिव मां सर्वभूतेष्ववेयाम् ।
पुष्टिर्नष्टिः कलानां शशिन इव तनोर्नात्मनोऽस्तीति विद्यां
तोयादिव्यस्तमार्ताण्डवदपि च तनुष्वेकतां त्वत्प्रसादात् ॥ ४ ॥

ஸ்வச்ச: ஸ்யாம் பாவனோ஽ஹம் மதுர
உதகவத்வஹ்னிவன் மாஸ்ம க்ருஹ்ணாம்
ஸர்வான்னீனோ஽பி தோஷம் தருஷு தமிவ
மாம் ஸர்வ பூதேஷ்வவேயாம் ।
புஷ்டிர் நஷ்டி: கலானாம் ஶஶின இவ
தனோர்நாத்மனோ஽ஸ்தீதி வித்யாம்
தோயாதி வ்யஸ்த-மார்த்தாண்டவதபி ச ॥4॥
தனுஷ்வேகதாம் த்வத் ப்ரஸாதாத்

| | | |
|---|---|---|
| அஹம் உதகவத் ஸ்வச்ச: | - | நான் ஜலம் போல தெளிந்தவனாகவும் (நிர்மலனாகவும்) |
| பாவன: | - | பாபசோதனஞ்செய்பவனாகவும் |
| மதுர: ஸ்யாம் | - | இனிப்பானவனாகவும் பவிப்பேனாக. |
| வன்ஹிவத் ஸர்வான் நீந: அபி | - | அக்னிபோல எல்லா அன்னங்களையும் பக்ஷிப்பவனாக |

| | |
|---|---|
| தோஷம் மா ஸ்ம க்ருஹ்ணாம் | - தோஷத்தை கிரஹிப்பாதிருப்பேனாக. இருந்தாலும் |
| தருஷு தம் இவ | - மரக்கட்டைகளில் அந்த அக்கினியைப் போலவே |
| மாம் | - என்னை (ஆத்மாவை) |
| ஸர்வ பூதேஷு அவேயாம் | - ஸமஸ்த சரீரங்களிலும் இருப்பதாக அறிவேனாக. |
| ஶஶின: கலானாம் | - சந்திரனுடைய கலைகளுக்கே |
| புஷ்டி: நஷ்டி: இவ | - வளர்ச்சியும், நாசமும் என்பதுபோல |
| தனோ: | - விருத்திக்ஷயங்கள் சரீரத்திற்கே, |
| ஆத்மன: ந அஸ்தி இதி | - ஆத்மாவுக்கில்லை என்பதையும் |
| தோயா திவ்யஸ்த மார்தாண்டவத் அபி | - ஜலம் முதலியவற்றில் வெவ்வேறாகத் தோன்றும் சூரியன் போலவும் |
| தனுஷு ஏகதாம் ச | - சரீரங்களில் ஆத்மா ஒன்றென்பதையும் |
| த்வத் ப்ரஸாதாத் வித்யாம் | - தங்கள் அருளால் நான் அறிவேனாக. |

स्नेहाद्व्याधास्तपुत्रप्रणयमृतकपोतायितो मा स्म भूवं
प्राप्तं प्राश्नन्सहेय क्षुधमपि शयुवत्सिन्धुवत्स्यामगाधः ।
मा पप्तं योषिदादौ शिखिनि शलभवद्भृङ्गवत्सारभागी
भूयासं किन्तु तद्वद्धनचयनवशान्माहमीश प्रणेशम् ॥ ५ ॥

ஸ்நேஹாத் வ்யாதாஸ்த புத்ர வ்யஸன-
ம்ருத கபோதாயிதோ மாஸ்ம பூவம்
ப்ராப்தம் ப்ராஶ்னன் ஸஹேய க்ஷுதமபி
ஶயுவத் ஸிந்துவத் ஸ்யாமகாத: ।
மா பப்தம் யோஷிதாதௌ ஶிகினி
ஶலபவத் ப்ருங்கவத் ஸாரபாகீ
பூயாஸம் கிந்து தத்வத் தன சயன
வஶான் மாஹமீஶ ப்ரணேஶம் ॥ 5 ॥

| | |
|---|---|
| ஸ்நேஹாத் | - சினேகம் காரணமாக |
| வ்யாதாஸ்த புத்ர | - வேடனால் கொல்லப்பட்ட புத்திரர்களின் |
| வ்யஸன ம்ருதகபோதாயித: | வருத்தத்தால் இறந்த மாடப்புறாபோல |
| மாஸ்ம பூவம் | - ஆகாதிருப்பேனாக. |
| ஶயுவத் | - மலைப்பாம்புபோல |
| ப்ராப்தம் ப்ராஶ்னன் | - (தற்செயலாக) கிடைத்ததை உட்கொண்டு |
| க்ஷுதம் ஸஹேய அபி | - பசியை பொறுத்துக்கொள்ளுவேனாக. |
| ஸிந்துவத் அகாத: ஸ்யாம் | - சமுத்திரம்போல கம்பீரனாக பவிப்பேனாக |
| ஶிகினி ஶலபவத் | - தீயில் வெட்டுக்கிளி விழுவதுபோல |
| யோஷிதாதௌ மாபப்தம் | - ஸ்திரீ முதலியவற்றில் விழாதிருப்பேனாக. |

ப்ருங்கவத் - வண்டுபோல
ஸாரபாகீ பூயாஸம் - சாராம்சத்தை கிரஹிப்பவனாக பவிப்பேனாக
கிந்து தத்வத் - ஆனால் அவ்வண்டுபோல
அஹம் தன சயன வஶாத் - நான் பணத்தை சம்பாதிக்க ஈடுபட்டதால்
ஈஶ மா ப்ரணேஶம் - ஹே ஈசா! நாசமடையாதிருப்பேனாக.

मा बध्यासं तरुण्या गज इव वशया नार्जयेयं धनौघं
हर्तान्यस्तं हि माध्वीहर इव मृगवन्मा गुहं ग्राम्यगीतैः ।
नात्यासज्जेय भोज्ये झष इव बिळिशे पिङ्गलावन्निराशः
सुप्यां भर्तव्ययोगात्कुरर इव विभो सामिषोऽन्यैर्न हन्यै ॥ ६ ॥

மா பத்யாஸம் தருண்யா கஜ இவ
வஶயா நார்ஜயேயம் தநௌகம்
ஹர்தா஽ன்யஸ்தம் ஹி மாத்வீ ஹர
இவ ம்ருகவன் மா குஹம் க்ராம்ய கீதை: ।
நாத்யாஸஜ்ஜேய போஜ்யே ஜஷ
இவ படிஶே பிங்களாவந்நிராஶ:
ஸுப்யாம் பர்தவ்ய யோகாத் குரர இவ விபோ
ஸாமிஷோ஽ன்யைர் ந ஹன்யை ॥6॥

வஶயா கஜ: இவ - பெண்யானையால் ஆண்யானைபோல்
தருண்யா மா பத்யாஸம் - ஸ்திரீகாரணமாகபந்தத்தையடையாதிருப்பேனாக.
தநௌகம் ந ஆர்ஜயேயம் - ஏனென்றால் தேனெடுப்பவன் (தேனீ சேர்த்துவைத்த தேனையெடுப்பது) போல
அன்ய: தம் ஹர்தா - வேறொருவன் அதையபஹரிப்பான்.
ம்ருகவத் க்ராம்ய கீதை: - மான்போல ஆபாஸமான பாட்டுக்களால்
மா குஹம் - மயங்காதிருப்பேனாக.
படிஶே ஜஷ: இவ - தூண்டிலில் மீன்போல
போஜ்யே ந அத்யாஸஜ்ஜேய - ஆஹாரத்தில் அதிகப்பற்றடையாது இருப்பேனாக.
பிங்களாவத் - பிங்களையென்ற வேசியைபோல
நிராஶ: ஸுப்யாம் - ஆசையற்றவனாக தூங்குவேனாக.
விபோ ஸாமிஷ: - ஹே பிரபுவே! மாமிசத்துடன் கூடின
குரர: இவ - குரரம் என்ற பறவைபோல
பர்தவ்ய யோகாத் அன்யை: - என்னால் காப்பாற்றப்படவேண்டிய பொருளில் சேர்க்கையால் மற்றவர்களால்
ந ஹன்யை: - துன்புறுத்தப்படாதிருப்பேனாக.

वर्तेय त्यक्तमानः सुखमतिशिशुवन्निस्सहायश्चरेयं
कन्याया एकशेषो वलय इव विभो वर्जितान्योन्यघोषः ।
त्वच्चित्तो नावबुध्यै परमिषुकृदिव क्ष्माभृदायानघोषं
गेहेष्वन्यप्रणीतेष्वहिरिव निवसान्युन्दुरोर्मन्दिरेषु ॥ ७ ॥

வர்தேய த்யக்தமான: ஸுகமதி
ஶிஶுவந் நிஸ்ஸஹாயஶ்சரேயம்
கன்யாயா ஏகஶேஷோ வலய இவ
விபோ வர்ஜிதான்யோன்யகோஷ ।
த்வச்சித்தோ நாவபுத்யை பரமிஷுக்ருதிவ
க்ஷ்மாப்ருதாயான கோஷம்:
கேஹேஷ்வன்ய ப்ரணீதேஷ்வஹிரிவ
நிவாஸான் யுந்துரோர் மந்திரேஷு ॥7॥

| | | |
|---|---|---|
| அதி ஶிஶுவத் | - | சிறு குழந்தைபோல |
| த்யக்தமான: ஸுகம் வர்தேய | - | அபிமானத்தை விட்டவனாக சுகமாக இருப்பேனாக. |
| விபோ கன்யாயா: | - | ஹே பிரபுவே! கன்னிகையின் |
| ஏகஶேஷ: வலய: | - | ஒன்றுமட்டும் பாக்கியான வளையல்போல |
| நிஸ் ஸஹாய: | - | சஹாயமற்றவனாகவும், |
| வர்ஜிதான்யோன்ய கோஷ: | - | ஒன்றுக்கொன்று வீண் விவாதத்தை விட்டவனாகவும் |
| சரேயம் | - | நான் சஞ்சரிப்பேனாக. |
| மிஷுக்ருத் | - | பாணத்தையுண்டுபண்ணும் கருமான் |
| க்ஷ்மாப்ருதாயான கோஷம் இவ | - | அரசன் வரும்போதுண்டாகும் சத்தத்தை யறியாததுபோல |
| த்வச்சித்த: | - | தங்களிடம் மனதைச்செலுத்தியவனாக நான் |
| பரம் ந அவபுத்யை | - | மற்றொன்றையும் அறியாதிருப்பேனாக. |
| உந்துரோ: மந்திரேஷு அஹி இவ் | | எலியின் வளைகளில் பாம்பு வசிப்பதுபோல |
| அன்ய ப்ரணீதேஷு | - | பிறரால் உண்டுபண்ணப்பட்ட |
| கேஹேஷு நிவஸாமி | - | வீடுகளில் நான் வசிப்பேனாக. |

त्वय्येव त्वत्कृतं त्वं क्षपयसि जगदित्यूर्णनाभात्प्रतीयां
त्वच्चिन्ता त्वत्स्वरूपं कुरुत इति दृढं शिक्षये पेशकारात् ।
विड्भस्मात्मा च देहि भवति गुरुवरो यो विवेकं विरक्तिं
धत्ते सञ्चिन्त्यमानो मम तु बहुरुजापीडितोऽयं विशेषात् ॥८॥

த்வய்யேவ த்வத்க்ருதம் த்வம் க்ஷபயஸி
ஜகதித்யூர்ண நாபாத் ப்ரதீயாம்
த்வச்சிந்தா த்வத்ஸ்வரூபம் குருத இதி
த்ருடம் சிக்ஷயே பேஶகாராத் ।
விட்பஸ்மாத்மா ச தேஹோ பவதி
குருவரோ யோ விவேகம் விரக்திம்
தத்தே ஸஞ்சிந்த்யமானோ மம து
பஹுருஜா பீடிதோ஽யம் விஶேஷாத் ॥8॥

| | | |
|---|---|---|
| த்வம் த்வத் க்ருதம் | - | தாங்கள் தங்களால் சிருஷ்டிக்கப்பட்ட |
| ஜகத் த்வயி ஏவ | - | உலகத்தை தங்களிடத்திலேயே |
| க்ஷபயஸி இதி | - | லயிக்கச் செய்கின்றீர் என்பதை |
| ஊர்ண நாபாத் ப்ரதீயாம் | - | சிலம்புப்பூச்சியிடமிருந்து அறிவேனாக. |
| த்வச்சிந்தாத்வத் ஸ்வரூபம் | - | தங்கள் தியாநமானது தங்கள் ஸ்வரூபத்தை |
| குருதே இதி | - | உண்டுபண்ணுகிறது என்று |
| பேஶகாராத் த்ருடம் ஶிக்ஷயே | - | குளவி என்ற வண்டிடமிருந்து திடமாக கற்பேனாக. |
| விட்பஸ்மாத்மா | - | மலமாகவாவது சாம்பலாகவாவது ஆகும் தன்மைவாய்ந்த |
| தேஹஶ்ச குருவர: பவதி | - | இந்த சரீரமும் சிறந்த குருவாக ஆகிறது. |
| ய: ஸஞ்சிந்த்யமான: | - | அந்த சரீரம் நன்கு ஆலோசிக்கப்படுகின்றதாய் |
| விவேகம் விரக்திம் தத்தே | - | விவேகத்தையும் விரக்தியையும் உண்டு பண்ணுகிறது. |
| மம அயம் து | - | என்னுடைய இந்த தேஹமோ |
| பஹுருஜா பீடித: | - | பல் வியாதிகளால் பீடிக்கப்பட்டதாய் |
| விஶேஷாத் | - | விசேஷமாக விவேகத்தையும் வைராக்கியத்தையும் உண்டுபண்ணுகிறது. |

ह्री ह्री मे देहमोहं त्यज पवनपुराधीश यत्प्रेमहेतो
र्गेहे चित्ते कळत्रादिषु च विवशितास्त्वत्पदं विस्मरन्ति ।
सोऽयं वह्नेः शुनो वा परमिह परतः साम्प्रतञ्चाक्षिकर्ण
त्वग्जिह्वाद्या विकर्षन्त्यवशमत इतः कोऽपि न त्वत्पदाब्जे ॥९॥

ஹ்ரீ ஹ்ரீ மே தேஹமோஹம் த்யஜ
பவனபுராதீஶ யத்ப்ரேம ஹேதோர்
கேஹே வித்தே கலத்ராதிஷு ச
விவஶிதாஸ் த்வத்பதம் விஸ்மரந்தி ।
ஸோ஽யம் வஹ்னே: ஶுனோ வா
பரமிஹ பரத: ஸாம்ப்ரதஞ் சாக்ஷிகர்ண
த்வக்ஜிஹ்வாத்யா விகர்ஷந்த்யவஶ-
மத இத: கோ஽பி ந த்வத்பதாப்ஜே ॥9॥

| | | |
|---|---|---|
| பவன புராதீஶ ஹ்ரிஹி | - | ஹே குருவாயூரப்பா! ஆச்சரியமாச்சரியம்!! |
| மே தேஹ மோஹம் | - | என்னுடைய சரீரத்திலிருக்கும் மோஹத்தை |
| த்யஜ | - | போக்கடிப்பீராக. |
| யத் ப்ரேம ஹேதோ: | - | எந்த சரீரத்திலிருக்கும் பிரேமை காரணமாக |
| கேஹே வித்தே களத்ராதிஷு ச | - | வீட்டிலும், பணத்திலும், பத்தினி முதலியவர்களிடத்திலும் |
| விவஶிதா: | - | பரவசமாக்கப்பட்டவர்களாக |
| த்வத்பதம் விஸ்மரந்தி | - | தங்கள் திருவடியை மறக்கின்றனரோ |

| | | |
|---|---|---|
| ஸ: அயம் இஹ பரத: பரம் | - | அந்த சரீரமானது இவ்வுலகில் இறந்தபிறகு |
| வன்ஹே ஶ்வான: வா | - | அக்கினிக்காவது நாய்க்காவது அதீனமாகிறது. |
| ஸாம் ப்ரதம் ச அவஶம் | - | உயிருடனிருக்கும்பொழுது தன்வசமற்ற இந்த சரீரத்தை |
| அக்ஷி கர்ணத்வக் ஜிஹ்வாத்யா: | - | கண், காது, தோல், நாக்கு முதலியவைகள் |
| அத: இத: விகர்ஷந்தி | - | அங்குமிங்கும் இழுக்கின்றன. |
| கோऽபி த்வத் பதாப்ஜே ந | - | ஒன்றாவது தங்கள் பாதாரவிந்தத்திற்கு இழுப்பதில்லை. |

दुर्वारो देहमोहो यदि पुनरधुना तर्हि निश्शेषरोगान्
हृत्वा भक्तिं द्रढिष्ठां कुरु तव पदपङ्केरुहे पङ्कजाक्ष ।
नूनं नानाभवान्ते समधिगतमिमं मुक्तिदं विप्रदेहं
क्षुद्रे हा हन्त मा मा क्षिप विषयरसे पाहि मां मारुतेश ॥१०॥

துர்வாரோ தேஹமோஹோ யதி
புனரதுனா தர்ஹி நிஶ்ஶேஷ ரோகான்
ஹ்ருத்வா பக்திம் த்ரடிஷ்டாம் குரு
தவ பதபங்கேருஹே பங்கஜாக்ஷ ।
நூனம் நானாபவாந்தே ஸமதிகத-
மிமம் முக்திதம் விப்ரதேஹம்
க்ஷுத்ரே ஹா ஹந்த மா மா க்ஷிப
விஷயரஸே பாஹிமாம் மாருதேஶ ॥ 10 ॥

| | | |
|---|---|---|
| பங்கஜாக்ஷ | - | ஹே தாமரைக்கண்ணா! |
| தேஹ மோஹ: | - | சரீரத்திலிருக்கும் மோஹமானது |
| யதி துர்வார்: தர்ஹி | - | தடுக்கமுடியாததாக பவிக்குமேயானால் |
| அதுநா புன: | - | இந்த ஜன்மத்திலேயே |
| நிஶ்ஶேஷ ரோகாத் ஹ்ருத்வா | - | ஸமஸ்த ரோகங்களையும் போக்கடித்து |
| தவ பத பங்கேருஹே | - | தங்களுடைய பாதாரவிந்தத்தில் |
| த்ரடிஷ்டாம் பக்திம் குரு | - | திடமானபக்தியை உண்டுபண்ணவேண்டும். |
| நூநம் நாநா பவாந்தே | - | நிச்சயமாக அனேக ஜன்மங்களின் முடிவில் |
| ஸமதி கதம் | - | நன்கடையப்பட்டதும் |
| முக்தி தம் | - | மோக்ஷத்தைக் கொடுப்பதுமான |
| இமம் விப்ரதேஹம் க்ஷுத்ரே | - | இந்தப்பிராமண சரீரத்தை துச்சமான |
| விஷயரஸே | - | விஷயசுகத்தில் |
| ஹா ஹந்த மா க்ஷிப மா | - | ஹாகஷ்டம்! தள்ளவேண்டாம்; தள்ளவேண்டாம். |
| மாருதேஶ மாம் பாஹி | - | ஹே குருவாயூரப்பா! என்னைக் காப்பாற்றுவீராக. |

இதி ஸ்ரீமந் நாராயணீயே பஞ்சவிம் ஶதோ குரும்ய ஶிக்ஷணீயஸ்ய வர்ணனம் நாம த்ரிநவதிதமம் தஶகம் ஸமாப்தம்.

[ஆதித ஶ்லோக: 962] [ஏகாதசஸ்கந்தே ஶ்லோகா: 30]

# தமுகம் - 94

## தத்வ ஞானமும் பக்தியும்

शुद्धा निष्कामधर्मैः प्रवरगुरुगिरा तत्स्वरूपं परं ते
शुद्धं देहेन्द्रियादिव्यपगतमखिलव्याप्तमावेदयन्ते।
नानात्वस्थौल्यकार्श्यादि तु गुणजवपुस्सङ्गतोऽध्यासितं ते
वह्नेर्दारुप्रभेदेष्विव महदणुतादीप्तताशान्ततादि ॥१॥

ஶுத்தா நிஷ்காமதர்மை: ப்ரவர
குருகிரா தத்ஸ்வரூபம் பரம் தே
ஶுத்தம் தேஹேந்த்ரியாதி வ்யபகத-
மகில வ்யாப்த மாவேதயந்தே।
நானாத்வ ஸ்த்தௌல்ய கார்ஶ்யாதி து
குணஜ வபு: ஸங்கதோऽத்த்யாஸிதம் தே
வஹ்னேர் தாருப்ரபேதேஷ்விவ மஹ-
தணுதா தீப்ததா ஶாந்ததாதி ॥1॥

| | | |
|---|---|---|
| நிஷ்காம தர்மை: | - | பலகாமனையன்றி (பயனை விரும்பாது) அனுஷ்டிக்கப்பட்ட தர்மங்களால் |
| ஶுத்தா: | - | சுத்தமான அந்தக்கரணத்தை உடையவர்கள் |
| ப்ரவரகுருகிரா | - | சிரேஷ்டனான குருவின் உபதேசத்தால் |
| தேஹேந்த்ரி யாதிவ்ய பகதம் ஶுத்தம் | - | தேகம், இந்திரியங்கள் இவைகளைக் காட்டிலும் வேறானதும், மாயை, தத்காரியம் இவைகளுடைய ஸம்பந்தமில்லாததும், |
| பரம் | - | பரப்பிரம்மமென்று பெயருடையதும், |
| அகில வ்யாப்தம் தே | - | எங்கும் நிறைந்துள்ளதுமான தங்களுடைய |
| தத்ஸ்வரூபம் ஆவேதயந்தே | - | அந்த நிஷ்களங்கத்தை அறிகின்றனர். |
| தே | - | ஆத்மாவான தங்களுடைய |
| நாநாத்வஸ்தௌல்ய கார்ஶ்யாதி து | - | பலவாறாக இருப்பது, ஸ்தூலமாக இருப்பது, இளைத்திருப்பது முதலானதோ என்றால் |
| தாரு ப்ரபேதேஷு வன்ஹே: | - | பலவகையான விறகுகளில் இருக்கும் அக்னியினுடைய |
| மஹதணுதா தீப்ததா ஶாந்ததாதி இவ | - | மஹத்தாயிருப்பது, சிறிதாயிருப்பது, பிரகாசிப்பது, சாந்தமாயிருப்பது, முதலியது போல |

குணஜவபு: ஸங்கத: - குணகாரியங்களான சரீரங்களுடைய ஸம்பந்தத்தால்
அத்யாஸிதம் - ஆரோபணஞ் செய்யப்பட்டதே.

आचार्याख्याधरस्थारणिसमनुमिलच्छिष्यरूपोत्तरार-
ण्यावेधोद्भासितेन स्फुटतरपरिबोधाग्निना दह्यमाने ।
कर्मालीवासनातत्कृततनुभुवनभ्रान्तिकान्तारपूरे
दाह्याभावेन विद्याशिखिनि च विरते त्वन्मयी खल्ववस्था ॥ २ ॥

ஆசார்யாக்யாதர ஸ்த்தாரணி ஸமனுமிலச்
சிஷ்ய ரூபோத்தராரண்-
யாவேதோத்பாஸிதேன ஸ்ப்புடதர
பரிபோதாக்னினா தஹ்யமானே ।
கர்மாலீவாஸனா தத்க்ருத தனுபுவன-
ப்ராந்தி காந்தாரபூரே
தாஹ்யாபாவேன வித்யாஶிகினி ச
விரதே த்வன்மயீ கல்வவஸ்த்தா ॥ 2 ॥

ஆசார்யாக்யா தரஸதாரணி ஸமனுமிலச் சிஷ்ய ரூபோத் தராரண்யா வேதோத் பாஸிதேன - ஆசாரியன் என்று பெயருடைய அதராரணியுடன் சேர்ந்த சிஷ்யனாகிற உத்தராரணியுடனுள்ள சம்பந்தத்தால் பிரகாசித்த
ஸ்புடதரபரி போதாக்நிநா - மிகத் தெளிவான ஞானமாகிற அக்னியினால்
கர்மாலீவாஸநா தத்க்ருததனு புவன ப்ராந்தி காந்தாரபூரே - கர்மசமூகமென்ன, அதன் வாசனையென்ன இவைகளால் செய்யப்பட்ட சரீரம், லோகம் பிரமமாகிற வனம் முழுவதும்
தஹ்யமானே - எரிக்கப்படும்பொழுது
தாஹ்யாபாவேன - எரிக்கப்படவேண்டிய வஸ்துவில்லாததால்
வித்யாஶிகினிசவிரதே - ஞானாக்கினியும் ஓய்ந்தபொழுது
அவஸ்தா - இருக்கும் அவஸ்தை
த்வன்மயீ கலு - தங்கள் ரூபமாகவன்றோ ஆகிறது.

एवं त्वत्प्राप्तितोऽन्यो नहि खलु निखिलक्लेशहानेरुपायो
नैकान्तात्यन्तिकास्ते कृषिवदगदषाड्गुण्यषट्कर्मयोगाः ।
दुर्वैकल्यैरकल्या अपि निगमपथास्तत्फलान्यप्यवाप्ता
मत्तास्त्वां विस्मरन्तः प्रसजति पतने यान्त्यनन्तान्विषादान् ॥ ३ ॥

ஏவம் த்வத் ப்ராப்திதோऽன்யோ ந ஹி கலு
நிகில க்லேஶ ஹானேருபாயோ
நைகாந்தாத்யந்திகாஸ்தே க்ருஷிவதகத-
ஷாட்குண்ய ஷட்கர்மயோகா: ।

**துர்வைகல்யை ரகல்யா அபி நிகம**
**பதாஸ்தத் பலான்யப்யவாப்தா**
**மத்தாஸ்த்வாம் விஸ்மரந்த: ப்ரஸஜதி**
**பதனே யாந்த்யனந்தான் விஷாதான்** ॥3॥

| | | |
|---|---|---|
| ஏவம் நிகில க்லேஶ ஹாநே: | - | இவ்வாறு ஸமஸ்த துக்கங்களும் நிவிருத்தியாவதற்கு |
| உபாய: த்வத் ப்ராப்தித: | - | ஒருபாயமானது தங்களையடைவதைத் தவிர |
| அன்ய: நஹி கலு | - | வேறொன்றில்லையல்லவா. |
| அகதஷாட்குண்ய: ஷட்கர்ம யோகா: | - | ஆயுர்வேதத்தில் கூறப்பட்ட மருந்துகள், நீதிசாஸ்திரத்திலுள்ள ஸந்தி முதலிய ஆறுபாயங்கள், தர்மசாஸ்திரத்தில் கூறிய யஜனம் முதலிய ஆறு கர்மங்கள், வேதங்களில் கூறப்பட்ட மற்ற யோகங்கள் இவைகள் |
| ஏகாந்தாத்யந்திகா: ந | - | துக்கத்தை முற்றிலும் நாசஞ்செய்யவாவது, திரும்பவும் வராமல் தடுக்கவாவது, சக்தியற்றவையன்று. |
| தே க்ருஷிவத் | - | அவை கிருஷி (வ்யவஸாயம்) போன்றவை. |
| நிகமபதா: அபி | - | வேதமார்க்கங்களும் |
| துர்வை கல்யை: | - | விலக்கமுடியாத திரவ்யம், காலம், கர்த்தர் இவைகளின் குறைகளால் |
| அகல்யா: | - | அனுஷ்டிக்க முடியாதவையாக இருக்கின்றன. |
| தத்பலானி | - | அந்தக் கர்மபலங்களை |
| அவாப்த: அபி | - | கஷ்டப்பட்டு அடைந்தவர்கள் கூட |
| மத்தா: த்வாம் விஸ்மரந்த: | - | மதமடைந்தவர்களாய் தங்களை மறந்தவர்களாக |
| பதனே ப்ரஸஜதி | - | கீழே விழுதல் ஏற்படும்பொழுது |
| அனந்தான் விஷாதான் யாந்தி | - | முடிவற்ற வருத்தங்களை அடைகிறார்கள். |

त्वल्लोकादन्यलोकः क्वनु भयरहितो यत्परार्धद्वयान्ते
त्वद्भीतस्सत्यलोकेऽपि न सुखवसतिः पद्मभूः पद्मनाभ ।
एवम्भावे त्वधर्मार्जितबहुतमसां का कथा नारकाणां
तन्मे त्वं छिन्धि बन्धं वरद कृपणबन्धो कृपापूरसिन्धो ॥ ४ ॥

த்வல்லோகாதன்ய லோக: க்வனு
பயரஹிதோ யத்பரார்த்தத்வயாந்தே
த்வத்பீத: ஸத்யலோகேऽபி ந
ஸுகவஸதி: பத்மபூ: பத்மநாப ।
ஏவம் பாவே த்வதர்மார்ஜித பஹு
தமஸாம் கா கதா நாரகாணாம்
தன்மே த்வம் ச்சிந்தி பந்தம் வரத-
க்ருபண பந்தோ க்ருபாபூர ஸிந்தோ ॥4॥

| | | |
|---|---|---|
| பத்மநாப | - | ஹே பத்மநாப! |
| த்வல்லோகாத் | - | தங்களது வைகுண்ட லோகத்தைத் தவிர |
| பயரஹித: அன்யலோக: | - | பயமற்றதான வேறொரு லோகம் |
| க்வனு | - | எங்கிருக்கின்றது? |
| யத் பத்ம பூ: | - | ஏனென்றால் பிரம்மதேவர் |
| பரார்த த்வயாந்தே | - | இரண்டு பரார்த்தங்களின் முடிவில் |
| த்வத்பீத: | - | தங்களிடமிருந்து பயந்தவராக |
| ஸத்யலோகே அபி | - | சத்தியலோகத்திலுங்கூட |
| ந ஸுகவஸதி: | - | சுகமாக வாழ்வதில்லை. |
| ஏவம் பாவே | - | இதிவ்விதமிருக்க |
| அதர்மார்ஜித பஹுதமஸாம் | - | அதர்மத்தினால் சம்பாதிக்கப்பட்ட பல பாபங்களையுடைய |
| நாரகாணாம் | - | நரகவாசிகளுடைய |
| கதா து கா | - | கதையோ என்னவென்று சொல்லுவேன். |
| வரத க்ருபண பந்தோ | - | வரங்களையளிப்பவரும் ஏழைகளின் பந்துவுமான |
| க்ருபாபூரஸிந்தோ தத் த்வம் | - | ஹே கருணைக்கடலே! ஆகையால் தாங்கள் |
| மே பந்தம் சிந்தி | - | எனது சரீரபந்தத்தை அகற்றுவீர்களாக. |

याथार्थ्यात्त्वन्मयस्यैव हि मम न विभो वस्तुतो बन्धमोक्षौ
मायाविद्यातनुभ्यां तव तु विरचितौ स्वप्नबोधोपमौ तौ ।
बद्धे जीवद्विमुक्तिं गतवति च भिदा तावती तावदेको
भुङ्क्ते देहद्रुमस्थो विषयफलरसान्नापरो निर्व्यथात्मा ॥ ५ ॥

யாதார்த்யாத் த்வன்மயஸ்யைவ ஹி
மம ந விபோ வஸ்துதோ பந்தமோக்ஷெள
மாயா வித்யா தனுப்ப்யாம் தவ து விரசிதௌ
ஸ்வப்னபோதோபமௌ தௌ ।
பத்தே ஜீவத்விமுக்திம் கதவதி ச
பிதா தாவதீ தாவதேகோ
புங்க்தே தேஹத்ருமஸ்த்தோ விஷய பலரஸாந்
நாபரோ நிர்வ்யதாத்மா ॥5॥

| | | |
|---|---|---|
| விபோ யாதார்த்யாத் | - | ஹே பிரபுவே! உண்மையாக |
| த்வன் மயஸ்ய ஏவ ஹி மம | - | .தாங்களாகவே இருக்கும் எனக்கு |
| வஸ்துத: பந்த மோக்ஷெள ந | - | வாஸ்தவமாக பந்தமும் மோக்ஷமும் இல்லை. |
| து தெள | - | ஆனால் அவைகள் |
| தவ மாயாவித்யா தநுப்யாம் | - | தங்களுடைய மாயையாலும் வித்தையாலும் |
| விரசிதெள | - | முறையே செய்யப்பட்டவையும் |
| ஸ்வப்ன போதோ பமெள தெள | - | ஸ்வப்பனாவஸ்தைக்கும் ஜாக்கிரத -வஸ்தைக்கும் ஒப்பானவைகளு -மாகின்றன |
| பத்தே | - | பத்தனிடத்திலும் (சம்சாரியிடத்திலும்) |
| ஜீவத் விமுக்திம் கதவதி ச | - | ஜீவன் முக்தியடைந்தவனிடத்திலும் |
| பிதா தாவதீ தாவத் | - | வேற்றுமையென்பது அவ்வளவுதான்: |
| ஏக: தேஹத்ருமஸ்த: | - | ஒருவன் (பக்தன்) சரீரமாகிற மரத்திலிருந்துகொண்டு |
| விஷய பலரஸான் | - | விஷயங்களாகிற பழங்களுடைய ரஸங்களை |
| புங்க்தே | - | அனுபவிக்கின்றான். |
| நிர்வ்ய தாத்மா அபர: | - | வருத்தமற்றவனான மற்றவன் (ஜீவன்முக்தன்) |
| ந | - | விஷயரசங்களை அனுபவிப்பதில்லை. |

जीवन्मुक्तत्वमेवंविधमिति वचसा किं फलं दूरदूरे
तन्नामाशुद्धबुद्धेर्न च लघु मनसः शोधनं भक्तितोऽन्यत् ।
तन्मे विष्णो कृषीष्टास्त्वयि कृतसकलप्रार्पणं भक्तिभारं
येन स्यां मङ्क्षु किञ्चिद्गुरुवचनमिलत्त्वत्प्रबोधस्त्वदात्मा ॥ ६ ॥

ஜீவன்முக்தத்வ மேவம் விதமிதி
வசஸா கிம் பலம் தூரதூரே
தந்நாமாஶுத்தபுத்தேர் ந ச லகு மனஸ:
ஶோதனம் பக்திதோऽன்யத் ।
தன்மே விஷ்ணோ க்ருஷீஷ்டாஸ்த்வயி
க்ருதஸகலப்ரார்ப்பணம் பக்திபாரம்
யேன ஸ்யாம் மங்க்ஷு கிஞ்சித் குருவசன-
மிலத் த்வத்ப்ரபோதஸ் த்வதாத்மா ॥ 6 ॥

| | | |
|---|---|---|
| ஜீவன் முக்தஸ்த்வம் ஏவம் விதம் | - | ஜீவன் முக்தனின் நிலை இப்படிப்பட்டது |

| | |
|---|---|
| இதி வசஸா கிம் பலம் | - என்று சொல்லுவதால் மட்டும் என்ன பிரயோஜனம்? |
| அசுத்த புத்தே: | - அந்தக்கரணசுத்தியில்லாதவனுக்கு |
| தத் | - அந்த ஜீவன்முக்தனின் நிலை |
| தூரதூரே நாம | - வெகு தூரத்திலிருக்கிறதென்று பிரசித்தம் |
| மனஸ: லகு சோதனம் | - மனதை எளிதாக சோதனஞ்செய்வது |
| பக்தித: அன்யத் ந ச | - பக்தியைத் தவிர வேறொன்று இல்லவேயில்லை |
| தத் விஷ்ணோ மே | ஆகையால் ஹே கிருஷ்ணா! எனக்கு |
| த்வயி க்ருதஸகல பரார்பணம் | - தங்களிடத்தில் செய்யப்பட்ட எல்லாவற்றின் சமர்ப்பணத்தையுடைய |
| பக்தி பாரம் க்ருஷீஷ்டா: | - திடமான பக்தியை உண்டுபண்ணுவீராக. |
| யேன மங்க்ஷு கிஞ்சித் குருவசன மிலத்வத் ப்ரபோத: | - அந்த திடமான பக்தியால் விரைவாக ஸ்வல்பமான குருபதேசத்தைக்கொண்டே பிரம்மஞானத்தையடைந்தவனாக |
| த்வதாத்மா ஸ்யாம் | - தாங்களாகவே (முக்தனாக) நான் பவிப்பேனாக. |

शब्दब्रह्मण्यपीह प्रयतितमनसस्त्वां न जानन्ति केचित्
कष्टं वन्ध्यश्रमास्तेचिरतरमिहगाभिप्रते निष्प्रसूतिम्
यस्यां विश्वाभिरामाः सकलमलहरा दिव्यलीलावताराः
सच्चित्सान्द्रं च रूपं तव न निगदितं तां न वाचं भ्रियासम् ॥७॥

ஶப்தப்ரஹ்மண்யபீஹ ப்ரயதித
மனஸஸ்த்வாம் ந ஜானந்தி கேசித்
கஷ்டம் வந்த்யஶ்ரமாஸ்தே சிரதரமிஹகாம்
பிப்ரதே நிஷ்ப்ரஸூதிம் ।
யஸ்யாம் விஶ்வாபிராமா: ஸகல-
மலஹரா திவ்யலீலாவதாரா:
ஸச்சித்ஸாந்த்ரஞ் ச ரூபம் தவ ந நிகதிதம்
தாம் ந வாசம் ப்ரியாஸம் ॥ 7 ॥

| | |
|---|---|
| இஹ கேசித் ஶப்த ப்ரம்ஹணி | - இவ்வுலகில் சிலர் ஸாங்கமான வேதத்தில் |
| ப்ரயதித மனஸ: அபி | - மிகப் பிரயத்தனித்த மனதை யுடையவர்களாக இருந்தும் |
| த்வாம் ந ஜானந்தி | - தங்களையறிவதில்லை |
| கஷ்டம் | - அது மிகக் கஷ்டம். |
| வந்த்ய ஶ்ரமா: தே இஹ | - வீணான சிரமத்தையுடைய அவர்கள் இவ்வுலகில் |
| நிஷ்ப்ர ஸூதிம் | - கன்றுபோடாத (பக்திஞானங்களை உண்டுபண்ணாத) |

